**பிள்ளையார்பட்டி ஹீரோவான ஸ்ரீ கற்பக விநாயகருக்கு விநாயகர் சதுர்த்தியன்று சந்தனக் காப்பு அலங்காரம் செய்து படைக்கப்படும் 'முக்குருணி அரிசி மோதகம்' பற்றிய ஸ்பெஷல் ரிப்போர்ட்:**





# மெகா கொழுக்கட்டை!

பச்சரிசி மாவு, பாசிப்பருப்பு, கடலைப் பருப்பு, வெல்லம், ஏலக்காய், தேங்காய் சேர்த்து மொத்தம் 18 படியளவு கொண்ட கொழுக்கட்டை மாவை வெள்ளைத் துணிப் பைக்குள் வைத்துக் கட்டி மூங்கில் கூடையில் வைக்கிறார்கள்.

எட்டாம் திருநாள் மாலை சிறப்புப் பூஜைகள் செய்து உரிகட்டி, அந்த மூங்கில் கூடையைத் தொங்கவிடுவார்கள். அந்த மூங்கில் கூடைக்கு அடியில், பெரிய அண்டாவில் தண்ணீர் ஊற்றி கொதிக்க விட்டு நீராவியில் மோதகத்தை வேக வைப்பார்கள்.

விநாயகர் சதுர்த்தியன்று காலை வரை அந்த மோதகம் நீராவியில் தொடர்ச்சியாக வேக வைக்கப்படும். மோதகம் வேகவைக்கப்படும் இரண்டு நாட்களும் சுழற்சி முறையில் ஒரு மணி நேரத்திற்கு ஒருமுறை ஒரு குடம் தண்ணீரை அண்டாவில் ஊற்றிக் கொண்டிருப்பார்கள்.

சதுர்த்தியன்று, மூங்கில் கூடையை அப்படியே இறக்கி நான்கு பேர் சுமந்து செல்வார்கள். மூங்கில் கூடையில் வைத்தபடி அந்த 'முக்குருணி அரிசி மோதகம்' கற்பகப் பிள்ளையாருக்கு நைவேத்யம் செய்யப்படுகிறது.

**- கி. சிங்காரவடிவேல்**

படம்:
அன்பு போட்டோஸ்

**கல்கி இண்டர்நெட் முகவரி : www.kalkiweekly.com ஈ மெயில் : kalkiweekly@vsnl.com**

செஸ் விஜயலட்சுமிக்கும், பாபு கிருஷ்ணராவ் வெங்கடேஷ் பிரசாத்துக்கும் (அட, நம்ம பிரசாத்தாங்க!) அர்ஜுனா விருதை அறிவித்திருக்கிறது மத்திய அரசு.

"மூணு வருஷத்துக்கு முன்னாலயே இந்த



விருதை எதிர்பார்த்தேன். லேட்டா கிடைச்சாலும் விருது விருதுதானே... ரொம்ப சந்தோஷமா இருக்கு" என்றார் விஜயலட்சுமி, சுருண்டு விழுந்த தலைமுடியைக் கோதிய படி.

"செஸ்ல சாதிக்க வேண்டியது நிறைய இருக்கு. இதுவரை பண்ணினதெல்லாம் ஒண்ணுமில்லே. இந்த விருதுகூட என்னுடைய, கடுமையான நீண்ட நாள் உழைப்புக்குக் கிடைத்த அங்கீகாரம்தான். இன்னும் நிறைய சாதிக்கணுங்கற ஒரு உத்வேகத்தை, இந்த விருது தந்திருக்கு. கண்டிப்பா சாதிப்பேன்கற நம்பிக்கையும் இருக்கு" என்று சொல்லும் விஜயலட்சுமி தொலைதூர கல்வியில் முதுகலை ஆங்கில இலக்கியம் படித்துக் கொண்டிருக்கிறார்.

இவருக்கும், இவர் தங்கை மீனாட்சிக்கும் தந்தை சுப்பாராவ்தான் செஸ் குரு.

"இந்த விருது மகிழ்ச்சியானது. என் கவலையெல்லாம் மக்களிடம் விளையாட்டுப் பற்றிய விழிப்புணர்வு இல்லைங்கறது தான். விளையாட்டுப் பற்றி, ஏன், எதுபற்றியும் மக்களிடம் விழிப்புணர்வு இல்லை. டி.வி.யைப் போட்டால் வன்முறை போன்ற செய்திகள்தான் கண்ணில் படுது. இது மாறணும்னா விளையாட்டை என்கரேஜ்

பண்ணணும். சினிமாவிலயும் டி.வி. தொடர்லயும் மூழ்கிட்டிருக்கற மக்களையும், இளைஞர்களையும் இந்தப் பக்கம் திருப்பினால், நிச்சயம் வன்முறை போன்ற சம்பவங்கள் நடக்கவே வாய்ப்பில்லை" என்று சின்ன லெக்சர் அடித்தார்.

சரி, மீனாட்சி என்ன செய்கிறார்?

பி.பி.ஏ, முதல் வகுப்பில் பாஸ் செய்திருக்கிறாராம்! நேஷனல் லெவல் செஸ் டோர்னமெண்டுக்குத் தயாராகிக் கொண்டிருந்தவர், பேச நேரமின்றி ராஜாவையும் ராணியையும் உண்டு இல்லையென்று கலக்கிக் கொண்டிருந்தார். அவரைத் தொந்தரவு செய்ய வேண்டாமே என்று அகன்றோம், வாழ்த்திவிட்டு.

**உ**ழைப்பையும் திறமையையும் மட்டுமே கொண்டு முன்னணிக்கு வந்த கிரிக்கெட் வீரர்களில் பிரசாத்தும் ஒருவர்.

"பள்ளி நாட்களில் நான் ஹாக்கிதான் ஆடிட்டிருந்தேன். அந்தச் சூழ்நிலைல கிரிக்கெட் என் தகுதிக்குக் காஸ்ட்லியான விளையாட்டு. இருந்தாலும் மனசு முழுக்க கிரிக்கெட்தான் அப்பிக் கிடந்தது. பிறகு என் உயரத்தைப் பார்த்து அப்பா கூடைப்பந்து ஆடச் சொன்னார். மனசுக்குள் கிரிக்கெட் இருக்கும்போது, மத்த விளையாட்டுல கவனம் செலுத்த முடியுமா? வேகப்பந்து வீச்சைக் காதலிச்சேன். முழுசா கிரிக்கெட்டுக்கு வந்துட்டேன்" என்று சொல்லும் பிரசாத், 1993-ம் ஆண்டில் கேரளாவுக்கு எதிரான ரஞ்சிப் போட்டியில் பத்து விக்கெட்டை வீழ்த்தியதுதான் தேசிய அணியில் தாம் இடம் பெற காரணம் என்கிறார்.

வேகப்பந்து ஹீரோவான டென்னிஸ் லில்லி, 'நிலைமையறிந்து பந்து வீசுபவர்' என்று புகழ்ந்திருக்கிறார் இவரை.

" 'எம்.ஆர்.எஃப்'பில் எனக்குப் பயிற்சியளித்தவர் அவர். பந்து வீசசில் பல நுணுக்கமான, விஷயங்களை நான் உணர, அவர்தான் காரணம். என்னை முழுமையான பந்து வீச்சாளனாக்கிய பெருமையும் அவருக்கு உண்டு" என்கிறார்.

வெளிநாட்டு பிட்ச்சுகளில் கலக்கும் இந்திய பந்து வீச்சாளர்களில் பிரசாத்துக்கு முக்கிய இடம் உண்டு.

"ஆமாம், 1996-ம் ஆண்டு லார்ட்ஸ் மைதானத்தில் இங்கிலாந்துக்கு எதிரான மூணு டெஸ்ட் போட்டிகள்ல பதினைந்து விக்கெட் எடுத்தது, என்னைப் பொறுத்தவரை சந்தோஷமான தருணம். எந்த ஆட்டக்காரரும் லார்ட்ஸில் ஆடறதைச் சிறப்பாகத்தான் நினைக்க முடியும். அந்த வகையில் நான் ரொம்ப மகிழ்ச்சி அடைந்தேன்" என்று சொல்லும் பிரசாத், காதலித்துத் திருமணம் செய்து கொண்டவர்.

"டைடனில் அனில்கும்ளே வேலை பார்த்துக் கொண்டிருந்தார். அப்போ அவரைப் பார்க்கப் போவேன். அங்க வேலை பார்த்துட்டிருந்த ஜெயந்தி, என்னை அறிமுகப்படுத்தச் சொல்லி அனில்கிட்ட சொல்லியிருக்காங்க. அப்புறம் அடிக்கடிப் பேசினோம், சந்திச்சோம். நிறைய உதவிகள் செய்து ஜெயந்தி என்னை ஊக்கப்படுத்தினாங்க. அப்புறம் கல்யாணம்தான்" என்கிற இவருக்குப் 'ப்ரித்வி' என்ற மகனும் உண்டு.

# லேட்டானாலும் விருது விருதுதானே!"



"ப்ருத்திவின்னா பூமி, பூமின்னா உலகம். எங்களுக்கு உலகமே அவன்தான்!"

அட நல்லா பேசறாருப்பா!

— அப்பு

தினமும் உண்டு,
உடுத்து, உறங்கி எழும்
உலகத்திலிருந்து மாறுபட்டு
கற்பனையும் கலையும்
கலந்த உலகில் ஒரு மாறு
தலுக்குச் சஞ்சரிப்பதென்பது
தனி சுகம்; அந்த சுகானுபவம்
சில புண்ணியப்பட்ட மும்
பைக்காரர்களுக்கென்று, இந்த
வார முழுவதும் அபரிமித
மாகக் கிட்டியது. ஆம்... இது
லக்மே இந்தியாவின் 'ஃபாஷன்
வாாாாரம்!'

அழகும் கவர்ச்சியும்
கைகோத்து கலக்கின; கலகலப்பு
ஊற்றாய்ப் பெருக்கெடுத்து பள
பளப்பாற்றில் சங்கமித்தது; வெளி
யிலிருந்த சிலீர் தூறல் உள்ளே
யிருந்த பளீர் மின்னலுக்கு ஜிலு
ஜிலுப்பான பின்னணி அமைத்தது.

44 இந்திய டிசைனர்களின்
உழைப்பு, எண்ணற்ற மாடல்களில்
பிரதிபலித்து, உள்ளூர் ப்ளஸ் வெளி
யூரிலிருந்து வந்திருந்த சுமார் 15,000
(மீடியா, செலிப்ரிட்டிகள்,
வாங்குவோர், விற்
போர்) பேரின் கண்
ணையும் கருத்தையும்
வியாபித்தது.









'ஃபாஷன்
பேபி சென்ற ஆண்டு
டில்லியில் முதன்முதலாக
குவா குவா' என்றபோது
இருந்த பரவசம், இவ்
வாண்டு மும்பையில்
ஓராண்டு நிறைந்தபோது
இல்லை என்றாலும், பர
பரப்புக்குக் குறைவில்லை.
தவழும் நிலையிலிருக்கும் இக்
குழந்தை, அமர்ந்து, எழுந்து,
நடந்து, ஓட்டம் பிடிக்க குறைந்
தது ஐந்தாண்டுகளாவது ஆகும்.
அதுவரை அதைப் போஷாக்
குடன் பேணி வளர்க்கும்
பொறுப்பை தாயான 'FDCI (Fash-
ion Design Council of India)' செவிலி
களான 'லக்மே' சன் சில்க் நிறுவ
னங்களிடம் ஒப்
படைத்




# 20000 ரூபாய் குர்தா!

இருக்கிறது. உப செவிலிகளாக தாஜ், கிங் ஃபிஷர், ஃபியட், 'வி' சானல், சஹாரா, காதே பசிஃபிக் எல்லாமே கை கொடுத்தன. ஆனால் தன் குழந்தை, உலக அரங்கில் பெயர் பெற வேண்டும் என்ற பேரார்வத்தில், இந்தியத் தன்மை கொஞ்சமும் லண்டன், பாரீஸ், மிலான், லாஸ் ஏஞ்சல்ஸ்தனம் நிறையவும் சேர்த்து, 'ஃபாஷன்' பேபியை 'ஃபூஷன் பேபி'யாக்கி விட்டார்கள்.

ஏராளமான பார்வையாளர்களில், லண்டனிலிருந்து வந்திருந்த பிரபல 'யெல்ஃப்ரிட்ஜஸ்' கம்பெனியின் 'பையிங் மானேஜரான' ரிச்சர்ட் லான்டர்ஸன் சொல்வது போல்,

'செர் ப்ளேர்' போன்றவர்கள் நம் டிசைனர்களின் ஆடைகளை விரும்பி அணிய ஆரம்பித்ததிலிருந்து, அங்கே இதற்கு மவுசு கூடியிருக்கிறது. மேலும் கறுப்பு வெள்ளை மட்டுமே தெரிந்த அவர்கள் கண்களுக்கு, நமது வர்ண ஜாலங்கள் வண்ணக் கோலமிடுகின்றன. இயற்கை நூலிழைகளும், ஆடை மீது செய்யும் நுண்ணிய வேலைப்பாடுகளும் அவர்களைக் கவர்ந்திழுக்கின்றன. ஆனால் நமக்கு 'விற்கத் தெரியவில்லை' என்கிறார் அவர். அதில் ப்ரொஃபஷனலிஸம் தேவையாம். தரத்திலும் அதிக கவனம் செலுத்த வேண்டுமென்கிறார்.

அவர் பார்வை எப்படியோ இருந்து விட்டுப் போகட்டும்; நம் பார்வையில் பட்டதைச் சொல்கிறோம், சும்மா சொல்லக் கூடாது – சூப்பர் ஏற்பாடுகள். அழைப்பிதழும், அடையாள அட்டையுமின்றி ஒரு ஈ எறும்புகூட, ஷோ நடக்கும் 'தாஜ்'ஜின் முதல் மாடியின் முதல் படியில்கூட காலை வைக்க முடியாது. அவ்வளவு செக்யூரிட்டி! மீடியாவுக்கென – கம்ப்யூட்டர்கள், ஃபாக்ஸ், தொலைபேசி சகல வசதியும் செய்து தந்திருந்தார்கள். ஆங்கில மீடியாக்காரிகள் பலர் மாடல்களைப் போல் இருந்தார்கள். இந்தி மராத்தியிலிருந்து முதல் நாள் சல்வாரில் வந்திருந்த சிலர், மறுநாள் பாண்ட்டுக்கு மாறினார்கள்! மேலை நாட்டவர்களோ மாடல் யார், ஜர்னலிஸ்ட் யார், போட்டோகிராஃபர் யார், மேக்–அப் ஆர்டிஸ்ட் யார் என்று தெரியாமல், இருக்கும் சின்ன மனைசை யாரிடம் பறி கொடுப்பது எனத் திண்டாடினார்கள்! ஆண்கள் சொற்பமே – அதுவும் மொட்டைத் தலையரோ சொட்டைத் தலையரோதான் (அதுதாங்க ஃபாஷன்!). காமிரா, வீடியோக்காரர்கள்தான் இந்தியத்தனமாய்த் தெரிந்தனர் (நம்மையும் சேர்த்து...)

தினம் நான்கு வீதம் மொத்தம் 27 ஷோக்கள். தவிர, ஃபாஷன் சம்பந்தமான ஸெமினார்கள், வர்க் ஷாப்புகள் எல்லாம் உண்டு!

எக்ஸிபிஷன் ஏரியாவில் எல்லா டிசைனர்களும் தங்கள் ஸ்டால்களை வைத்து, தத்தம் படைப்புகளைக் கண்காட்சியாக்கியிருந்தார்கள். 'ஷோ'வுக்கென்று 'Pret' வகைகள் (அதாவது சாமானியர் உபயோகிக்கக்கூடிய ரூ. 600 – ரூ 10,000/- ரகங்கள்) 'Couture' வகைகள் (ராஜா ராணி டைப்) எனப் பிரித்திருந்தார்கள்.

**"நம்ம பையனை அரசியலில் அதிக ஆர்வம் காட்டச் சொல்லாதீங்க!"**

**"ஏன் கனகா?"**

**"தன்னை பெயிலாக்கினது சரியான்னு கேட்டு மற்ற பள்ளி மாணவர்களுக்குக் கடிதம் எழுதியிருக்கான்."**

**– புளியரை கணேசன்**

ஒரு ரவுண்டடித்து, இந்தியத்தனமாகப் பட்ட சில உடைகளின் விலையைக் கேட்ட போதுதான் தெரிந்தது, அந்த 'Pret' ஃபாரின் சாமானியர்களுக்கென்று! மோனோபலி ஸ்டாலில், சுமாரான அழகுடனிருந்த ஒரு ஸல்வாரைச் சுட்டியபோது, ஸ்டால் அம்மணி '7000/-' என்றார் பவ்யமாக. அதன் பிறகு லேடீஸ் உடைகளை விட்டு விட்டு ஆண்களுக்கான உடைகளிலிருந்த ஸ்டாலில் கண்ணோட்டினோம். தருண் தஹிலானியின் குர்த்தாக்கள் கண்ணைக் கவர, கருத்தையும் கவர்ந்த ஒரு பீஸின் விலையைக் கேட்டால், "ஒன்லி ட்வென்ட்டி தௌஸண்ட் ருபீஸ்!" என்றார்கள். அதன் பிறகு, 'பார்வை ஒன்றே போதுமே' என்றிருந்து விட்டோம்.

இதுவன்றியும், ப்யூட்டி ஸலூன் (இப்போ பார்லர் ஃபேஷனில்லீங்க) ஒன்றிருந்தது. ஸன்ஸில்க்காரர்கள் பிரத்யேக ஹேர் ஸ்டைலிஸ்டுகளாக, அமெரிக்காவிலிருந்து 'நீகோ'வையும், தில்லியிலிருந்து 'ஜாவேத்'தையும் வரவழைத்து, தலை முடியில் வித்தை காட்டினார்கள். லாக்மேக்காரர்கள், நகக்கலை நிபுணர் ரோஸியான் லிங்கன்டனையும், மேக்அப் ஆர்டிஸ்ட் எலிசபெத்தையும் அமெரிக்காவிலிருந்து இறக்குமதித்திருந்தார்கள். ஒருநாள் விட்டு ஒருநாள், மாலை 5 மணியளவில், 'டைம்லெஸ் ப்யூட்டி' என்று, கௌதம் ராஜ்யதக்ஷா எடுத்திருந்த புகைப்படங்களை, சம்பந்தப்பட்ட செலிப்ரிட்டிகளே வந்து திறந்து வைத்தனர். ஜெயா பச்சன், கரீனா கபூர், ரேகா போன்ற தாரகைகள் வந்து, பட்டாம் பூச்சிகளாகப் படபடத்தனர்.

சரி... நீங்கள் எதிர்பார்த்துக் காத்துக் கொண்டிருக்கும் விஷயத்துக்கு வருவோம். ஃபாஷன் ஷோக்களில் இம்முறை சில 'டாப்' மாடல்கள் கலந்து கொள்ளவில்லை. (பணம்



குறைவாகக் கொடுத்தார்களாம்) ஒரு சில ஓஹோ... ஒரு சில ஓகே... சில பல சர்க்கஸில் வரும் பளபள பெண்கள் போல... வித வித ரகங்கள். ஆனாலும் அலை மோதல் அங்கே தான்.

கடைசி தின மனீஜ் மல்ஹோத்ரா 'ஷோ'வுக்கு, மீடியாவே நுழைய முடியாமல் அப்படி ஒரு கூட்டம்! சில நாட்களில் ஹ்ருத்திக் – அமீஷா – சூசேன், ப்ரீத்தி ஜிண்டா, ரேகா என்று வந்து பார்வையாளர்களை மாடல்களிடமிருந்து ஈர்த்தார்கள். 'ராக்கி. எஸ்.' ஷோவுக்கு வந்திருந்த ஹ்ருத்திக், 'ஹையோ.... என்னால இந்த உடைகளைப் போட முடியாதுப்பா.... எனக்கு அந்த 'பாடி' இல்லை!' என்று போட்டாரே ஒரு போடு! ப்ரீத்தி ஜிண்டா, "பியா பியா... ஜியா ஜியா" என்று குதிப்பதற்கு ஏற்ற ரகங்களைத் தேர்ந்தெடுத்திருக்கலாம்! ரேகா பார்த்த மீரா அண்ட் முஸாஃபர் அலி ஷோவில் பாவம்... எல்லாம் கறுப்பு – வெளுப்பு ஸல்வார் கமீஸ்கள். கலர்ஃபுல் ரேகா, ஷோ முடியு முன்பே ஓடி விட்டார்.

முதல்நாள் முதல் 'ஷோ'வுக்குப் பிள்ளையார் சுழி போட்டவர் அகி நெருலா.. 'கல்கி'யில் பிரசுரிக்க முடியாத சொற்களுடன் ஆரம்பித்த இசைப் பின்னணி ஓர் அதிர்ச்சி என்றால், குட்டியூண்டு வெள்ளை ஷார்ட்ஸும், சட்டையும், குறுக்காக ஒரு ஸ்ட்ராப்பும் போட்டுக் கொண்டு, கைவிரல்களை மைக்கேல் ஜாக்ஸன்தனமாக வைத்துக்கொண்டு, டயான்ட்ரா ஸோஅர்ஸ் தடபுடலாக வந்து ஒரு 'லுக்' விட்டார் பாருங்கள்... ஆடிப் போய்விட்டனர் ஆடியன்ஸ்! வரிசையாக, 'இல்லையோ' எனும் உடைகளில், 'பே வாட்ச்'தன 'போல்டு அண்ட் ப்யூட்டிஃபுல்' ரகங்கள். மாடல்கள் தலையில், கோரி வாரிலா (மேக்-அப்) ஆளுக்கொரு குருவியை விட்டு விட்டார் போலும். செமையாகக் கூடு கட்டியிருந்தது. ஒரு நீல ஸ்கர்ட்டின் மீதான மஞ்சள் ஜாக்கெட் உடையில் மேலை நாட்டவர் மோகித்தனர்.

மாடல்களும் அங்கே இங்கே நின்று நிதானித்து 'தரிசனம்' தந்தனர். 'ராம்ப்'புக்கு முன் நின்று, உன்மத்த நிலையில், கையைத் தட்டோ தட்டென்று தட்டிக் கொண்டிருந்தார் ஒரு மொட்டைத் தலையர். கடைசியில் பார்த்தால் அவர்தான் அகி நெருலா! தொடர்ந்து சாவியோ ஜானின் கலெக்ஷன்கள். பெரும்பாலும் வெண்மை... ஆண் மாடல்கள் வேறு... டல்லடித்தன; அப்புறம் கொஞ்சம் வயலட் பூக்கள் போட்ட ஷர்ட்டுகளில் வந்து ஆடியன்சை உசுப்பி விட்டனர். கடைசியில் வந்த பெண்கள் மடோனாத்தனமான உடைகளில் அசத்தினர்.

முக்கால்வாசியும் ஆங்கில இசைதான் முக்கி முனகி எப்போதோ இந்திய ஒளி சிகல் எட்டிப் பார்த்தது. கோரியோகிராஃபர்களுக்கு அதிக வேலை வைக்காத சாதாரண பூனை நடைதான். மாடல்களெல்லாம் கண்ட கண்ட இடங்களில் பச்சை குத்திக் கொண்டு, கையில் பூ சுற்றி இருந்தார்கள். ஒன்றிரண்டு மாடல்களே நம்மைப் போல் புடைவை உடுத்தியிருந்தனர். பளபளப்பான ஜரிகைச் சேலைகளின் தலைப்பை பெரும்பாலும் கழுத்திலோ, முதுகிலோ, இடுப்பிலோ சுற்றியிருந்தவர்கள்தான் ஏராளம். ஆனால் மேலை நாட்டவரெல்லாம், நம் இந்தியத்தனமான உடைகளுக்குத்தான் (உடலைப் போர்த்திய ரகங்களுக்கு) கையைத் தட்டினார்கள்.

எல்லா டிசைனர்களும் நிறைய 'என்கொயரி' வந்ததென்றார்கள். அவை பிஸினஸாக உருவெடுக்குமா என்பதைப் பொறுத்திருந்துதான் பார்க்க வேண்டும். டில்லியில் ஃபாஷன் ப்ரியர்கள், மும்பையில் பிஸினஸ் விரும்பிகளாயிற்றே! ஃபாஷன் வியாபாரம் எப்படி இருந்தாலும், ஃபாஷன் பற்றி ஒன்று உறுதியாகச் சொல்ல முடியும்:

ஆடையில்லாத ஆதிமனிதன், நாகரிகம் என நினைத்துக் கொஞ்சம் கொஞ்சமாக தன்னை மூடிக் கொண்டான். இப்போது ரிவர்ஸ் கியரில் நாகரிகம் திரும்பியிருக்கிறது. அடுத்த ஃபாஷன் ஷோவில் ஆதி மனிதன் திரும்பி விடலாம்!

— ஜெயஸ்ரீ ராஜ்

# 'அன்புள்ள

பொதுவாக மணிரத்னத்தின் பட்டறையிலிருந்து வெளிவரும் தயாரிப்புகளின் தலைப்பைப் பார்த்து எந்த முடிவுக்கும் வர முடியாதுதான். ஆனால் 'அன்புள்ள சிநேகிதியே' டீ.வி. தொடரின் டைட்டிலைப் பார்த்தாலே நட்பு மணம் வீசும் கதை என சர்வ நிச்சயமாய்த் தெரிந்துவிடுகிறது.

"உயிர்த் தோழிகளின் கதைதான் (இன்னொரு உ.பி.ச?). ஆனால் மூன்று தலைமுறை உறவுகளைச் சொல்லும் அருமையான கதை" என்கிறார் வி.ப்ரியா. மணிரத்னத்தின் சிஷ்யை.

உள்ளூர் கதைகளை உல்டா அடித்து, அரைத்த மாவையே மறுபடி கிரைண்டரில் ஆட்டிக் கொண்டிருப்பதை விட்டு, கதைக்காக கொஞ்சம் மெனக்கெட்டிருக்கிறார்கள்.

பிரபல வங்காளக் கதையைச் சுட்டு இலேசாக அய்யங்கார் பின்னணி மூலாம் பூசி, புதிய ட்ரீட்மெண்ட் தரப்பட்டிருக்கிறது.

"'சித்ரா பானர்ஜி திவாகருனி' என்ற அமெரிக்க வாழ் இந்தியப் பெண்மணி எழுதிய 'ஸிஸ்டர் ஆஃப் மை ஹார்ட்' என்கிற நாவலை சுஹாசினி படித்துவிட்டு ரொம்பவே இம்ப்ரெஸ் ஆகிவிட்டார். அதை என்னிடமும், அனுஹாசனிடமும் ஒரே சமயத்தில் கொடுத்துப் படிக்கச் சொன்னார்.

"'அஞ்சு' காரெக்டர் எனக்குப் பிடிச்சிருக்கு. அதை நான் பண்றேன்"னு அனு சொல்ல, "'சுதா' காரெக்டர் எனக்குப் பொருத்தமாயிருக்கும்"னு நான் சொல்ல, சுஹாசினிக்கு ஸ்வீட் சர்ப்ரைஸ்.

"சபாஷ், நான் நினைச்ச காரக்டர்களைத்தான் நீங்க ரெண்டு பேருமே செலக்ட் பண்ணியிருக்கீங்க' என்று பாராட்டினார் சுஹாசினி" என்றார் ஸ்வர்ணமால்யா.

ஸ்வர்ணமால்யா சந்தோஷப்பட்டுக் கொள்ளும் இன்னொரு சமாசாரம். 'அன்புள்ள சிநேகிதியே' டைட்டில் பாடலுக்கான, நடனத்தைத் தானே கொரியோகிராபி செய்து, ஆடியுமிருப்பது.

"சுஹாசினி மேடம் என்கிட்டே இந்த நாவலைக் கொடுத்துவிட்டு, 'இதுலே ஒரு மெகா சீரியலுக்கான அத்தனை அம்சங்களுமிருக்கு. நீ படிச்சுப்பாரு. இந்த சப்ஜெக்டை நீதான் டைரக்ட் பண்ணப் போறேன்'னு சொன்னாங்க. அவங்க அப்படி சொல்லிவிட்டு நகர்ந்ததும், நாவலை ஒரே மூச்சில் படித்துவிட்டேன். புத்தகத்தைக் கவிழ்த்து வைக்கும்போதே, எனக்குள் திரைக்கதை வடிவம் அமைந்துவிட்டது." பொதுவா, இந்தக் கதையை எந்தப் பெண் படிச்சாலும், அதுலே வர்ற சம்பவங்களில் அன்னியோன்யத்தை



• இயக்குனருடன், ஸ்வர்ணமால்யா, அனு



# சிநேகிதியே!'

உணர முடியும். 'அட, இந்த மாதிரியான அனுபவங்கள் எனக்கும் நேர்ந்திருக்கே. இந்த விஷயம் எனக்கு நடந்த மாதிரி இருக்கே. இந்த உணர்வை நானும் அனுபவிச்சிருக்கேனே'னு சொல்லத் தோணும்.

பெண்ணின் மன இயல்புகளை அவ்வளவு மென்மையா, யதார்த்தமா சித்திரிச்சிருக்கேன். இந்தத் தொடருக்கான திரைக்கதையை சுஹாசினியும் நானும் எழுதியிருக்கோம். வசனங்களை சுஜாதா விஜயராகவன் எழுதறாங்க. பாடல்களை கவிஞர் தாமரை எழுதியிருக்காங்க. பெண்கள் கூட்டணி பலமா இருக்கு சார்" என்றார் ப்ரியா.

'அன்புள்ள சிநேகிதியே' டி.வி. தொடரில் ஒரு புதிய பெண் குரலை அறிமுகப்படுத்தியிருக்கிறார்கள்.

"டைட்டில் பாடலுக்காக தினா ஏழெட்டு மெட்டுகள் போட்டுக் கொடுத்தார். அதிலே எங்க யூனிட் மொத்தமும் ரசிச்ச, முணுமுணுத்த ஒரு ட்யூனைத் தேர்வு செஞ்சோம். பாடல் வரிகள் ரொம்ப நல்லா இருந்ததால, அதை பாடறதுக்கும் ஒரு புத்தம் புதிய குரல் இருந்தா, ரொம்ப வசீகரமா இருக்கும்னு நினைச்சேன். அப்போ மணிரத்னம் சார், ஒரு கேஸட் கொடுத்தார். 'இதுல நியு வாய்ஸ் இருக்கு. ஏ.ஆர். ரஹ்மான், தன்னோட இசையமைப்புல அறிமுகப்படுத்தலாம்னு வைச்சிருக்கார். உனக்குப் பிடிச்சிருந்தா நீயே அறிமுகப்படுத்தலாம்'னு சொன்னார். குரலைக் கேட்டேன். சாக்லேட்ல தோய்ச்ச மாதிரி இருந்தது. 'சின்மயி'ங்கிற தெலுங்குப் பாடகி. பதினெட்டு வயசு இருக்கும். தூள் கிளப்பியிருக்காங்க" என்றார் பெருமையுடன்.

"சரி, சுஹாசினி, மனோரமா, சீமா.. எல்லாம் நடிக்கிறாங்களாமே! அவங்களோட காரக்டர்ஸ் பத்தி சொல்லுங்க" என்றால்...

"அது சஸ்பென்ஸ். மற்றவை சின்னத் திரையில்" சட்டென்று ரிசர்வ்டாகி விட்டார் ப்ரியா.

குருவுக்கு ஏற்ற மாணவி!

**- மடிப்பாக்கம் வெங்கட்**

அட்டைப்படம், படங்கள் : **யோகா**

# சர்ச்சையில் மாட்டிக் கொண்ட தி.மு.க!





● சர்ச்சைக்குள்ளான சிலுவை பேனரை வைத்தவர் பார்க்டவுன் பகுதி இளைஞரணி தோழர் தேவராசன். கடற்கரைக் கூட்ட மேடையிலேயே அது போன்ற விளம்பரம் கொடுத்ததற்காக பரிதி கலைஞரால் கடுமையாகக் கண்டிக்கப்பட்டாராம். உடனடியாக பேனர்களும் எடுக்கப்பட்டு விட்டன. ஆனால் சில பத்திரிகைகள் அந்தப் பேனரைப் படம் எடுத்துப் போட்டு சிறுபான்மையினருக்கு எதிராக தி.மு.கவைத் திருப்பும் வேலையில் ஈடுபட, 'தேவைதானா இந்த வம்பு' என்று உடன்பிறப்புகளை வறுத்து எடுத்துவிட்டார் கலைஞர். அ.இ.அ.தி.மு.கவும் இந்த விவகாரத்தை அரசியலாக்கும் நோக்கத்துடன் அந்தப் பேனர்களை ஆயிரக்கணக்கில் போஸ்டர்களாக அச்சடித்து 'ஆண்டவரை அரசியல் வாதிகளோடு ஒப்பிடுவதா?' என்று சிண்டு முடியும் வேலையில் இறங்கியிருக்கிறது. அந்த விளம்பரத்தை வாங்கி வெளியிட்டதற்காக, முரசொலி விளம்பர ஊழியருக்குத் தண்டனையாக ஒரு மாத சம்பளம் கட் என்று சொல்கிறார்கள்!

"கன்னிமேரியாக தம்மைக் காண்பித்துக் கொண்டவர் ஜெயலலிதா. ஒரு பக்கம் கோயில், கோயிலாகப் போவது, மற்றொரு பக்கம் கடவுளை மறுக்கும் தி.க. வீரமணியோடு அரசியல் கூட்டணி கொண்டிருப்பது என்று ஆத்திகர்கள், நாத்திகர்கள் ஆகிய இரு தரப்பினர் காதிலும் பூ சுற்றுகிறார். எங்களைக் குறை சொல்ல இவருக்குத் தகுதியில்லை. இவரது விஷமப் பிரசாரத்தை மக்கள் நம்ப மாட்டார்கள்" என்கிறார் சீனியர் தி.மு.க பிரமுகர் ஒருவர். ஏற்கனவே பா.ஜ.க கூட்டணியில் தி.மு.க இருப்பதால் பராமுகமாக இருக்கும் சிறுபான்மையோரை, மேலும் சூடேற்றும் முயற்சியில் இறங்கியிருக்கிறது அ.தி.மு.க தரப்பு.

● மத்திய அமைச்சர் முரளி மனோகர் ஜோஷி சென்னைக்கு வந்திருந்தபோது உடல்நிலை பாதிக்கப்பட்டு, ராமச்சந்திரா மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டிருந்தார் அல்லவா? அப்போது ஜெயலலிதா தன்னைப் பார்க்க வருவதாகச் செய்தி வந்ததும் கொஞ்சம் பதறிப் போய் விட்டார். தமிழக அரசியல் இப்போதுள்ள சூழ்நிலையில் என்.டி.ஏ.வுக்கு எதிரணியில் இருக்கும் ஜெ.வைச் சந்தித்தால் தம்மைச் சந்தேகிக்கும் வகையில் வதந்திகள் பரவி விடும் என்று பயந்து, இரண்டு மாநில பா.ஜ.க பிரமுகர்களை அந்தச் சமயத்தில் தன்னுடன் அறையில் இருக்கச் சொன்னாராம். அரசியல் ரீதியாகச் சில 'ஏற்பாடுகளை'ச் செய்யலாம் என்று ஆர்வத்துடன் போன ஜெ, ஜோஷியுடன் பா.ஜ.க பிரமுகர்கள் இருப்பதைப் பார்த்து நொந்து போய் ஏதும் பேசாமல் உடல்நிலை பற்றி மட்டும் விசாரித்துவிட்டுத் திரும்பி விட்டாராம். ஆனால் ஜோஷிக்கு முன்னாள் பா.ஜ.க.வும், இந்நாள் அ.இ.அ.தி.மு.க பிரமுகருமான டாக்டர் மைத்ரேயன் வீட்டிலிருந்து உணவு அனுப்பப்பட்டது என்றும் கிசுகிசுக்கப்படுகிறது.

● போதைப் பொருள் வழக்கில் சிக்கினால் ஜாமீன் கிடைப்பது மிகவும் கடினம் என்றாலும் மாஜி வளர்ப்பு மகன் சுதாகரனுக்கு வெளியில் வரும் வாய்ப்பு அதிகரித்திருப்பதாகச் சொல்கிறார்கள். இதற்குக் காரணம் தோழி, முதல்வருக்குக் கொடுக்கும் 'பிரஷர்'தானாம். அதனைத் தொடர்ந்து ஒரு சமரச திட்டத்துடன் போன முதல்வரின் தூதுவர்களிடம், ஜெ எதிர்பார்க்கும் சில தகவல்களைச் சொல்லி அனுப்பியிருக்கிறாராம் சுதாகரன்.

— சஞ்சயன்

ஏதோ எங்களால் ஆன உதவி!



2001 ஆகஸ்ட் 26
விஷு ஆவணி 10
மலர் : 60
இதழ் : 4

# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



## அபத்தப் பேரணிகள்; அபாயப் பேரணிகள்!

'மனப்புண்ணுக்கு மருந்துபோட வாருங்கள்' என்று கலைஞர் விடுத்த அழைப்பு, பலரை உடல் புண்ணுக்கு மருந்து தேட வைத்துவிட்டது! வேறு சிலரைப் பலிகொண்டே விட்டது!

தமிழக அரசு மற்றும் காவல்துறையின் அராஜகங்களை எதிர்க்க வேண்டும் என்று தி.மு.கவினர் எடுத்த முடிவைக் குறை கூறவே முடியாது. ஆனால், அதை இத்தகைய பேரணி மூலம் செய்ய வேண்டும் என்ற முடிவுதான் மிகத் தவறானது.

கட்சியின் பலத்தைக் கூட்டத்தின் மூலம் வெளிப்படுத்தலாம், நிரூபிக்கலாம் என்ற காலம் மலையேறிவிட்டது. எந்த கட்சியானாலும் கூலி கொடுத்து ஆள் சேர்ப்பது என்பது இன்றைய வழக்கமாகிவிட்டது. சேர்கிற கூட்டத்துக்கு ஏற்ப, சம்பந்தப்பட்ட கட்சிக்குத் தேர்தலில் வாக்குகள் பதிவாவதில்லை! சிறிய கட்சிகள், பெரிய கட்சிகள், நேற்று முளைத்த காளான் கட்சிகள் என்று பாகுபாடின்றி அனைத்துக் கட்சிகளின் நிலைமையும் இது விஷயத்தில் ஒன்றாகத்தான் இருக்கிறது.

இந்நிலையில், தமிழகத் தலைநகரை ஸ்தம்பிக்க வைக்கும் அளவுக்குக் கூட்டம் சேர்த்து ஒரு பேரணி நடத்திக் காட்ட வேண்டிய அவசியம் என்ன..?

தி.மு.க. தொண்டர்கள், கலைஞருக்கு நிகழ்ந்த அநீதி கண்டு ஏற்கெனவே கொந்தளித்துப் போயிருக்கிறார்கள். அப்படிப்பட்ட சமயத்தில், கலைஞர் தமக்கு ஏற்பட்ட காயங்களை விளம்பரப்படுத்துவதும் அக்காட்சியையே கவரொட்டியாக்கி அழைப்பு விடுப்பதும் உணர்ச்சிகளை




மேலும் தூண்டும் விதமாகத்தானே அமைய முடியும்!

'சட்டத்தை மீறுவோரை இரும்புக் கரம் கொண்டு ஒடுக்குங்கள்' என்று முதல்வர் காவல் துறையை உசுப்பிவிடுவதும் விபரீதமான விளைவுகளுக்குத்தானே வழிவகுக்கும்! ஏற்கெனவே முரட்டுத்தனத்துக்குப் பெயர்போனதாக விளங்கும் தமிழக காவல்துறை, மேலும் அடக்குமுறைகளைத் தானே கையாளத் தொடங்கும்!

இரு தரப்பினரும் உசுப்பிவிடப்பட்ட நிலையில் பல்லாயிரம் மக்கள் ஒன்று சேர்ந்து, உணர்வுகள் உச்சகட்டத்துக்குப் போய், காவல் துறையினரை ஆபாசச் சொற்களால் இழிவாகப் பேசியது எவ்வகையிலும் மன்னிக்கக் கூடியதல்ல.

இவ்வாறு உணர்ச்சி மேலிட்டு, கூட்டத்தினர் நெறிபிறழக்கூடும் என அரசியல் அனுபவம் வாய்ந்த தலைவர்கள் எதிர்பார்த்திருக்க வேண்டும். எச்சரிக்கையாய் இருந்திருக்க வேண்டும். பெரிய கூட்டத்தில் எப்போதுமே ஏற்படும் mob frenzy இந்தக் கூட்டத்தையும் பற்றிக் கொள்ளும் என்று கணக்கிட்டு, கூட்டத்தையே தவிர்த்திருக்க வேண்டும்.

இந்த தீர்க்கதரிசனம் படைத்த ஒருவர், ஊர்வலத்துக்குத் தடைகோர, நீதிமன்றம் தடைசெய்ய மறுத்திருக்கிறது. அவ்வாறு தடை செய்வது அடிப்படை உரிமைகளில் குறுக்கிடுவதாகும் என்று அறிவித்திருக்கிறது.

ஊர்வலம் நடத்துவது அடிப்படை உரிமை எனில், அதற்கு உரிய சில விதிகளைப் புதிதாக உருவாக்கி நெறிப்படுத்துதல் மிகவும் அவசியமாகிறது. கட்சியின் பலத்தைப் பொறுத்து ஊர்வலத்தில் பங்கேற்கக் கூடிய நபர்களின் எண்ணிக்கைக்கு உச்சவரம்பு வைக்க வேண்டும். போக்குவரத்துக்கும் அன்றாட வாழ்க்கைக்கும் எந்தவித பாதிப்பும் ஏற்படுத்தாமல் சிறிய அளவில்தான் ஊர்வலம் அமையலாம் என்று விதி ஏற்படுத்த வேண்டும். ஒருவரது அடிப்படை உரிமைப் பிரகடனம் மற்றவர்களுடைய அடிப்படை உரிமையைப் பாதிக்கக் கூடிய வகையில் அமைவது விசித்திரமான முரண்பாடு.

இந்த முரண்பாடு களையப்பட்டு, ஊர்வலம் அல்லது பேரணி என்பது கருத்துச் சுதந்தரத்துக்கு ஒரு வடிகாலே என்கிற நிலைக்கு மாற்றி அமைக்கப்பட வேண்டும். ஊர்வலம் சிறிதானாலும் முக்கியத்துவம் வாய்ந்ததெனில், அது வலியுறுத்தும் கருத்து மீடியா மூலமாக அனைத்து மக்களிடமும் பரவிவிடும்.




இத்தகைய மாற்றம் நிகழாது போனால், மீண்டும் மீண்டும் மெகா பேரணிகள் 'ஏற்பாடு' செய்யப்பட்டு மறுபடி மறுபடி அவை பொது மக்களுக்கு இடைஞ்சலையும் காவல் துறைக்குத் தலைவலியையும் சமூக விரோத சக்திகளுக்குத் தங்கள் 'வேலையைக் காட்ட' ஒரு சந்தர்ப்பத்தையும் ஏற்படுத்திக் கொடுத்த வண்ணம் இருக்கும்.

ஆகஸ்ட் 12 அன்று நடந்த பேரணியிலும் சமூக விரோதிகள் உட்புகுந்து கைவரிசையைக் காட்டியிருக்கிறார்கள். மேலும், கூட்டத்தின் வெறி உச்சத்தில் இருந்தது எனில், காவல் துறையினரின் நடத்தையும் கேள்விக்குரியதாகவே அமைந்தது. இவற்றுக்கிடையே சில பத்திரிகையாளர்கள் சிக்கிக் கொண்டு காயமடைந்தது வெறும் விபத்து அல்ல என்கிற அளவுக்குச் சாட்சியங்கள் இருக்கின்றன.

ஒத்திசைவுடன் சமுதாயத்தில் இயங்கி, நாட்டுக்கு நல்லது செய்ய வேண்டிய பத்திரிகையாளர்களும் காவல்துறையினரும் எதிரிகளைப்போல் முரண்பட்டு நிற்பது ஜனநாயகத்துக்கே கேடு விளைவிக்கக் கூடிய நிலை.

வழக்கம்போல் மாநில அரசு விசாரணைக் கமிஷன் நிறுவ, அது போதாது உச்சநீதிமன்றத் தற்போதைய நீதிபதியொருவர் விசாரணை நடத்தவேண்டும் என்று எதிர்த்தரப்பினர் கூறுகின்றனர்.

என்ன விசாரணை நடந்தாலும் போன உயிர்களை மீட்க முடியாது. காவல் துறை பேரில் கண்டனங்கள் வரலாம்; அல்லது கூட்டம் வன்முறையில் ஈடுபட்டதால் காவல் துறையினர் தாக்க நிர்ப்பந்திக்கப்பட்டனர் என்ற முடிவுக்கு வரலாம்.

ஆனால், மீண்டும் ஒரு முறை தாமிரபரணி துப்பாக்கிச் சூடோ, மெரீனா கடற்கரைக் கொலைகளோ தமிழகத்தில் நடைபெற்றுவிடக் கூடாது.

ஆளுங்கட்சி - எதிர்க்கட்சி என்ற பாகுபாடு இன்றி அனைவருமே இந்த அபத்தப் பேரணிகளை - அபாயப் பேரணிகளை - விட்டொழித்து, இன்னும் ஆக்கபூர்வமான முறைகளில் அரசியல் நடத்த முன்வரவேண்டும். உணர்ச்சிகளைத் தூண்டுவதன் மூலம் அரசியல் ஆதாயம் சேர்க்க முயற்சி செய்யும் மலிவான அணுகுமுறையைக் குழிதோண்டிப் புதைத்தாக வேண்டும். ○

# வியாசபாரதம்

மூன்று தொகுதிகள்- 2000 பக்கங்கள்
எளிய தமிழ் உரைநடையில்

வேதவியாசர் அருளிய மகாபாரதமும் வால்மீகி முனிவர் அருளிய இராமாயணமும் இதிகாசங்கள் எனப்போற்றப்படுகின்றன.

வேதங்களில் சொல்லப்படும் கருத்துக்கள் அனைத்தும் இதில் இடம்பெறுவதால், வியாசபாரதத்தை ஐந்தாம் வேதம் என்பர். கதையை வழங்கிய வியாசரே நூலின் இடையி டையே தோன்றி விளக்கம் தரும் சிறப்புடையது வியாசபாரதம்; நூற்றுக் கணக்கான மாந்தர்கள் உலா வரும் ஸ்வர்ண மாளிகை, வியாச பாரதம்! ஏராளமான கிளைக் கதைகளையுடைய ஓர் ஆலவிருட்சம் வியாச பாரதம்! நள தமயந்தி வரலாறு, சத்தியவான் சாவித்திரி வரலாறு, இராமன் வரலாறு, துஷ்யந்தன்-சகுந்தலை வரலாறு போன்றவை புகழ் வாய்ந்தவை. அரிச்சந்திரன், குசேலன், கந்த பெருமான், பரசுராமர் போன்றோர் வரலாறும் இதில் இடம் பெற்றுள்ளன.

மனித வாழ்க்கையை நெறிப்படுத்த எழுந்த இந்நூல், அற வழியில் நடக்க மனிதனைச் சிந்திக்க வைக்கிறது. இன்பமும் துன்பமும் மூடரைத் தான் பற்றும்! அறிவாளிகளை அவை நெருங்கா; எக்காரணத்தைக் கொண்டும் கடவுளைக் கைவிடக்கூடாது; பயன்களைப் பாராது கடமையைச் செய்ய வேண்டும் என்பன போன்ற கருத்துக்களை உலகுக்குப் பறை சாற்றுகிறது பாரதம்! இந்நூலைப் படிப்பவர் நெஞ்சில் ஓர் அமைதி ஏற்படும் மற்றவரை ஏமாற்றக்கூடாது என்ற எண்ணம் மேலோங்கும். நம்மை ஏமாற்றாமல் இருக்க விழிப்புடன் செயல்படத் தூண்டும். உலோபம், பொறாமை, கோபம் போன்ற தீக்குணங்கள் நீங்கும்; தியானம், அமைதி, அன்பு போன்ற நற்குணங்கள் துலங்கும். ஊழி பெயரினும் தான் பெயரா உயர்வுடைய இந்நூல் உங்கள் இல்லந்தோறும் பொலிவதாக.

இதுவரை பாரதத்தைப் பற்றித் தமிழில் தோன்றிய எல்லா நூல்களையும் விட இதுவே சிறந்தது என்பதை வாசகர் ஒப்பிட்டுப் பார்த்து உணர்ந்து மகிழ்வர் என்பது திண்ணம்.

# சிரிப்புதான் எனக்குப் பிடிச்ச...



''நீ இந்தத் திருட்டைத் தனியாவா செய்தாய்?''

''ஆமாங்க எஜமான்! காலம் கெட்டுப் போச்சு! யாரையும் நம்ப முடியலையே!''



''ஐயா! ரொம்ப பசிக்குது! தர்மம் பண்ணுங்க!''

''இதோ பாரப்பா! பசின்னு சொன்னதால, பணம் கொடுக்கிறேன்! சாப்பாடு வாங்கத்தான் இந்தப் பணம்! சாராயம், சிகரெட்னு கண்டபடி செலவழிக்கக் கூடாது. தெரிஞ்சுதா?''

''சாமி, அப்படியெல்லாம் செய்யவே மாட்டேங்க! சாராயம், சிகரெட்டுக்குத் தனியா பணம் வெச்சிருக்கேன்.''



''அந்த தொழிலதிபரை, வருமானவரி அதிகாரிங்க எப்படிப் பிடிச்சாங்க?''

''அடிக்கடி, 'கறுப்புதான் எனக்குப் பிடிச்ச கலரு'னு பாடிக்கிட்டு இருந்தாராம்.''



''நாலு கிளினிக் வெச்சிருக்காரே! டாக்டர் ரொம்ப பிசியா?''

''நாலு கிளினிக் தவிர, கவர்மெண்ட் ஆஸ்பத்திரியில கம்பவுண்டரா வேற இருக்காரே!''



''கரும்பு ஜூஸ் கடையில வேலைக்குச் சேர்ந்தியே, வேலை எப்படி இருக்கு?''

''முதலாளி இனிக்க இனிக்கப் பேசறாரு! ஆனா, வேலையில சக்கையா பிழிஞ்சிடறாரு!''

– ஹ்யூமர் கிளப் ஆண்டு விழாவில் சிரித்தவை

தொகுப்பு : மௌலி

# எட்டுத்திக்கும் எட்டு!

✉ 'ஸ்டார்' திரைப்பட விமர்சனத்தில், 'தால்' ஹிந்தி படத்தின் பாடல்களின் மெட்டுக்களைப் பயன்படுத்தியுள்ளனர் என்று எழுதியுள்ளீர்கள். ஆனால், 'திஎர்த்', 'தக்ஷக்' படத்தின் பாடல்களின் மெட்டுக்களைத்தான் போட்டுள்ளனர். 'தால்' படத்தின் மெட்டுக்களை அல்ல.
வேலூர், இசைப்ரியன்.

✉ அப்பல்லோவில் கலைஞர், ஆஸ்பத்திரியில் கலைஞர் என்ற செய்திகளைக் கேட்டு கேட்டு கனத்த இதயங்கள், சட்டசபையில் எப்போது கலைஞர் இருப்பார் என ஆவலோடு நோக்குகிறது.
நாகூர்,
எஸ். அப்துல்லா அஹமது.



✉ கல்கியின் இலவச இணைப்பான 'ஞான மலர்'களில் நபிகள் நாயகம்(ஸல்) அவர்களின் பொன்மொழிகளையும் தொகுத்து வெளியிட்டிருந்தீர்கள். நபிகள் நாயகம் என்று பெயரைக் குறிப்பிடும்போது நபிகள் நாயகம்(ஸல்) என்றே குறிப்பிட வேண்டும்; இஸ்லாமிய கோட்பாடுகளில் அதுவும் ஒன்று.
சென்னை - 93, எஸ். சையது முகமது.

✉ 'மலைக் கிராமத்தில் ஒரு மாலைப் பள்ளி' கட்டுரை படித்தேன். அரசாங்கம் சம்பளம் கொடுத்து ஆசிரியராக இருக்கச் சொன்னால்கூட செலம்பை போன்ற மலைப் பிரதேச குக்கிராமங்களுக்குச் செல்ல பலரும் தயங்குவார்கள். அப்படிப்பட்ட குக்கிராமத்திற்கு, பல சிரமங்களைத் தாண்டிச் சென்று இலவசமாகப் பாடம் சொல்லித் தரும் செந்தில் பாராட்டுக்குரியவர்.
இலால்குடி, எம். இராஜேந்திரன்.

✉ இனியின் கையில் இனியா! தன் நடிப்புத் திறமையின் மேல் நம்பிக்கை கொண்ட இந்த செல்லம்மா (தேவயானி) நிச்சயமாய் ஒரு ரவுண்டு வருவார்.
சின்மயா நகர், என். ரஜினி.

✉ உலகின் ஏழாவது அதிசயமான தாஜ் மகாலில் ஃபிஃப்டி கேஜி தாஜ்மகாலான உலக அழகி ஐஸ்வர்யாராய் மும்தாஜ் மகாலாக பவனி வருவது பற்றிய கட்டுரையும், படங்களும் இதயமகாலில் இடம் பிடித்துக் கொண்டு விட்டன!
அயன்புரம்,
த. சத்தியநாராயணன்.

✉ 'அக்கரையில் பயின்ற மூட்டுவலி சிகிச்சையை, இந்தியாவுக்கு, அதுவும் தமிழ்நாட்டுக்குக் கொண்டு வந்த டாக்டர் விஜய். சி. போஸ் வாழ்க!
பெங்களூர்-5, அ. தாசன்

✉ 'ராஜினாமா நாடகம்' தலையங்கம் படித்தேன். மக்கள் ஆதரவு, வாஜ்பாய்க்குப் பெருகிவிட்டால் அவர் பயப்பட அவசியமில்லை. முதலில் அவர் அதைச் செய்யட்டும். அரசியல் சூழ்ச்சியாளர்கள் காணாமல் போய்விடுவார்கள்!
மொரட்டுப்பாளையம்,
விஜயஸ்ரீ இராஜேஸ்வரன்

✉ மனுஷ்யபுத்ரனின் கட்டுரையில் 'கல்லூரி உலகில் வேறு மதிப்பீடுகளுடன் மோதி, சுயபிம்பங்கள் கலைந்து விட்டதோடு அதுவே மிகப்பெரிய விடுதலை' என்ற வரிகள் இளைஞர்களுக்குச் சரியான வழிகாட்டி!
சென்னை-4, அய்யாறு வாசுதேவன்

வட்டமேஜை





# ஜெய் பாண்டுரங்க ஹரி!

**விட்டல் நாமப்ரசார ஸபா, ஆதம்பாக்கம், சென்னை - 88**

## ஸ்ரீ ருக்மாயி ஸமேத ஸ்ரீ பாண்டுரங்கனுக்கு நூதன ஸன்னிதி நிர்மாணத் திருப்பணி கைங்கர்யம்

பேரன்புடையீர்!

"முகீந் ஸதா நாம, ஸந்தாஞ்சேந் தர்சன"
- ஸந்த் ஸ்ரீ நாமதேவர்

ராதே க்ருஷ்ணா! நாம ஸங்கீர்த்தன ப்ரியனும், பண்டரீ க்ஷேத்ரத்தில் அடியார்களுக்கு அருள் பாலித்து வரும் பரமக்ருபாளுவுமான ப்ரபு ஸ்ரீபாண்டுரங்கனுக்கு, **சென்னை ஆதம்பாக்கம் சாந்தி நகரில் அமைந்துள்ள, ஸ்ரீ கற்பக விநாயகர் ஆலயவளாகத்தில்** விசேஷமான ஸன்னிதி நிறுவ, மேற்படி ஸபையினரால் தீர்மானிக்கப்பட்டு, தொடர்ந்து நித்ய பூஜா விதிகளுடன் பராமரிக்க ஸ்ரீ கற்பக விநாயகர் பக்த மண்டலியினரால் திட்டமிடப்பட்டுள்ளது.

ஸமீபத்தில் மஹாராஷ்ட்ர பஜனைகளில் தேர்ச்சி பெற்ற பல்வேறு கோஷ்டிகளைக் கொண்டு, வெகு விமரிசையாக "அபங்க ஸம்மேளனம்" நடந்தேறியது. அத்தகைய புண்ய பூமியில், ஸத்குரு ஸ்ரீ ஞானானந்தகிரி ஸ்வாமிகள் அனுக்ரஹத்தோடு, கடையநல்லூர் ஸ்ரீ விட்டோபா பஜன் மண்டலி தலைவர் ஸ்ரீ துக்காராம் கணபதி மற்றும் பல்பாகவதர்கள் அடங்கிய கமிட்டி விரைவில் இத்திருப்பணியைத் துவக்க உள்ளது. பக்தர்கள் மற்றும் பஜனப்ரேமிகள் அனைவரிடமிருந்தும் இத்திருப்பணிக்காக நன்கொடைகள் வரவேற்கப்படுகிறது. காசோலை அல்லது டிராப்ட் அனுப்புவோர் "ஸ்ரீ விட்டோபா ப்ரதிஷ்டை திருப்பணிக் கமிட்டி" என்ற பெயருக்கு, கீழ்கண்ட முகவரிக்கு அனுப்ப வேண்டுகிறோம்.

*தகவல் தொடர்பு முகவரி :*

**கே.எஸ். வாஸுதேவன் (போன் : 044-244 5193)**
1, தாமிரபரணித் தெரு, பாரத் நகர், ஆதம்பாக்கம்,
சென்னை - 600 088.

இப்படிக்கு,
**ஸபா கோஷ்டியினர்.**

பல ஊர்களில் பேருந்துகள் வாடகைக்குக் கிடைக்காமல் செய்துவிட்டார்கள் போக்குவரத்து அதிகாரிகள். உடன்பிறப்புகளுக்குக் கிடைத்தவை வேன்கள் மட்டும்தான். அதிலும் நிறைய வேன்கள் தாம்பரம், பூந்தமல்லி என்ற நிறுத்தப்பட்டுவிட, தொண்டர்கள் பதினைந்து, இருபது கி.மீ தூரம் பஸ் பிடித்து சென்னைக்குள் வர வேண்டிய







தாகிவிட்டது.

ஆகஸ்ட் 12 அன்று சுள்ளென்று அடித்த வெயிலில் உடம்பில் வியர்வை ஆறாக ஓட, மூன்றரை மணிக்குத் துவங்கிய ஊர்வலத்திற்கு மதியமே அணிவகுக்கத் துவங்கி விட்டார்கள் தொண்டர்கள். மூன்று மணி வாக்கில் சின்ன மலையிலிருந்து கிண்டி ரயில் நிலையம் வரை அலை அலையாகத் தலைகள். உற்சாகத்திற்குக் கொஞ்சமும் குறைவில்லை. "ஸார், முத்துக் கருப்பனைப் பார்த்தீங்களா?" என்று போலீஸிடமே விசாரித்த தொண்டர்கள் "ஐயையோ காணுமே... முத்துக்கருப்பனைக் காணுமே" என்று கோஷமிட்டார்கள்! மத்திய அமைச்சர் முரசொலி மாறன் வராதது குறித்து பலத்த சர்ச்சை எழுந்தது. அரசாங்கத்தின் அங்கமான மத்திய மந்திரி, அரசாங்கத்தின் இன்னொரு அங்கமான போலீஸ் துறையைக் கண்டித்து நடத்தும் பேரணியில் கலந்து கொள்வது சரியல்ல என்பதால் அவர் வரவில்லை என்று சொல்லப்பட்டது. மூன்றரை மணிக்கு ஸ்டாலின் வந்த பிறகு ஊர்வலம் கிளம்பியது. ஸ்டாலின் ஜீப்புக்கு முன்னே ஒரு கி.மீ தூரத்திற்கு ஊர்வலம் இருந்தது.

தி.மு.க பேரணிக்கும் அ.இ.அ.தி.மு.க பேரணிக்கும் என்ன வித்தியாசம் என்று சமீபத்திய தி.மு.க பேரணிக்கு முன்பு யாராவது கேட்டிருந்தால் 'தி.மு.க பேரணியில் ஆபாச கோஷங்கள் இருக்காது' என்று தைரியமாகச் சொல்லியிருக்க முடியும். ஆனால் இந்தப் பேரணிக்குப் பிறகு அந்தப் பெருமையை தி.மு.க இழந்துவிட்டது. அங்கு போடப்பட்ட கோஷங்கள் எதையும் இங்கு எழுத முடியாது. இன்னமும் அ.இ.அ.தி.மு.க மகளிர் அணி ரேஞ்சுக்கு தி.மு.க மகளிர் இறங்கவில்லை என்பதுதான் இப்போதுள்ள ஒரே ஆறுதல்.







# ரத்தம் தோய்ந்த பேரணி!

"இந்த ஊர்வலமே போலீஸுக்கு எதிராகத் தான் நடக்கிறது. அப்படியிருக்க வேறு எந்த வகையான கோஷத்தை எதிர்பார்க்கிறீர்கள்?" என்று அப்பாவித்தனமாக நம்மிடம் கேட்டார் திண்டுக்கல்லைச் சேர்ந்த சந்திரன். தி.மு.க ஆட்சியில் பந்தாவாக இருந்த துணைக் கமிஷனர் சிவனாண்டி ஊர்வலத் துவக்கத்தில் பாதுகாப்புப் பணியில் இருந்தார். கலைஞர் கைது சம்பந்தப்பட்ட விவகாரத்தில் அடி பட்ட போலீஸ் அதிகாரி ஜார்ஜ் போல அவர் இருப்பதாக ஒரு தொண்டர் கிளப்பிவிட, சிவனாண்டியைச் சுற்றி ஒரு கூட்டம் திரண்டது. அவர் 'நமக்கேன் வம்பு' என்று ஒதுங்கி நின்று கொண்டார். ஊர்வலம் செல்லும் பாதையில் இருந்த மதுக்கடைகள் அனைத்திலும் அன்று உற்சாகமான பிஸினஸ்!

"கலைஞர் கைதில் நடந்த அத்துமீறல்களைக் கண்டித்து பேரணி' என்பது எங்களுக்கு ஒரு 'ராலியிங் பாயிண்ட்' அவ்வளவுதான். ஆனால் எங்கள் உணர்வுகளை வெளிப்படுத்த ஒரு நல்ல வாய்ப்பாக அதை எடுத்துக் கொண்டிருக்கிறோம். தலைவர் கலைஞரைத் தொடர்ந்து முப்பதாயிரம் தொண்டர்கள் சிறை புகுந்தோம். பல மாவட்டங்களில் மூன்று நாள் மாமூல் வாழ்க்கை பாதிக்கப்பட்டது. போலீஸ் கெடுபிடியில் நாங்கள் சிக்கினோம். ஆனால் நாங்கள் எதற்கும் பயப்பட மாட்டோம். இந்த அடக்குமுறை ஆட்சியை எதிர்த்து வெள்ளம் போல் இங்கே தி.மு.க தொண்டர்கள் திரண்டிருப்பதன் மூலம் கட்சி இன்னமும் உயிரோட்டத்துடன் இருக்கிறது என்பதைப் புரிந்துகொள்ளுங்கள்" என்றார் 'கருதி' ஏற்றிய நிலையில் இருந்த

புதுக்கோட்டையைச் சேர்ந்த தண்டபாணி!

சைதாப்பேட்டை - சீரணி அரங்கம்: கிட்டத்தட்ட பத்து கி.மீ ஊர்வலத்தின் முன்னேயும், பின்னேயும் நான்கு வரிசை போலீஸைத் தவிர, வழியில் எந்த போலீஸும் வரவில்லை. ஆங்காங்கே சந்திப்புகளில் இருந்த போலீஸ்காரர்களும்கூட தொண்டர்களின் ஆவேசத்தைக் கண்டு உள் வாங்கி நின்று கொண்டார்கள். கோஷமிட்டு தொண்டை, வறண்டு போக, நடந்து, நடந்து கால்கள் வலியால் தள்ளாட, தொண்டர்கள் உற்சாகத்தை மட்டும் இழக்காமல், சீரணி அரங்கத்தை நோக்கி நடை போட்டார்கள். பேரணிக்கு அடுத்தநாள் இறந்துபோன சட்டமன்ற உறுப்பினர் வை. பெருமாள் ஆவேச கோஷத்துடன் நமது புகைப்படக்காரருக்குப் போஸ் கொடுத்தார்.

### கட் பண்ணி சீரணி அரங்குக்குப் போவோம்.

சரத்குமார் பேசிக்கொண்டிருக்கும்போது கூட்ட மேடைக்கு அந்தச் செய்தி வந்துவிட்டது. காந்தி சிலை அருகில் போலீஸ்காரர்கள் தொண்டர்கள் மீது வன்முறையைக் கட்டவிழ்த்து விட்டிருக்கிறார்கள் என்பதுதான் அந்தச் செய்தி. மேடையில் பதற்றம் தொற்றிக்கொண்டது. அடுத்த சில நிமிடங்களில், ரத்தம் சொட்டச் சொட்ட தொண்டர்கள் மேடைக்கருகில் வந்துவிட்டார்கள். கூட்டம் தன் கட்டுப்பாட்டை இழந்துவிடுமோ என்று அஞ்சினார்கள் மேடையிலிருந்த பிரமுகர்கள். சரத்குமாரைத் தொடர்ந்து, ஆற்காட்டார், பேராசிரியர் என்று எக்ஸ்பிரஸ் வேகத்தில் சென்று கலைஞரின் கையில் மைக்கைக் கொடுத்து விட்டார்கள்.

'மனித உரிமை மீறல்களை விசாரிக்க சுப்ரீம் கோர்ட் நீதிபதியைக் கொண்டு விசாரணை கமிஷன் அமைக்க வேண்டும்' என்ற தீர்மானத்தோடு முடித்துக்கொண்டார் கலைஞர். தி.மு.க வரலாற்றில் இப்படிப்பட்ட மகத்தான பேரணியை ஒட்டி நடந்த எத்தக் கூட்டமும் முக்கால் மணி நேரத்தில் முடிந்தது கிடையாது. கலைஞர் பேசும்போதே இறந்துபோன இரண்டு தொண்டர்களின் உடல்கள் மேடைக்குக் கொண்டு வரப்பட்டன. மனத்தில் படபடப்போடு கூட்டம் ஆபத்தில்லாத பாதையைத் தேர்ந்தெடுத்து விலகி ஓடியது.

### இப்போது காந்தி சிலை அருகில் செல்வோம்:

எப்போதும் ஒளி வெள்ளமாகக் காணப்படும் அந்தப் பகுதி இருட்டடிப்பு செய்யப்பட்டிருந்தது. ஏழரை மணி வாக்கில் பேரணியின் இறுதி அந்த இடத்துக்கு வரும்போது இருட்டிலிருந்து கற்கள் பறந்திருக்கின்றன. தொண்டர்கள் சுதாரித்துக் கொண்டு ஓடுவதற்குள், காவல் துறையின் தடிகள் அவர்களைப் பதம் பார்க்கத் துவங்கி விட்டன. ஆவேசமான கூட்டம், அங்கிருந்த சில காவல்துறை வாகனங்களைச் சேதப்படுத்தியது. காவல் துறையும் ஆபாசக் கோஷங்களைக் கேட்டு தங்களது கடுப்பை வெளிக்காட்டத் தயாராக இருந்த நேரம் அது. மோதல் வெடித்தது. அந்தக் காட்சியைப் படமெடுக்க வந்த தனியார் தொலைக்காட்சி காமிராக்கள் காவல் துறையின் தடிகளால் பதம் பார்க்கப்பட்டன. உயிருக்குப் பயந்துகொண்டு காவல் துறைத் தலைவர் அலுவலகத்துக்குள் ஓடினார்கள் பத்திரிகையாளர்கள். அங்கும் அவர்களைப் போலீஸ் விடவில்லை. ரவுண்டு கட்டி அடித்தார்கள். எல்லோரையும் அலுவலகத்துக்குள் அழைத்துக் கொண்டு போய் சிறை போல் வைத்து விட்டார்கள். வெளியில் அவர்கள் நடத்திய அராஜகத்திற்குச் சாட்சியமே இல்லாமல் செய்து விட்டார்கள். ஒரு தொலைக்காட்சி பெண் நிருபரிடம், 'காஸெட்டை எங்கே மறைத்து வைத்திருக்கிறாய்?' என்று ஆபாசமாக நடந்துகொண்டது காவல் துறை. காவல்துறையின் தடியிலிருந்து விலகி ஓடிய கூட்டம் சிறிது தூரத்தில் உள்ள அயோத்தியா குப்பம் அருகில் ரௌடி கும்பலின் உருட்டுக்கட்டை, அரிவாள் தாக்குதலில் மாட்டிக் கொண்டது. ஒருவர் மேல் ஒருவர் உருண்டு விழ, உயிருக்குப் பயந்துகொண்டு கடற்கரை மணலில் இறங்கி ஓடினார்கள் தொண்டர்கள். கண்ணீர்ப் புகை ஏற்படுத்திய

## ஜாலியன் வாலாபாக் - 2001!

''பத்திரிகையாளர்கள் மீது நடந்த கோரமான தாக்குதல் இன்னொரு ஜாலியன்வாலா பாக். தங்கள் மீது விழுந்த அடிகளைத் தாங்கிக்கொண்டு, மற்றவர்களைக் காப்பாற்றிய எங்கள் நிருபர்களின் அலறலை செல்போனில் கேட்டு நான் ஆடிப் போய்விட்டேன்'' என்று சொன்னார் நக்கீரன் கோபால்.

இடம்: சென்னை சேப்பாக்கம், அரசு விருந்தினர் மாளிகை எதிரே! நிகழ்ச்சி: பேரணியில் பத்திரிகையாளர்கள் மீது நடத்தப்பட்ட வன்முறையைக் கண்டித்து அனைத்துப் பத்திரிகையாளர்களும் நடத்திய ஒருநாள் உண்ணாவிரதம். சென்னை, ஏன், தமிழக பத்திரிகையாளர்களின் போராட்ட வரலாற்றில் இந்த அளவுக்கு பத்திரிகையாளர்கள் திரண்டதில்லை என்று சொல்லுமளவுக்குக் கிட்டத்தட்ட 400 பத்திரிகையாளர்கள் உண்ணா



• உண்ணாவிரதம்

விரதத்தில் கலந்துகொண்டனர். அன்று போலீஸ் குண்டாந்தடியால் தாக்கப்பட்ட பத்திரிகையாளர்கள் நிகழ்த்தப்பட்ட அராஜகத்தை எடுத்துச் சொல்ல, கேட்டுக் கொண்டிருந்தவர்களுக்கு அடிவயிற்றிலிருந்து ஆவேசம் கிளம்பியது.

உண்ணாவிரதத்துக்கு ஆதரவு தெரிவிக்கும் வகையில் பத்திரிகைகளின் முதலாளிகளும், ஆசிரியர்களும் வந்து வாழ்த்திவிட்டுப் போனது கூடுதல் பலம். பல கட்சிகளைச் சேர்ந்த தலைவர்களும், பிரமுகர்களும் ஆதரவு தெரிவிக்கும் வகையில் பந்தலுக்கு வந்தாலும் யாரையும் மைக்கைப் பிடிக்க அனுமதிக்கவில்லை பத்திரிகையாளர்கள்.

''காயமடைந்த போலீஸ்காரர்களைச் சென்று பார்த்துவிட்டு வந்திருக்கிறார் ஜெயலலிதா. ஆனால் அவருக்கு, பாதிக்கப்பட்ட பத்திரிகையாளர்களைப் பார்க்கத் தோன்றவில்லையே?'' என்று கொந்தளிக்கும் குரலில் கேட்டார் ஒரு பத்திரிகையாளர்.

''பெருவாரியாக மக்கள் வோட்டு போட்டு எனக்கு மிருக பலம் கொடுத்திருக்கிறார்கள். எனவே என்னை யாரும் கேட்கமுடியாது என்ற வகையில்தான் முதல்வரின் நடவடிக்கைகள் அமைந்திருக்கின்றன. இது அவருக்கு நல்லதல்ல'' என்று எச்சரித்தார் ஸீனியர் பத்திரிகையாளர் பகவான்சிங்.

''உங்கள் எழுத்துக்கள் எனக்கு வோட்டுப் போடும் அப்பாவி கிராம மக்களைச் சென்றடையப் போவதில்லை. எனவே உங்களைப் பற்றி எனக்குக் கவலையில்லை'' என்ற மனோபாவத்தில்தான் முதல்வர் இருக்கிறார். போலீஸை அளவுக்கதிகமாக நம்பும் அவருக்கு, பல பிரச்னைகள் போலீஸால்தான் வரப்போகின்றன!'' என்று சொன்னார் ஒரு பத்திரிகையாளர்.

பத்திரிகையாளர்களின் அன்றைய எழுச்சியை சரியான கண்ணோட்டத்தில் முதல்வர் புரிந்துகொண்டால் அவருக்கும் அவரது ஆட்சிக்கும் மட்டுமல்லாமல் ஜனநாயகத்துக்கும் நல்லது.

எரிச்சலில் பலருக்குக் கண்களைத் திறக்க முடியவில்லை.

''ஆபாசமான கோஷங்கள் போட்டோம். உண்மைதான். பொதுக்குழுவில் எங்கள் கட்சி பிரமுகர்கள் சிலர் வன்முறையைத் தூண்டும்படி ஆவேசமாகப் பேசியிருந்தாலும் வன்முறையில் ஈடுபட வேண்டும் என்ற எண்ணம் துளிக்கூட எங்களுக்கு இல்லை'' என்று தலையில் இருந்து ரத்தம் வழிந்த நிலையில் நம்மிடம் சொன்னார் ஈக்காடுதாங்கலைச் சேர்ந்த முரளி.

சைதாப்பேட்டையிலிருந்து எந்த ஒரு சம்பவமும் இல்லாமல் அமைதியாக வந்த பேரணி காந்தி சிலை அருகில் வன்முறையில் மாட்டிக் கொண்டதெப்படி? ''பலவிதங்களில் இடையூறுகள் கொடுத்தும் லட்சக்கணக்கானவர்கள் அணிவகுத்து வந்ததைப் பார்த்து வயிற்றெரிச்சல் ஆளும் கட்சிக்கு. எனவே பேரணியின் பெருமையைச் சிதைக்க வேண்டுமென்பதற்காகவே காவல்துறை தலைவர் அலுவலகம் அருகே மொத்தமாக போலீஸ்காரர்கள் குவித்து வைக்கப்பட்டனர். இதைத் தவிர வட சென்னை அமைச்சர் ஒருவர் தூண்டுதலில், அயோத்தியா குப்பத்தைச் சேர்ந்த 'தாதா' ஒருவரின் மேற்பார்வையில் குண்டர்கள் குவிக்கப்பட்டனர். ஊர்வலம் முடியும் இடமாதலால் தொண்டர்கள் மிகவும் களைப்புடன் வருவார்கள் என்று அவர்களுக்குத் தெரியும். அந்தச் சமயத்தில் தாக்கினால் பெரும்பாலோர் எதிர்த்து நிற்க சக்தி இல்லாமல் இருப்பார்கள் என்பதும், அவர்களுக்குத் தப்பி ஓடுவதுகூட கடினமாக இருக்கும் என்பதும் தெரிந்துதான் காந்தி சிலை அருகே தாக்குதல் நடத்தியிருக்கிறார்கள்'' என்கிறார்கள் தி.மு.க பிரமுகர்கள்.

அதே போல், சில நாட்கள் முன்பு சன் தொலைக்காட்சி நிருபர் சுரேஷ் கைதைத் தொடர்ந்து பத்திரிகையாளர்கள் போராட்டம் நடந்ததல்லவா? அந்தப் போராட்டத்தில் ஆக்டிவ்வாக இருந்த சில பத்திரிகையாளர்களைத் தாக்க வேண்டும் என்பதும் திட்டமிடப்பட்டதாம். இதற்காகச் சில போலீஸ்காரர்களுக்கு அப்போது எடுத்த வீடியோக்கள் போட்டுக் காட்டப்பட்டு, பத்திரிகையாளர் சிலர் அடையாளம் காட்டப்பட்டார்களாம்.

— ப்ரியன்

படங்கள்: ராஜன்

# மனம், மனமறிய ஆவல்

**20**

"என் நம்பிக்கையைக் காப்பாத்திட்ட ப்ரியா. கங்கிராட்ஸ்" ராம்ஷேகரின பாராட்டில் பெருமை நிரம்பியிருந்தது.

நன்றி தெரிவித்தாள் சிவப்ரியா. கூடவே, "இருந்தாலும் அந்த செமினாருக்கு நீங்க வேறு யாராவது சீனியர் டாக்டரை அனுப்பியிருக்கலாம்" என்றாள்.

"ஏன், ஆனந்தோ முகர்ஜியோ ஏதாவது சொன்னாங்களா?"

சிவப்ரியாவின் மௌனமே பதிலை உணர்த்த, ராம்ஷேகர், "அதையெல்லாம் கண்டுக்காதே ப்ரியா. எனக்கு யார் யாரை எங்க வைக்கணும்னு தெரியும். செமினாரிலே ஜமாய்ச்சுட்டியாமே?"

அந்தக் கருத்தரங்கின் தொடக்கத்தில் அவள் சந்தித்த சங்கடங்கள் இவருக்குத் தெரியாது.

கலந்து கொள்ள வந்திருந்த மருத்துவர்களின் பட்டியலைப் படித்த அமைப்பாளர், சிவப்ரியாவின் பெயரைப் படிக்கும் போது மட்டும் 'நட்சத்திர மருத்துவர்' என்று ஆங்கிலத்தில் குறிப்பிட, ஒரு சலசலப்பு உண்டானது. வெளிநாடுகளிலிருந்து வந்திருந்த மருத்துவர்கள் நீங்கலாக பிறருக்கு அந்த சிலேடை நன்றாகவே புரிந்தது. ஒரு மூலையில் இருந்து 'மலர் கொடுத்த மாமனுக்கு மனம் கொடுத்தேன்' என்ற பாடல் வரி மெல்லிய குரலில் மிதந்து வந்தது. சிவப்ரியா திரையில் வாயசைத்த பாடல். எந்தத் துறையானாலும் என்ன எதிலுமே பலவித ரசனை கொண்டவர்களும் உண்டு!

ஒரே ஒரு திரைப்படத்தில் நடித்ததில் தன் மீது இப்படியொரு அழுத்தமான முத்திரையா! சிவப்ரியா திணறினாள். இந்தக் கருத்தரங்கத்திற்காக கடந்த சில நாட்களாக இரவுகளிலும் கண்விழித்து பல மருத்துவ நூல்களையும் வலைத்தளங்களையும் புரட்டிப் பார்த்து தகவல் சேகரித்திருந்தாள். அத்தனைக்கும் பலனின்றி, நடிகை என்ற கோணம் தான் முதலில் தோன்றுகிறது இங்குள்ளவர்களுக்கு!

"இதனாலெல்லாம் நான் மனம் கலங்கி விடக்கூடாது. என் லட்சியத்தை அடைவதில் உண்டாகும் தடைகற்கள்தான் இவை. சுவர்களல்ல. என்னால் தாண்ட முடியும்" சிதைந்த மனத்தைச் சில நொடிகளிலேயே சீர் செய்து கொள்

ளும் வித்தை அவளுக்கு இப்போதெல்லாம் சற்றே எளிதாகியிருந்தது.

தேநீர் இடைவேளையின்போது வெளிநாடுகளிலிருந்து வந்த மருத்துவர்களை அணுகி, தனது மருத்துவக் கருத்துகளை அவள் மரியாதையுடன் பகிர்ந்து கொண்டபோது, அவர்கள் வியப்புடன் அவற்றைப் பரிசீலித்தனர். அதற்குப் பிறகு அவள் எழுப்பிய சில சந்தேகங்கள் மிகவும் ஆழமானதாகவும் நியாயமானதாகவும் இருப்பதை உணர்ந்து அவற்றிற்கான விளக்கங்களைச் சுருக்கமாகத் தந்தனர்.

தொடர்ந்து நடைபெற்ற கருத்தரங்கில், மூன்று மருத்துவர்களுமே தமது பேச்சில் சிவப்ரியாவை உயர்வாகக் குறிப்பிட்டனர். அதிலும் கனடாவிலிருந்து வந்திருந்த டாக்டர் மால்கம் ஸ்மித் "இந்தியாவின் வருங்கால மருத்துவ உலக நம்பிக்கை நட்சத்திரங்களில் முக்கியமானவராக டாக்டர் சிவப்ரியா விளங்குவார் என்பது நிச்சயம்" என்று அழுத்தமாகவே கூற, சிவப்ரியாவுக்குப் பெரும் அங்கீகாரம் கிடைக்கத் தொடங்கியது.

**லோ**லிடா, ஆனந்த் மீது பெரும் கடுகடுப்போடு இருந்தாள். "டாக்டர் ஆனந்த் ரொம்ப திட்டுறும்மா. இவர் கூப்பிட்டவுடனே நான் சிஸ்டரை அனுப்பலேன்னு கத்துது. இன்னைக்கு ரெண்டு சிஸ்டருங்கதான் வந்திருக்காங்க. நான் என்ன செய்ய? அது வீட்டிலே கோவம்னா நாந்தான் கிடைச்சனா?" என்றாள் சிவப்ரியாவிடம் முறையிடும் குரலில்.

ஆனந்தின் குடும்பத்தில் என்ன பிரச்னை? மனத்திற்குள் பரபரப்பாகத் தோன்றிய கேள்வியை உடனடியாக அடக்கிக் கொண்டாள் சிவப்ரியா.

ஆனந்த் - சிவப்ரியாவின் காதல் அவர்களைத் தவிர டாக்டர் ராம்ஷேகருக்கு மட்டும்தான் மருத்துவ வட்டத்தில் தெரியும். அந்த அளவுக்குப் பிறர் எதிரே தங்களைக் காட்டிக் கொள்ளாமலும், சாமர்த்தியமாகவும் நடந்து கொண்டனர் அவர்கள். சிலரது மனங்களில் சந்தேகம் தோன்றியதுதான். ஆனால் ஆதாரம் எதுவும் கிடைக்காததாலும், சம்பந்தப்பட்ட

அருண் சரண்யா

இருவரும் தங்கள் கல்வியில் சீரியஸாக இருப்பதைக் கண்டதாலும், யூகங்களைப் பரணில் போட்டு விட்டனர். இந்த நிலையில் ஆனந்த் மீதுள்ள அக்கறையை வெளிப்படுத்தி சந்தேகத்தைப் புதுப்பிப்பானேன்.

குரலைச் சற்றே தழைத்துக் கொண்டாள் லோலிடா. "வாத்தியார் பிள்ளை மக்குன்னு நீங்கள்ளாம் சொல்லுவீங்க இல்ல, அந்த மாதிரி இங்க டாக்டர் ஆனந்த் ஒப்பு சீக்காளி. அடிக்கடி சண்டை போட்டுக்க நாங்களாம் ரெண்டு பேரும். அவங்களுக்குப் பக்கத்து ஹவுசிலேதான் என் கஸின் இருக்குது" என்று ஆதாரத்தையும் அடிக்கோடிட்டுக் காட்டினாள்.

அவள் மேலும் தொடரும்முன் சிவப்ரியாவுக்கு அழைப்பு ஒன்று குறுக்கிட்டது. டாக்டர் பிரசாத் கிருஷ்ணன்தான் அவளை அழைத்தார். தலைசிறந்த எலும்பு முறிவு சிகிச்சை நிபுணர்களில் ஒருவர் அவர். "16-பி ரூமிலே ஒரு பேஷண்ட் இருக்கிறாரே, அவருக்கு நாளைக்கு ஆபரேஷன். உங்க உதவியும் வேண்டியிருக்கும். மூணு வாரமாவது அவர் இங்கே தங்க வேண்டியிருக்கும். அந்த பேஷண்டின் தங்கை ரூமுக்குள்ளே அழுதுகிட்டேயிருக்கு. கொஞ்சம் கண்ட்ரோல் பண்ணி வையுங்க" என்றபடி நகர்ந்தார்.

அந்த அறைக்குள் நுழைந்தபோது, விசும்பல் ஒலி தொடர்ந்து கொண்டிருந்தது. வேணு தூக்க மாத்திரையின் உதவியுடன் தூங்கிக் கொண்டிருந்தான். அவன் அருகில் ஸ்டூலில் அமர்ந்தபடி அவனது தங்கை கண்களை அடிக்கடி துடைத்துக் கொண்டிருந்தாள்.

சிவப்ரியாவைப் பார்த்ததும், "சாரி டாக்டர். என்னாலே கட்டுப்படுத்திக்க முடியலே. என் அண்ணன் குணமாயிடுவாரு இல்ல?"

"நிச்சயம்" என்று சிவப்ரியா கூற, சற்றே தயக்கத்துடன் வெளிப்பட்டது அந்தப் பெண்ணிடமிருந்து அந்தக் கேள்வி.

"என் அண்ணனைப் பழிவாங்கிட மாட்டீங்கதானே?"

அதிர்ச்சியைத் தொடர்ந்து சிவப்ரியாவுக்கு வருத்தமாக இருந்தது. அந்தக் கேள்விக்குப் பதிலளிப்பதே அனாவசியம் என்று தோன்ற அறையிலிருந்து வெளியேறினாள்.

பின்னாலேயே ஓடி வந்தாள் அந்தப் பெண். "சாரி டாக்டர். தப்பா எடுத்துக்காதீங்க. எங்கண்ணன் உங்ககிட்டே நடந்துக்கிட்ட விதம் சரியில்லேன்னு எனக்குத் தெரியும். அவர் மேலே வழக்குத் தொடுப்பதா நீங்க முடிவு செய்ததும் அப்புறம் அந்த எண்ணத்தை மாத்திக்கிட்டதும் கூட எனக்குத் தெரியும். எனக்கென்ன எல்லாருக்குமே தெரியும். எல்லாம்தான் பத்திரிகைகளிலே வந்திடுச்சே."

சிவப்ரியா மௌனமாக இருக்க, மனத்தில் உள்ளதை யாரிடமாவது கொட்ட வேண்டுமென்று தோன்றியதோ அல்லது சிவப்ரியாவைப் புண்படுத்தி விட்டோம் என்ற குற்ற உணர்வோ, அந்தப் பெண் தொடர்ந்து பேசலானாள்.

"எனக்குக் கல்யாணம் நிச்சயம் செய்திருக்காங்க டாக்டர். அடுத்த மாசம் பதினொண்ணாம் தேதிதான் முகூர்த்தம். எங்கப்பாவும் நானும் கிராமத்திலேயிருந்து நகை, புடைவையெல்லாம் வாங்கத்தான் மெட்ராஸுக்கு வந்தோம். அண்ணனோட ஷாப்பிங் போனப்பதான் தெருவைக் கடக்கும் போது இந்த விபத்து... ஏதோ அவசரத்திலே அப்படித் தப்பா உங்ககிட்ட கேட்டுட்டேன். மனசில வச்சுக்காதீங்க" என்று கெஞ்சுதலாக முடித்தாள்.

இலேசான புன்னகையின் மூலம் தனது மன்னிப்பை வெளிப்படுத்திய சிவப்ரியா, "சரி, விடு. நாளைக்குக் காலையிலே உங் கண்ணனுக்கு ஆபரேஷன்" என்று தகவல் கூறியபடி தமது அறைக்குத் திரும்பினாள்.

மிகவும் சோர்வாக இருந்தது. எப்போதும் மனத்தில் போராட்டம் உண்டாவது போலவே சூழல்கள் அமைந்து விடுகின்றன.

மனத்தில் தெளிவு எப்பொழுதுமே இருந்தும் வாழ்வில் எத்தனை குழப்பங்கள் சமீப காலமாக! எப்போதிலிருந்து குழப்பத்திற்கு வித்திடப்பட்டது? மணிசங்கர் தன்னைச் சந்தித்ததிலிருந்தா?......

"ப்ரியா, உன்னைத் தேடிக்கிட்டு நம்ம

"இன்னும் நாலைந்து வருஷங்கள்ல உங்களுக்கு சிறைவாசம் இருக்குன்னு கிரக அமைப்பு சொல்லுதே...!"
"ஹைய்யா! அப்ப அமைச்சர் பதவி கண்டிப்பா கிடைக்கப்போகுதுன்னு சொல்றீங்க!"
– சீர்காழி வி. ரேவதி



ஹாஸ்டலுக்கு ஒரு வி.ஐ.பி. வந்திருக்கார்'' என்று சக மாணவி கலா சொன்னவுடனேயே சிவப்ரியாவுக்குப் புரிந்து விட்டது. அது இயக்குனர் மணிசங்கராகத்தான் இருக்குமென்று. இரு நாட்களுக்கு முன்தான் தொலைபேசியில் தொடர்பு கொண்டிருந்தார்.

"ஹலோ மிஸ் சிவப்ரியா?'' நான்தான் டைரக்டர் மணிசங்கர். நீங்க நடிச்ச மெடிகல் டாகுமெண்டரி ஒண்ணை சமீபத்திலே பார்த்தேன். ரொம்ப நல்லாப் பண்ணியிருந்தீங்க.''

கிராம மக்களுக்கு விழிப்புணர்ச்சி உண்டாக்க வேண்டுமென்பதற்காக மருத்துவக் கல்லூரி மாணவர்களும் திரைப்படக் கல்லூரி மாணவர்களுமாக இணைந்து எடுத்து சிறு படம் அது. நோக்கம் உயரியது; மற்றும் மருத்துவம் தொடர்பானது என்பதாலும் ராம்ஷேகர் வற்புறுத்தியதன் காரணமாகவும் அதில் சிவப்ரியா டாக்டர் ரோல் ஒன்றைச் செய்திருந்தாள். அந்தப் படம் மணிசங்கரை எட்டியிருக்கிறதே!

'தாங்க்ஸ்' என்ற ஒற்றை வார்த்தையோடு நிறுத்திக் கொண்டாள். தமிழகத்தின் பிரபல இயக்குனரிடம் பேசிக் கொண்டிருக்கிறோம் என்ற புல்லரிப்பெல்லாம் ஏற்பட்டு விடவில்லை. அடுத்த நாள் தேர்வு. பாடங்களில் ஏற்பட்ட சில சந்தேகங்களை டாக்டர் ராம் ஷேகரிடம் கேட்டுத் தெளிவுபடுத்திக் கொள்ள வேண்டும். ஆனந்திடமும் கேட்கலாம்தான். ஆனால் புரிந்து கொள்வதில் புத்திசாலியாக இருந்தாலும் கற்றுக் கொடுக்கும் வித்தையில் பலவீனமாக இருக்கிறான். தவிர சந்திப்புகளில் அவன் கவனம் பாடங்களை விடத் தன் மீதே இருக்கும் என்பதும் அவளுக்குத் தெரிந்திருந்தது.

"உங்களுக்கு ஒரு ஸ்வீட் நியூஸ். உங்களுக்கு என்னுடைய அடுத்த படத்திலே சான்ஸ் தரலாம்னு இருக்கேன்.''

ஒரு நொடி கூடத் தயங்கவில்லை சிவப்ரியா. "சாரி. இது எனக்கு இனிப்பான செய்தி இல்லை. படத்தில் நடிக்கும் ஐடியாவெல்லாம் எனக்குக் கொஞ்சமும் இல்லை. என் லட்சியமே வேறே.''

சில நொடிகள் மறுமுனையில் மௌனம். ஒருவேளை மறுப்பையே சந்திக்காதவராக இருந்திருக்கக்கூடும்.

பிறகு, "நான் சீக்கிரமே நேரில் வந்து உங்களைச் சந்திக்கிறேன். அப்புறம் முடிவு செய்வோம்.'' அவளது பதிலை எதிர்பார்க்காமல் ரிசீவரை வைத்து விட்டார்.

இப்போது நேராக வந்திருக்கிறார்.

புன்னகையுடன் வரவேற்றாள். "சந்திச்சதிலே சந்தோஷம். ஆனா சினிமாவில் நடிக்கும் எண்ணமெல்லாம் நிச்சயம் கிடையாது. உங்களுக்கும் நேரம் பொன்னானதுன்னு எனக்குத் தெரியும்.''

அவளது இறுதி வாக்கியத்தின் உள்ளர்த்தத்தை மணிசங்கர் ரசித்தார். பேசிய போது சிவப்ரியாவின் முகத்தில் தெரிந்த பாவங்களை எடை போட்டார். இயக்குனர் மனோபாவம்.

''என்னுடைய லட்சியப் படத்தை அடுத்ததாக இயக்கப் போகிறேன். ரொம்ப டீசன்ட்டான வெயிட்டான கதாநாயகி ரோல் அதில. வழக்கறிஞர் பாத்திரம். அந்தப் பாத்திரத்தை உங்களுக்கு விளக்கினால் நிச்சயம் இன்வால்வ் ஆயிடுவீங்க. கதை அவுட்லைனை இப்பக் கேட்கறீங்களா? அல்லது வேறே சௌகரியமான இடத்திலே சந்திச்சுப் பேசுவோமா?''

"மன்னிக்கணும். இதுக்கு மேலே நாம இதைப் பற்றி பேச வேணாம். சினிமாவிலே நான் நடிப்பதெல்லாம் நிச்சயம் நடக்காத விஷயம்'' என்றபடி எழுந்து கொண்டாள்.

சோர்வுடன் மணிசங்கர் நகர்ந்த பிறகு சற்றுத் தொலைவிலிருந்து இதையெல்லாம் கவனித்துக் கொண்டிருந்த கலா ஓடி வந்தாள். "ஆச்சரியமா இருக்கு ப்ரியா. இவர் படத்திலே நடிக்க எவ்வளவு பொண்ணுங்க துடிக்குது தெரியுமா? தவிர கதையையெல்லாம் இவர் யார்கிட்டேயும் சொன்னதில்லைன்னு கேள்வி'' என்றெல்லாம் கூறினாலும், 'நீ அவர் படத்திலே நடியேன்' என்று அவள் கூறவில்லை. ஏனென்றால் மருத்துவ சேவையைத் தவிர வேறெந்த பாதையையும் சிவப்ரியா தற்காலிகமாகக் கூடத் தேர்ந்தெடுக்க மாட்டாள் என்று அவளுக்கு உறுதியாகவே தெரியும்.

சிவப்ரியாவும் தன்னைப் பற்றி அப்படித்தான் நம்பிக் கொண்டிருந்தாள்!

(தொடரும்)

● எஸ். ஜனனி, சென்னிமலை

? ஐ.பி.எஸ். அதிகாரிகள் மாற்றம் விஷயத்தில் மாநில அரசின் உரிமைகள் மீறப்பட்டுள்ளதாகக் கருதுகிறீர்களா..?

! ஐ.பி.எஸ். அதிகாரிகள் விஷயத்தில் மத்திய அரசு மாநில அரசுக்கு ஆணை பிறப்பிக்க முடியாது. அதற்குரிய விதிமுறைகள் பின்பற்றப்பட வேண்டும். இவ்விஷயத்தில் மத்திய அரசின் சம்பப் போக்கு முறையானது அல்ல. ஜெ. பணிந்து கொடுக்காமல் இருக்க வாய்ப்பு அளித்துவிட்டு, கையைப் பிசைந்து கொண்டு நிற்கிறது.





* இலக்கிய எழுத்தாளர்?



* நியாய லாமா..?

* மெகா திட்டாதிபதி!

# 'தில்' பட இன்ஸ்பெக்டர்

● கே. சண்முகம், ஆதமங்கலம் புதூர் ❑

? ஏர்வாடிக் கொடுமைபோல் சரித்திரத்தில் இதற்கு முன்பு எங்கேனும் நிகழ்ந்தது உண்டா..?

! மூட நம்பிக்கைகளின் அடிப்படையில் இதுபோன்ற கொடுமைகள் பல உண்டு. பல்லாயிரக்கணக்கான பெண்கள் உடன்கட்டை ஏறியதைவிட கொடுமை ஏது? இன்னமும் நாம் அறியாமையில் மூழ்கிக் கிடக்கிறோம். மூட நம்பிக்கைகளை விட்டு ஒழிக்கவில்லை என்பது தான் பரிதாபம்.

● கே.வி. ராமன், சென்னை - 73

? உத்தரபிரதேச மாநிலத்தில் செயல்படுவது ஜனநாயகமா அல்லது சந்தர்ப்பவாதமா..?

! இரண்டுமில்லை; பச்சையான குதிரை வியாபாரம்.

● கு. அருணாசலம், தென்காசி

? ஜெயலலிதாவின் அண்மை டெல்லி பயணம் ரத்தானதுகூட தெரியாமல் அ.தி.மு.க. பெரும்புள்ளிகள் விமான நிலையத்தில் 'ஜெ'வை வழியனுப்ப வந்தார்களாமே..?

! அரசியலில் லாப-நஷ்டக் கணக்கு பார்ப்பதில் மட்டுமே கவனம் செலுத்தும் இது போன்ற கரும்புள்ளிகள், ஜெயலலிதா கேட்டுக் கொண்டால் ஏர்போர்ட்டிலேயே குடித்தனம் நடத்தக்கூடிய குலக்கொழுந்துகள்.

● எம்.சிவகுருநாதன், சென்னை - 42

? முதல்வர் ஜெ. மீது போடப்பட்டுள்ள வழக்குகள் அத்தனையும் இன்னும் மூன்று மாதத்தில் பொய் வழக்குகள் என்று ஆகிவிடும் என அமைச்சர் பொன்னையன் பேசியிருப்பது பற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்..?

! 'வழக்குகளை புஸ்வாணமாக்கும் மெகா திட்டத்திற்கு நான்தான் தளபதி' என்கிறார் பொன்னையன்.

● என். ஸ்ரீநிதி, தேவூர்

? பழைய மாத நாவல் ஒன்றைப் புரட்டும்போது, ஒரு வாசகரின் கேள்விக்குப் பதிலாக, எழுத்தாளர் பாலகுமாரன் கூறியிருந்தது அதிர்ச்சி ஏற்படுத்தியது - 'கல்கி என்றைக்குமே இலக்கிய எழுத்தாளர்களை ஆதரித்தது இல்லை. அது பம்மாத்து வேலைதான் செய்கிறது! என்று குறிப்பிட்டிருந்தாரே..?

! பாலகுமாரன் இதைச் சொல்லக் கூடாது. தாம் இலக்கிய எழுத்தாளர் அல்ல என்று தாமே கூறிக் கொள்வதற்கு ஒப்பாகும்.

● கல்லன் கிருஷ்ணராஜ், குன்னூர் ★

? மதத்தின் பெயரால் திபெத்தை, சீனாவின் ஆதிக்கத்திலிருந்து பிரிக்கச் சொல்லும் தலாய் லாமாவுக்கு அடைக்கலம் தந்துவிட்டு, அதே மத அடிப்படையில் காஷ்மீரைப் பிரிக்கும்படி போராடும் தலைவர்களைச் சுட்டுக் கொல்வது எவ்வகையில் நியாயம்?

! இந்தியாவைப் பொறுத்தமட்டில் திபெத் மற்றும் காஷ்மீரம் மதத்தின் அடிப்படையிலான போராட்டமல்ல. ஆக்கிரமிப்புக்கு எதிரான போராட்டம்.

● க.நா. இராஜேஸ்வரன், மொரட்டுப் பாளையம்

? 'தில்' படத்தில் வரும் போலீஸ் இன்ஸ்பெக்டரைப் பார்த்தால் உங்களுக்கு யார் ஞாபகம் வருகிறது?

! யார் ஞாபகம் வர வேண்டும் என்று நீங்கள் எதிர்பார்க்கிறீர்களோ அவர் ஞாபகம்தான். ஆனால் ஒரு முக்கியமான விஷயம் : 'தில்' படப்பிடிப்பு ஜூன் 30க்கு முன்னரே முடிந்து போய்விட்டது. அதனால் ஒரு வளமான கற்பனைக்கு அந்தஸ்து கூடிவிட்டது.

● கே. ராஜகோபால், பெங்களூர் - 95

? ஒப்பிடவும் : சர்ஜன் - வக்கீல் - மெகா சீரியல் டைரக்டர்...?

! அறுவையாளர்; இழுவையாளர் (வழக்கை)... மூன்றாமவர் இரண்டையும் செய்பவர்!

● எம். செந்தில்குமார், சென்னை - 92

? நிர்வாகம் சரியில்லை என்றால் பதவியிலிருந்து இளங்கோவனை நீக்குவதை விட்டுவிட்டு, சில காங்கிரசார் இரத்தத்தால் கையெழுத்திடுவது தேவைதானா...?

! ஒருவரைப் பதவியிலிருந்து இறக்க தீவிர முயற்சி எடுக்கும் காங்கிரசார், கட்சி கோஷ்டிப் பூசலை ஒழிக்க இதே அளவு முயற்சிகளைக் காட்டினால் பாராட்டலாம்.

● எஸ். அப்துல்லா அஹ்மது, நாகூர்

❑ ரூ.100 பரிசு பெறுபவர்
கே. சண்முகம்,
ஜெயசித்ரா ஸ்டோர்ஸ், மளிகை,
ஆதமங்கலம் புதூர் - 606 901

★ ரூ.50 பரிசு பெறுபவர் :
கல்லன் கிருஷ்ணராஜ்,
11சி, ஓட்டுப்பட்டரை,
குன்னூர் - 5, நீலகிரி - 643 105

? வட மாநிலங்களில் வெள்ளப் பெருக்கில் மூழ்கிச் செத்தாலும்கூட அந்த உபரி நீரைத் தென்னக நதிகளோடு இணைத்து, தென் மாநிலத்துக்குத் திருப்பி, வறட்சியைத் தீர்க்க உதவலாம் என்ற மனப்பான்மை இன்னும் ஏற்படாமைக்கு என்ன காரணம்..?

! அப்படி நதி நீரை இணைத்துப் பலன் கண்டுவிட்டால் அப்புறம் மேடைக்கு மேடை நதி நீர் இணைப்பு, நதிகளை தேசிய மயமாக்கல் போன்றவற்றை முழங்க வாய்ப்பிராதே என்று தயங்குகிறார்களோ என்னமோ...!

● கே. கணேசன், சென்னை - 16

? 'இலங்கையில் நிலவும் குழப்ப நிலை மற்றும் அரசியல் சட்ட நெருக்கடியிலிருந்து நாட்டைக் காப்பாற்ற, அனைத்துக் கட்சிகளும் ஒருமித்த கருத்துடன் முன் வந்தால் எனது பதவியை ராஜினாமா செய்யத் தயார்.. என்று இலங்கை அதிபர் சந்திரிகா அறிவித்துள்ளது பற்றி..?

! அப்படி ஒருமித்த கருத்து உருவாகாது என்ற தைரியம் சந்திரிகாவுக்கு இருந்திருக்கலாம்; ஆனால் அத்தகைய ஒருமித்த கருத்து உருவாகாத வரை இலங்கைக்கு விமோசனம் இல்லை.

# யார் மாதிரி..?



* 'ஒருமித்த' அறிவிப்பு!



? எது மனிதனுடைய வாழ்க்கையைச் செப்பனிடக் கூடியது..?

! பிரச்னைகளும் துன்பங்களும் தான். அவை நம்மைச் சிந்திக்க வைப்பதைப் போல் வெற்றியும் களிப்பும் சிந்திக்க வைப்பதில்லை.

● அஜார், சென்னை - 18

* கூடுதல் பாயிண்ட்!

# எல்லாமே ஓசி!

நமது நாட்டில், பொதுவாக பொருளுக்குக் கொடுக்கும் மதிப்பு செய்முறைக்குக் கொடுக்கப்படுவதில்லை. நாற்பதாயிரம் ரூபாய் கொடுத்து கம்ப்யூட்டர் வாங்குவார்கள். ஆனால் அதற்கான மென்பொருளைக் காசு கொடுத்து வாங்காமல் காப்பி அடிக்க முடியுமா என்று யோசிப்பார்கள். 'ஓசி' என்றால் அத்தனை விருப்பம்.

சிலர், டாக்டர்களை விட மருந்துக் கடைக்காரர்களை அதிகம் மதிப்பார்கள். "ரெண்டு நாளா ஜுரம், உடம்பு வலி, தலை சுத்தற மாதிரி இருக்கு. ஏதாவது மாத்திரை கொடுங்களேன்" என்பார்கள். மருந்துக் கடைக்காரரும் மனம் போல் மாத்திரைகள் கொடுப்பார். அவர்களிடம், 'இப்படிச் செய்வது அபாயமில்லையா?" என்று கேட்டால், "டாக்டரும் ஏறக்குறைய இதே மாத்திரையைத்தானே எழுதிக் கொடுக்கிறார்கள்? அவருக்கு எதற்கு அம்பதோ நூறோ தண்டம் அழ வேண்டும்?" என்று வாதாடுகிறார்கள்.

ஒரு பொருளை ஒருவரிடம் இனாமாகக் கேட்பதை கௌரவக் குறைவாக நினைக்கிறோம். பல சரக்குக் கடை வைத்திருக்கும் நமது நண்பரிடம் போய் 'ஏம்பா, அரை கிலோ துவரம் பருப்பு ஓசியாக் கொடேன்' என்று கேட்க மாட்டோம். ஆனால், சினிமா தியேட்டர் வைத்திருக்கும் நண்பரிடம் ஓசிப் பாஸ் கேட்கத் தயங்க மாட்டோம்.



ஓசி கேட்பவர்களைச் சமாளிப்பது ஒரு தனி கலைதான்!

என் நண்பர் ஒரு நியூரோ சர்ஜன்.

'டாக்டர் நான் தலையைக் குனிஞ்சுக்கறேன். அப்படியே ஃப்ரீயா ஒரு நியூரோ சர்ஜரி பண்ணிவிடுங்கள்' என்று சொல்லும் அளவிற்கு டாக்டரிடம் ஓசி அட்வைஸ் கேட்பார்கள் என்று சொல்வார் அவர்! ஒரு முறை இந்த டாக்டரைத் தெருவில் பார்த்த ஒரு கேசட் கடைக்காரர் (அவரும் டாக்டரின் நண்பர் தான்), எனக்கு ஒரு பக்கமாத் தலை வலிக்குது. நான் இப்போ இந்த மாத்திரை சாப்பிடறேன். மாத்திரைய மாத்தி வேற ஏதாவது சாப்பிடலாமான்னு சொல்லுங்களேன்' என்று வழிமறித்தார்.



"உங்கள் கையில் என்ன இருக்கிறது?" – இது டாக்டர்.

"இதுவா, கேசட் – காலி கேசட்"

''அப்படியா எனக்கு ஒரு டஜன் காலி கேசட் தேவைப்படுது. கொடுங்களேன்"

"ஹி... ஹி... இதோ பக்கத்துல தான் என் கடை இருக்கு. கடையிலதான் பில் புஸ்தகம் இருக்கு. வந்தீங்கன்னா வாங்கிட்டுப் போயிரலாம். அப்பறம் என் தலைவலியைப் பற்றி..."

"என் கிளினிக்கும் பக்கத்துல தான் இருக்குது. என் பில் புஸ்தகமும் அங்கதான் இருக்கு. வந்தீங்கன்னா நீங்களும் காசைக் கொடுத்துட்டு உங்க ப்ரிஸ்கிரிப்ஷனை வாங்கிட்டுப் போயிடலாம்" என்றார் டாக்டர்.

**வரலொட்டி ரங்கசாமி**

# நன்னம்பிக்கை முனை!

உச்சிக்கிளையில்
காகத்தின் மாளிகை!

கிணற்றின் வயிற்றில்
சிட்டுக்குருவியின் வீடு!

கான்கிரீட் கூரையின் கீழும்
கூடுகட்டுகின்றன தேனீக்கள்!

மின்சாரத் தூண்களிலும்
மேய்கின்றன அணில்கள்!

அடுப்பறை விட்டத்தையும்
அலங்கரிக்கிறது சிலந்தி!

அழியப்போவது தெரிந்தும்
தண்ணீரை ஆக்கிரமிக்கிறது பாசி!

சுவர்களின் முதுகிலும்
சுறுசுறுப்பு காட்டுகிறது
அரசக்கன்று.
நின்ற பின்னும் இருமுறை,
நேரங்காட்டுகிறது கடிகாரம்!

நண்பா!
தன்னம்பிக்கை
உன், துடுப்புகளில் இருந்தால்
நன்னம்பிக்கை முனையில்
நாளை நீ!

**பால.மூர்த்தி**

**வரலாற்றுச் சிறப்புமிக்க சோழன் பாறை கடந்த மூன்று மாதங்களாக வெடி வைத்துத் தகர்க்கப்பட்டு வருகின்றது. அதுவும் கனிம வளத்துறையினரால் கல் குவாரியாக அறிவிக்கப்பட்டு, உரிமம் வழங்கப்பட்டு சோழன் பாறை சிதைக்கப்பட்டு வருவதுதான் 'பகீர்' செய்தி!**

# சோழன் பாறைக்குச் சோதனை!



திருச்சி – உறையூர் காவல் நிலையத்திலிருந்து, மேற்கு நோக்கி உள்ள உய்யக் கொண்டான் ஆற்றங்கரைக்கு, ஒரு பாதுகாப்பு அரணாக அமைந்துள்ளது சோழன் பாறை.

குடமுருட்டி ஆற்றின் மூன்றாவது கிலோ மீட்டரில் அமையப்பெற்றுள்ள இது, சுமார் பத்து ஏக்கர் பரப்பளவுடன் கூடிய சுடும் பாறை. பாறை மீது அமர்ந்து பார்த்தால் வளைந்து நெளிந்து தவழ்ந்து ஓடி வரும் உய்யக் கொண்டான் ஆற்றின் அழகு தெரியும். உறையூரைத் தலைநகராகக் கொண்டு வாழ்ந்த சோழ மன்னர்களின் அரண்மனை இந்தப் பகுதியில் இருந்துள்ளதால் இதற்கு 'சோழன் பாறை' எனப் பெயர் " அமைந்திருக்கலாம் எனக் கூறுகிறார்கள். பாறைக்கு வெகு அருகில் இன்னமும் வீடுகளாக்கப்படாது மிச்சமிருக்கும் பச்சை வண்ண வயல்கள். அதனையொட்டியே விரிந்து செல்கின்றன பொது மக்கள் வசித்து வரும் குடியிருப்புப் பகுதிகள். அரசு செயல்பட்டிருந்தால் இதனை ஒரு சிறந்த சுற்றுலாத் தலமாகவும் உருவாக்கி இருக்கலாம். இப்பாறையின் உச்சி மீது வினாயகர் கோயில் உள்ளது. தற்போது விநாயகர் வீற்றிருக்கும் பாறையைத் தவிர்த்து சுற்றிலும் உள்ள பாறைப் பகுதியை ஆங்கில 'யு' வடிவத்தில் ஐம்பதடி ஆழத்துக்கு வெட்டிப் பள்ளமாக்கியுள்ளதால், அது ஒரு மாபெரும் அகழி போலத் தோற்றமளிக்கிறது.

சோழன் பாறையை ஒட்டியுள்ள ஆற்றங்கரைப் பகுதியைப் பொது மக்களும், சலவைத் தொழிலாளிகளும் பயன்படுத்துகிறார்கள்.

மேலும், இரண்டு ஆண்டுகளுக்கு முன் மிரட்டி விட்டுச் சென்றிருந்த வெள்ள அபாயம் இன்னும் இந்தப் பகுதி மக்களிடையே மறக்க இயலாமல் இருக்கின்றது. பொதுவாக கோரையாறு, அரியாறு உடைப்பெடுத்து, பெருகி வரும் வெள்ள நீருக்கு வடிகால் பிரதேசமாக இருந்து வருவது உய்யக் கொண்டான், குடமுருட்டி ஆற்றங்கரையோரப் பகுதிகளே. இந்த நிலையில் சோழன் பாறை வெடி வைத்துத் தகர்க்கப்பட்டு வருவதை, உய்யக் கொண்டான் ஆற்றங்கரைப் பகுதியைப் பலவீனப்படுத்தும் ஒரு செயலாகவே பொதுமக்கள் கருதுகிறார்கள்.

கட்டுரை, படம்:
**இருள் நீக்கியான்**

கல்கி 26.8.2001







## ஸ்ரீ ரங்கநாத பாதுகா வித்யாலயா

சின்ன ஆசிரமம், மேலூர் ரோடு, கொள்ளிடக்கரை,
ஸ்ரீரங்கம், திருச்சி-620 006. Ph : 430266

(பாரதிதாசன் பல்கலைக்கழகத்துடன் இணைக்கப்பெற்றது)

ஸ்ரீரங்கம் ஸ்ரீமத் ஆண்டவன் சுவாமிகளின் அனுக்ரஹத்துடன் கடந்த முப்பத்திமூன்று ஆண்டுகளாக நடைபெற்று வரும் நமது வித்யாலயாவில் கீழ்க்கண்ட வகுப்புகளுக்கான இவ்வாண்டு சேர்க்கை 01-06-2001 முதல் துவங்கி விட்டன.

### வகுப்புகள் / தகுதி

1. சிரோமணி — OSLC (OR) SSLC (தேர்ச்சி / தவறியவர்கள்)
   8–வது பாஸ் அல்லது 15–வயது பூர்த்தி
2. யஜுர் வேதம் — உபநயனம் 8 வயது முதல்
3. சாம வேதம் — உபநயனம் 8 வயது முதல்
4. திவ்ய பிரபந்தம் — உபநயனம் 8 வயது முதல்
   மேலும் தேசிகப் பிரபந்தம் பயில்பவர்களாக இருத்தல் வேண்டும்.

### சலுகைகள்

1. சேர்க்கை கட்டணம் கல்விக்கட்டணம் ஏதுமில்லை.
2. உணவு, உடை, உறைவிடம் இலவசம்.
3. பிரதிமாதமும் கணிசமான ஊக்கத்தொகை வழங்கப்படும்.
4. ஒவ்வொரு படிப்பையும் பூர்த்தி செய்து பரிட்சை கொடுத்தவர்களுக்கு தகுந்த சம்பாவனையும் சான்றிதழும் வழங்கப்படும்.
5. **உடன் விண்ணப்பிக்கவும்.**

குறிப்பு : இவ்வாண்டு முதல் எல்லா மாணவர்களுக்கும் கம்ப்யூட்டர் பயிற்சியும், 8-வது / 10th/+2 தேர்வு எழுதுவதற்கும் பயிற்சி அளிக்கப்படும்.



## மாபெரும் உலகத் தமிழ்க்கவிஞர்கள் மாநாடு

தமிழருவி 2001, சாதனைச் சிகரங்கள், நூல்கள் வெளியீட்டு விழா
மற்றும் சாதனையாளர்களுக்கு விருது வழங்கும் விழா

**நாள் : 14-10-2001** **இடம்: கலைவாணர் அரங்கம், சென்னை.**

இதயகீதம் இலக்கியப் பொதுநல இயக்கத்தின் மூலம் சென்ற ஆண்டு தஞ்சையில் மாபெரும் உலகத் தமிழ் கவிஞர்கள் மாநாடு நடத்தி உலகம் முழுவதும் உள்ள 1100 தமிழ்க் கவிஞர்களின் கவிதைகளை இணைத்து மாபெரும் கவிதை தொகுப்பான "கவியருவி 2000" வெளியிட்ட நமது இயக்கம், இவ்வாண்டு வரும் 14-10-2001ல் சென்னை கலைவாணர் அரங்கில் மாபெரும் உலகத்தமிழ் கவிஞர்கள் மாநாடு நடத்த உள்ளது.

இம்மாநாட்டில் உலகம் முழுவதும் உள்ள 2500 தமிழ்க் கவிஞர்களை இணைத்து மாபெரும் கவிதைத் தொகுப்பான "தமிழருவி 2001" கவிதை தொகுப்பு வெளியிடும் பணி தீவிரமாக நடைபெற்று வருகிறது. இந்நூலில் தங்களின் கவிதைகள் இடம்பெற ஒவ்வொரு கவிதைகளும் 24 வரிகளுக்குள் மூன்று கவிதைகளும், பாஸ்போர்ட் சைஸ் புகைப்படங்கள் இரண்டும் உடன் அனுப்பிவையுங்கள். மேலும் தங்களின் கதை,கட்டுரை,நாவல்களை எமது இதயகீதம் பதிப்பகம் மூலம் வெளியிட விரும்பினால் உடன் தொடர்பு கொள்ளுங்கள்.

இம்மாநாட்டில் ஒவ்வொரு துறையிலும் சிறந்து விளங்குபவர்களை தேர்வு செய்து விருது வழங்கி கௌரவிக்கின்றோம். இவ்விருது பெற சாதனையாளர்கள் தங்களின் வாழ்க்கைக் குறிப்பையும், சாதனைக் குறிப்பையும் அனுப்பிவையுங்கள்.

நீதியை நிலைநாட்டி அநீதியை வேரறுக்க வெளிவந்து கொண்டிருக்கும் நேயமான உதயகீதம் செய்தி இதழுக்கு
**ஏஜெண்டுகளும் நிருபர்களும் தேவை. உடன் தொடர்பு கொள்ளவும்**

கவிஞர். இரா. எழிலரசு மாநிலத் தலைவர்
இதயகீதம் இலக்கியப் பொதுநல இயக்கம்
எண்.4, வைரம் நகர், திருநாவுக்கரசு நகர் பூணிட், தஞ்சாவூர் - 613 005. போன்-04362-33602,66452 - செல்:098424-54266




# ஆதித்யா அநிருத்யா

## வாழும் கல்கி கதாபாத்திரங்கள்!

பேராசிரியர் கல்கியின் அழியாப் புகழ் பெற்ற 'பொன்னியின் செல்வன்' வரலாற்றுப் புதினத்தில் வரும் கதாபாத்திரங்கள் யாவுமே வைரமெனப் பிரகாசிப்பவை! அவற்றுள் அன்பில் 'அநிருத்தப் பிரம்மராயர்' என்ற பெயரை என் பேத்தியின் மகனுக்குச் சூட்டி மகிழ்ந்துள்ளோம். எங்கள் ஊருக்கு அருகாமையில் உள்ள 'அன்பில்' அந்த மாமேதையின் சொந்த ஊர் என்பதிலும் எங்களுக்குப் பெருமை.

- கே. சந்தான கிருஷ்ணன்,
தஞ்சாவூர்

தாங்கள் குறிப்பிட்டிருப்பது போல், கல்கி அவர்களின் எழுத்தின் ஈர்ப்பால்தான், எங்கள் ஒரே பெண்ணுக்கு 'வானதி' என்று பெயர் சூட்டினோம். முப்பத்து நான்கு வயதாகும் வானதி பி.எச்.டி. பட்டதாரி, பயோ இன்ஜினியரிங்கில் டாக்டரேட் வாங்கியிருக்கிறார். அருமையாக நடனம் ஆடுவார். வீணை வாசிப்பார். பொன்னியின் செல்வனில் வர்ணிக்கப்படும், சோழ ராஜகுமாரி, வானதியின் குணாதிசயங்களிலிருந்து வேறுபட்டாலும், இவரும் கலை காவியம், கவிதை என ஆர்வம் கொண்டிருக்கிறார். அமரர் கல்கி எழுதிய எல்லா படைப்புகளும் எங்களிடம் உள்ளன. தவிர, இப்பொழுது ஜெயா டீ.வி.யில் ஒளிப்பரப்பப்பட்டு வரும் 'அலை ஓசை'யையும் தவறாமல்



• வானதி

கல்கி 26.8.2001

ரசிக்கிறோம்.

- இந்திரா கோபாலகிருஷ்ணன், பெங்களூர்

எங்களுக்குப் பெண் குழந்தை பிறந்தபோது தமிழ் மற்றும் கல்கி படைப்புகளின்மீது ஏற்பட்ட அன்பின் காரணமாக எனது மைத்துனர் அசோகன் அவர்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட பெயர் பூங்குழலி. பூங்குழலியைப் போலவே எங்கள் மகளும் படு கட்டியாக, தமிழில் ஆர்வமுள்ளவளாக இருக்கிறாள்.

- கணேசமூர்த்தி, கரூர்



* ஆதித்யா - அநிருத்யா



* அநிருத்தன்



* சேந்தன் அமுதன்



* பூங்குழலி

தந்தை, வளவனூர் - எஸ். பெருமாள் ஐயர் அமரர் 'கல்கி'யின் ஆப்த நண்பர் - அவரது எழுத்துக்களைப் பாராட்டவே பலமுறை சென்னை வந்தவர். சத்யமூர்த்தியுடன் உப்பு சத்யாக்கிரகம் செய்தவர்.

எனக்குப் பிறந்த ஒரே மகனுக்கு அப்போதைய என் கனவு கதாபாத்திரமான சேந்தன் அமுதன் பெயரை வைத்தபோது, என் தந்தை பெரிதும் மகிழ்ந்தார். அமுதன் - அமுதனாகவே வளர்ந்தான்.

தற்போது கனடா நாட்டு 'டொராண்டோ'வில் மனைவி, குழந்தை அக்ஷயனுடன் வசிக்கிறார். அவர் இன்றைக்கும் 'கல்கி'யின் பரம ரசிகர்.

- ஜி.சேகர், சென்னை-83

எனது தாயாரின் தூண்டுதலால் சிறு வயதிலேயே 'பொன்னியின் செல்வன்' படித்திருக்கிறேன், திருமணத்திற்குப் பிறகு நானும் என் மனைவியும் மீண்டும் படித்து, ரசித்து, எங்கள் பிள்ளைகளுக்குப் 'பொன்னியின் செல்வன்' கதாபாத்திரங்களின் பெயரை வைக்க முடிவு செய்தோம். அதன்படி எங்களது இரு மகன்களுக்கும் 'ஆதித்யா, அநிருத்யா' என பெயர் சூட்டினோம். பிள்ளைகளின் பெயர்களைக் கேட்பவர்கள். "என்ன, 'கல்கி' ஸாரோட காரக்டர்ஸா?" என்று மகிழ்ந்து போகிறார்கள்.

- மீ. இரவிக்குமார், சென்னை-20

அடுக்குமாடிக் கட்டடங்களில் குடி இருப்போர் தங்கள் பகுதியின் முன்புறம், ஒரு குறிப்பிட்ட தினத்தன்று, துவைத்த உள்ளாடைகளைக் காயப் போடக் கூடாது என இத்தாலியிலுள்ள ஜெனோவா நகர நிர்வாகம் அறிவிப்பு செய்தது. காரணம்? அந்த நாளில், அந்த நகரில் நடக்கும் எண்மர் (ஜி.8) உச்ச மாநாட்டில் கலந்து கொள்ள வருகை தரும் அமெரிக்க ஜனாதிபதி புஷ், ரஷ்யத் தலைவர் புட்டின் முதலிய உலகப் பிரமுகர்கள் நகரத்தின் வீதி வழியே அழைத்து வரப்படும்பொழுது, அவர்கள் கண்ணில் அக்காட்சி பட்டால் முகம் சுளிக்க வைக்குமாம்!

- க. மாரியப்பன், கோவை.



புகழின் உச்சியில் இருந்த ஒருவரின் உயிரை இரண்டு முறை காப்பாற்றும் வாய்ப்பு ஒருவருக்குக் கிடைத்தது.

இங்கிலாந்து பிரதமர் வின்ஸ்டன் சர்ச்சில் குழந்தையாக இருந்தபோது நீச்சல் குளத்தில் தவறி விழுந்து உயிருக்குப் போராடிக் கொண்டிருந்தார். அச்சமயம் 'அலெக்ஸாண்டர் பிளமிங்' என்பவர் அவரைக் காப்பாற்றினார்.

உலகப்போர் நடந்து கொண்டிருந்தபோது சர்ச்சில், கடுமையான காய்ச்சலினால் பாதிக்கப்பட்டு, மிகவும் கவலைக்கிடமாக இருந்தார். அப்போதும் அலெக்ஸாண்டர் பிளமிங்தான் அவருக்கு வைத்தியம் பார்த்து பிழைக்க வைத்தார்.

அந்த அலெக்ஸாண்டர் பிளமிங் வேறு யாருமில்லை. 'பென்சிலின்' மருந்தைக் கண்டு பிடித்தவரே தான்.

- எம்.விநோத்



ஃபிரான்ஸ் நாட்டில் ஒரு கருத்துக் கணிப்பு நடத்தினார்கள். அதாவது 'கருத்துக் கணிப்புகள் தேவையா?' என்று ஒரு கருத்துக் கணிப்பு (!). இதில் தேவை : 64%, வேண்டாம் 28%, கருத்து சொல்ல விருப்பமில்லை 8%.

- அரிச்சந்திரன், சென்னை




நாணயத்தின் விளிம்புகளை நெளிவுகளுடன் உருவாக்குவதற்கான காரணம் தெரியுமா? அந்தக் காலத்தில் நாணயங்கள் தங்கத்திலும், வெள்ளியிலும் தயாரிக்கப்பட்டன. அவற்றை யாரும் உரசி எடுத்து விடக்கூடாது என்பதற்காகத்தான் ஓரங்களில் வளைவுகள் வைக்கப்பட்டன. இதன் காரணமாக தங்கமோ, வெள்ளியோ உரசி எடுக்கப்பட்டிருந்தால் அது, உடனே தெரிந்து போய்விடும். அத்தகைய நாணயங்களை யாரும் வாங்க மாட்டார்கள்.



- முகைதீன் பாத்திமா, அருப்புக்கோட்டை

ஒரு சதவிகித மக்கள் தியானம் செய்தால் 10% வன்முறை குறையும்.

- நாராயணன், சென்னை

திருமாலின் பத்தாவது அவதாரமான கல்கி எப்போது ஏற்படும்



என்பதை விஷ்ணு புராணம் இவ்வாறு கூறுகிறது:

சமூகத்தில் சொத்து மட்டுமே உயர்நிலையைக் கொடுக்கும். பொருட்செல்வம் மட்டுமே நற்பண்புக்கு மூலமாகும். காமம் ஒன்றே கணவன் மனைவி ஆகியவரை இணைக்கும் கட்டமாகும். பொய்மை வாழ்க்கையின் வெற்றிக்குக் காரணமாகும். பால் உணர்ச்சியே இன்பத்துக்கு ஒரே வழியாகும். வெளிப்படையான அலங்காரங்களே அகச் சாயமென்று குழம்புவார்கள். இத்தகைய நிலை முற்றும்போது கல்கி அவதாரம் ஏற்படும்.

**- ஜி.கே.எஸ்.மூர்த்தி, கோபிசெட்டிப்பாளையம்**



"இதயம், வயிறு, குடல், முகம் ஆகிய உட லுறுப்புகள் இசைப் பயிற்சியினால் நன்றாக இயங்கு கின்றன. சுவாசம், இதயம் ஆகியன பட படப்பின்றி நன்கு செயல்படுவதால் தசை நார்கள் இதமடைந்து ஊட்டம் பெறுகின்றன. நோயற்று வாழ தினமும் இசை பயிலுங் கள்" என்று மேனாட்டு உடற்கூறு நிபுணரான டாக்டர் மெக்பேடன் குறிப்பிடுகின்றார். வாத்திய இசை யைவிட வாய்ப்பாட்டுதான் இசை மகத்துவத்துக்கு உகந்ததாம்!

**- தெ. இராமன், சென்னை**



உங்களால் சூரியனை நோக்கி, மணிக்கு 60 மைல் வேகத்தில் ஒரே சீராக இடைவெளியின்றி, காரில் செல்ல முடியுமானால் 176 வருடங்களில் சூரியனை அடைந்து விடலாம்!

சனிக்கோளின் அடர்த்தி மிகக் குறைவானது. அதாவது, சனிக் கோள் கொள்ளுமளவிற்கு ஒரு பெரிய சமுத்திரம் இருந்து, அதில் சனிக்கோளை வைத்தால் ரப்பர் பந்து போல் மிதக்கும்.





தாயின் வயிற்றில் இருக்கும் குழந்தைக்குத் தாயின் உடலிலிருந்து, தொப்புள் கொடி மூலம்தான் தேவையான உயிர் சத்துக்கள் செல்கின்றன என்பதை அறிவோம். ஆனால் தாயின் ரத்தம் ஒருபோதும் கருப்பை சிசுவின் ரத்தத்துடன் நேரி டையாகக் கலப்பதில்லை. இரு வரது ரத்தக் குழாய்களும் பிளாசென்டர் டிஸ்கில் பின் னிப்பிணைந்து உயிர்ச் சத்துக்களையும், கழி வுகளையும் மாற்றிக் கொள்கின்றன.

**- கௌசல்யா ஸ்ரீவத்ஸவன், கோவை**



# தேன்கூடு

# சிவகாமியின் சபதம்

ஏழாம் அத்தியாயம்

## நிலா முற்றம்

ஆயனரிடமும் சிவகாமியிடமும் விடை பெற்றுக்கொண்ட பிறகு மகேந்திர சக்கரவர்த்தியும் மாமல்லரும் குதிரைகளைத் திருப்பி அதிவேகமாய் விட்டுக்கொண்டு போய், அரண்மனையை அடைந்தார்கள். அவர்களைக் கண்டதும் அரண்மனை வாசலில் காவல் புரிந்து கொண்டிருந்த வீரர்கள், "வாழ்க! வாழ்க! சக்கரவர்த்திப் பெருமான் வாழ்க! மாமல்ல மகாவீரர் வாழ்க!" என்று கோஷித்துக்கொண்டு அவர்களுக்கு வணங்கி வழிவிட்டு நின்றார்கள். காவலர்களுடைய வாழ்த்து ஒலியுடன் அங்கே வரிசை வரிசையாக நின்ற குதிரைகளின் கனைப்பு ஒலியும் சேர்ந்தது. அரண்மனை முன் வாசலைத் தாண்டி அவர்கள் உள்ளே நுழைந்ததும் அங்கேயிருந்த விசாலமான நிலா முற்றத்தில் வீரர்கள் பலர் அணி வகுத்து நிற்பது தெரிந்தது. சக்கரவர்த்தியையும் குமார பல்லவரையும் கண்டதும் அந்த வீரர்களும் ஜயகோஷம் செய்தார்கள். எல்லோருக்கும் முன்னால் நின்ற ஒருவர் மட்டும் தனியே பிரிந்து முன்னால் வந்து பணிவுடன் நிற்க, சக்கரவர்த்தி அவரைப் பார்த்து, "சேனாபதி! தூதர்களுக்கு எல்லா விஷயமும் சொல்லியாகிவிட்டதா! புறப்படுவதற்கு ஆயத்தமாயிருக்கிறார்களா?" என்று கேட்டார்.

"ஆம், பிரபு! எல்லோருக்கும் சொல்லியாகிவிட்டது. அவரவர்களும் இன்னின்ன திக்குக்குச் செல்ல வேண்டுமென்று தெரிவித்துவிட்டேன். எல்லாரும் கிளம்ப ஆயத்தமாய்த் தங்களுடைய

அமரர் கல்கி



கட்டளைக்காகக் காத்திருக்கிறார்கள்'' என்று சேனாதிபதி கூறினார்.

சக்கரவர்த்தி நரசிம்ம வர்மரைப் பார்த்து, "குழந்தாய்! உன் தாயார் கவலையுடன் இருப்பாள். அவளிடம் சென்று விஷயம் இன்னதென்று தெரியப்படுத்து. இருவரும் போஜனத்தை முடித்துக்கொண்டு, மேல் மாடத்துக்குச் செல்லுங்கள். இந்தத் தூதர்களை அனுப்பிவிட்டு நானும் அங்கு வந்து சேருகிறேன்'' என்றார்.

வெகுகாலம் சமணராயிருந்த காரணத்தினால் சக்கரவர்த்தி இரவில் போஜனம் செய்வதில்லை. சைவரான பிறகும் அவர் இரவில் உணவு

அருந்தும் வழக்கத்தை மேற்கொள்ள வில்லை.

"ஆகட்டும், அப்பா! இதோ போகி றேன். ஆனால், எல்லாப் படைகளும் வந்து சேரும் வரையில் காத்திருக்க வேண் டுமா? ஆயத்தமாயிருக்கும் படைகள் உடனே போருக்குப் புறப்படலாமல் லவா?"

சக்கரவர்த்தி புன்னகையுடன், "அதைப் பற்றி யோசிக்கலாம். குழந்தாய்! நீ இப்போது தாயாரைப் போய்ப் பார்!" என்றார்.

மாமல்லர் போன பிறகு, மகேந்திரர் சேனாபதியைப் பார்த்து, "கலிப்பகை யாரே! தூதுவர்களிடம் சொல்லி அனுப்ப வேண்டிய செய்தி இது; தொண்டை மண் டலத்திலும் சோழ மண்டலத்திலும் உள்ள ஒவ்வொரு கோட்டத்திலும் ஆயிரம் வீரர் அடங்கிய படைகளைத் திரட்டி ஆயத்த மாய் வைத்திருக்க வேண்டியது. மறுபடி யும் செய்தி அனுப்பியவுடனே படை புறப்படச் சித்தமாயிருக்க வேண்டும். நான் சொல்வது தெரிகிறதா?" என்றார்.

"தெரிகிறது, பிரபு!"

"கோட்டையைப் பத்திரப்படுத் துவதற்கு வேண்டிய ஏற்பாடு எல்லாம் செய்தாகிவிட்டதல்லவா?"

"கிழக்குக் கோட்டை வாசலைத் தவிர மற்ற மூன்று வாசல்களையும் அடைக்கச் சொல்லிவிட்டேன். அப்புறம் துறவறத் தாரைத் தவிர வேறு யாரையும் விசாரி யாமல் கோட்டைக்குள் விடக் கூடா தென்று கட்டளையிட்டிருக்கிறேன். வெளியே போகிறவர்களையும் கவனிக் கச் சொல்லியிருக்கிறேன். நகருக்குள் ளேயும் யார் பேரிலாவது சந்தேகத்துக்கு இடமிருந்தால் சிறைப்படுத்திக் காவலில் வைக்கச் சொல்லியிருக்கிறேன்."

"கோட்டை சுவரெல்லாம் பழுது பார்த்திருக்கிறதா? சேனாபதி! பல்லவ சாம்ராஜ்யம் நிலைத்து நிற்பது இந்தக் காஞ்சிக் கோட்டையின் பாதுகாப்பையே பொறுத்திருக்கலாம்."

"பல்லவ சாம்ராஜ்யத்தைப் பாதுகாப் பதற்குக் காவேரி முதல் கிருஷ்ணா நதி வரையில் லட்சோப லட்சம் வீரர்கள் காத்திருக்கிறார்கள், பிரபு!"

"உண்மைதான்! ஆனால், அவர்கள் வெறும் கையினால் சண்டை போட முடி யாதல்லவா? அந்த லட்சோப லட்சம் வீரர்களுக்கும் வேண்டிய வேல்களும் வாள்களும் எங்கே?" என்றார் சக்கர வர்த்தி.

சேனாபதி கலிப்பகையார் மௌனம் சாதித்தார்.

"ஈழைச் சோழ நாட்டில் வாளும் வேலும் நன்றாய்ச் செய்வார்கள் போலிருக்கிறது. யானை மேல் எறியப் பட்ட வேலை நீர் பார்த்தீரா?"

"இல்லை பிரபு!"

"மாமல்லனிடம் அது இருக்கிறது. 'மாமாத்திரர்' என்று எழுதியிருக்கிறது. 'மாமாத்திரர்' என்ற பட்டம் ஈழைச் சோழ நாட்டிற்கு உரியதல்லவா!"

"ஆம், பல்லவேந்திரா!"

"அந்த வேலை எறிந்தவன் ஈழைச் சோழ நாட்டானாய்த்தானிருக்க வேண் டும். அம்மாதிரி வேல் எறியக்கூடிய வீரர் கள் ஆயிரம் பேர் இருந்தால் இந்தக் கோட்டைக் காவலைப் பற்றிக் கவலை யில்லை!"

"பல்லவ சைனியத்தில் எத்தனையோ ஆயிரம் வேல் வீரர்கள் இருக்கிறார்கள், பிரபு!"

"அந்த வேலை எறிந்தவன் பதினா யிரத்தில் ஒரு வீரன்: அவனை அவசியம் கண்டுபிடிக்க வேண்டும்."

சேனாபதி மௌனமாயிருந்தார்.

"இன்னும் ஒரு விஷயம்; காவித்துணி அணிந்தவர்களைப் பற்றிய கட்டளையை மாற்ற வேண்டும். ஆயனரையும் அவர் மகளையும் பார்த்துவிட்டு நாங்கள் திரும் பிய போது ஒரு சந்தின் முனையில் ஒரு பிக்ஷு நிற்பதைப் பார்த்தேன். சட்டென்று அவர் நிழலில் மறைந்துகொண்டார்."

"கட்டளை என்ன பிரபு?"

"இராஜ விஹாரத்தின் மேல் கவனம் வைத்து, புதிதாக வந்திருக்கும் புத்த பிக்ஷு யார் என்று பார்க்க வேண்டும்."

"உடனே ஏற்பாடு செய்கிறேன்."

பிறகு, சேனாபதி கலிப்பகையார் ஒவ்வொரு தூதராக அழைத்து இவரிவர் இன்னின்ன கோட்டத்துக்குப் போகிறார் என்று சக்கரவர்த்தியிடம் தெரியப்படுத் தினார். தூதர்கள் தனித் தனியே சக் கரவர்த்திக்கு வணங்கி விடை பெற்றுக் கொண்டு தத்தம் குதிரை மீதேறி விரைந்து சென்றார்கள்.

எட்டாம் அத்தியாயம்

# புவன மகாதேவி

மாமல்லர் தந்தையின் சொற்படி அரண்மனை நிலா முற்றத்தைக் கடந்து சென்று, உள் வாசலை நெருங்கியதும் குதிரை மீதிருந்து இறங்கினார். அங்கே சித்தமாய்க் காத்திருந்த பணியாட்கள் குதிரைப் பிடித்து அப்பாலே கொண்டு சென்றார்கள்.

பிறகு, மாமல்லர் விசாலமான அந்த அழகிய அரண்மனைக்குள் பிரவேசித்து, தீபம் ஏந்துவோர் தம்மைப் பின் தொடர்ந்து வருவதற்குத் திணறும்படியாக, அவ்வளவு விரைவாக நடந்து சென்றார்.

புதிதாக அந்த அரண்மனைக்குள் பிரவேசிக்கிறவர்கள் அங்கே குறுக்கு நெடுக்குமாகச் சென்ற நடைபாதைகளில் வழி கண்டுபிடித்துச் செல்வது அசாத்தியமாயிருக்கும். நரசிம்மர் அந்தப் பாதைகளின் வழியாக வளைந்து வளைந்து சென்று அரண்மனை அந்தப்புரத்தை அடைந்தார். அங்கே சிற்ப வேலைகளினால் சிறப்படைந்த ஒரு வாசலை அவர் அணுகியதும், "குழந்தாய்! வந்தாயா?" என்று உள்ளேயிருந்து ஒரு குரல் கேட்டது.

பல்லவ சாம்ராஜ்யத்தின் பட்டத்தரசியான புவன மகாதேவி அந்தப்புர வாசற்படியில் வந்து நின்றார். அவருடைய, கம்பீரமான தோற்றமும் முதிர்ந்த சௌந்தர்ய வதனமும், "திருபுவன சக்கரவர்த்தினி" என்று பல்லவ சாம்ராஜ்யத்தின் பிரஜைகள் அவரைக் கொண்டாடுவது முற்றும் பொருந்தும் என்று தெரியப்படுத்தின.

"அம்மா!" என்ற குரலுடன் அருகில் வந்த குமாரனைச் சக்கரவர்த்தினி இரு கைகளாலும் அணைத்துக்கொண்டு, "குழந்தாய்! இன்றைக்கு..." என்று ஏதோ சொல்லத் தொடங்குவதற்குள், மாமல்லர், "அம்மா! உங்களை ரொம்பவும் கெஞ்சிக் கொட்டுக்கொள்கிறேன். ஒரு வரம் தர வேண்டும்!"

புவனமகாதேவியின் முகத்தில் புன்னகை அரும்பியது.

"வரமா? நல்லது, கேள்! தருகிறேன். அதற்குப் பிரதியாக நானும் ஒரு வரம் கேட்பேன். அதை நீ தர வேண்டும்!" என்று அன்பு கனிந்த குரலில் கூறினார்.

மாமல்லர், "பிள்ளை அன்னையிடம் வரம் கேட்பது நியாயம். பிள்ளையிடம் தாய் வரம் கேட்பது எங்கேயாவது உண்டா? முடியவே முடியாது!" என்றதும், புவன மகாதேவியின் முகத்தில் புன்னகை மறைந்தது.

இருவரும் உள்ளே சென்றார்கள்.

நரசிம்மர் தமது தலை அணியையும் ஆபரணங்களையும் எடுத்து வைத்து விட்டுக் கால் கை சுத்தம் செய்துகொண்டு வந்தார். பிறகு இருவரும் அந்தப்புரப் பூஜா மண்டபத்துக்குள் பிரவேசித்தார்கள். அங்கே, மத்தியில் நடராஜ மூர்த்தியின் திருவுருவம் திவ்ய அலங்காரங்களுடன் விளங்கியது. பின்புறச் சுவர்களில் சிவபெருமானுடைய பல வடிவங்களும், பாலகோபாலனுடைய லீலைகளும் விதவிதமான வர்ணங்களில் அழகாகச் சித்திரிக்கப்பட்டிருந்தன.

பூஜையெல்லாம் முன்னமே முடிந்தபடியால், தாயும் மகனும் அந்தத் திருவுருவத்தை வழிபட்டுவிட்டு வெளியே வந்து போஜன மண்டபத்துக்குள் பிரவேசித்தார்கள்.

உணவருந்த உட்கார்ந்ததும் புவன மகாதேவி, "குழந்தாய்! ஏதோ முக்கியமான செய்தி வந்திருக்கிறதாம்! கோட்டை வாசல் எல்லாம் சாத்தியாகி விட்டதாம். அரண்மனையெல்லாம் அல்லோலகல்லோலப் படுகிறது. எனக்கு மட்டும் ஒன்றுமே தெரியவில்லை. நீயாவது சொல்லக் கூடாதா? பெண்கள் என்றால் மட்டமானவர்கள். அவர்களுக்கு ஒன்றுமே தெரிய வேண்டியதில்லையென்பதாக நீ கூடவா எண்ணம் வைத்திருக்கிறாய்?" என்றார்.

மாமல்லர் உணவு பரிமாறிக் கொண்டிருந்த பணியாட்களைப் பார்த்துவிட்டு, "அம்மா, சாப்பிட்டானதும் மேல் மாடத்துக்குப் போய் எல்லா விவரங்களும் சொல்கிறேன். ஆனால், ஒன்று மட்டும்



இப்போதே கேட்டுக்கொள்கிறேன். இனிமேல் தினந்தோறும் நான் வந்த பிறகுதான் தாங்கள் இராப் போஜனம் செய்வது என்று வைத்துக் கொள்ளக் கூடாது. அந்த வழக்கத்தை இன்றோடு நிறுத்தி விட வேண்டும்'' என்றார்.

சக்கரவர்த்தினி குமாரனை அன்பு ததும்பிய கண்களால் பார்த்துப் புன்னகை புரிந்தார். ஆனால், மறுமொழி ஒன்றும் சொல்லவில்லை.

காஞ்சி அரண்மனையில் பகல் போஜனம் ராஜரீக சம்பிரதாயங்களுடன் ஆடம்பரமாய் நடப்பது வழக்கம். பெரிய சாம்ராஜ்ய உத்தியோகஸ்தர்கள், சிவனடியார்கள், வைஷ்ணவப் பெரியார்கள், பிரசித்தி பெற்ற கலைஞர்கள், தமிழ்க்



கவிஞர்கள், வடமொழிப் பண்டிதர்கள் முதலியோர் விருந்தாளிகளாக அழைக் கப்படுவது உண்டு.

எனவே, பகல் போஜன நேரத்தில் அரண்மனைவாசி கள் ஒருவரோடொருவர் அளவளாவுதல் இயலாத காரியம்.

மற்றும் பகல் நேரமெல் லாம் சக்கரவர்த்தியும் குமாரரும் ராஜரீக காரியங் களில் ஈடுபட்டிருப்பார்கள்.

எனவே தாயும் பிள்ளை யும் சந்திப்பதற்கு இராப் போஜன நேரத்தை சக்கர வர்த்தி திட்டம் செய்திருந் தார்.

அதற்குப் பிறகு அரண் மனைமேல் உப்பரிகையின் நிலா மாடத்தில் அவர்கள் மூன்று பேரும் சந்தித்துப் பேசுவது வழக்கமாயிருந் தது.

இன்றைக்குச் சாப் பாடு ஆனதும் தாயும் புதல் வனும் மேல் உப்பரிகைக்குச் சென்று நிலா மாடத்தில் அமைந்திருந்த பளிங்குக் கல் மேடையில் அமர்ந்தார்கள்.

பால் நிலவில் மூழ்கி யிருந்த காஞ்சி நகரமானது அன்றிரவு என்றுமில்லாத அமைதி பெற்று விளங் கிற்று.

நரசிம்மவர்மருடைய மனம் அந்நகரின் கீழ்க் கோட்டை வாசலுக்குச் சென்றது. இப்போது அந்தக் கோட்டை வாசலைக் கடந்து ஒரு சிவிகை போய்க் கொண்டிருக்கும். அந்தச் சிவிகையில் ஆயனரும் அவர் மகளும் அமர்ந்திருப் பார்கள்.



*ஆகா! அவர்களுக்குத்தான் இன்றைக்கு எப்பேர்ப்பட்ட ஆபத்து வந்தது! மத யானையின் மீது வேல் எறிந்து அவர்களைக் காப்பாற்றிய வீரன் யாராக இருப்பான்...?*

புதல்வன், தானே பேசுவான் என்று புவன மகாதேவி சிறிது நேரம் காத்திருந்தார். அவன் ஏதோ சிந்தனையில் ஆழ்ந்து விட்டான் என்பதைத் தெரிந்து கொண்டு, ''குழந்தாய்!'' என்றார்.

உடனே மாமல்லர் திடீரென்று கனவு கலைந்தவர் போல் திடுக்கிட்டுத் தாயாரைப் பார்த்தார்.

''அம்மா! அம்மா! நான் உங்களிடம் கேட்க விரும்பிய வரத்தைக் கேட்டே விடுகிறேன். உங்களுக்குப் புண்ணியமாய்ப் போகட்டும். என்னைக் 'குழந்தாய்' என்று கூப்பிடாதீர்கள். நான் இன்னும் பச்சைக் குழந்தையா? பல்லவ ராஜ்யத்திலுள்ள புகழ் வாய்ந்த மல்லர்களையெல்லாம் ஜயித்து 'மாமல்லன்' என்று பட்டம் பெற்ற பிறகும், என்னைக் 'குழந்தை,

குழந்தை' என்றால் நான் என்ன செய்கிறது? அப்பாவோ இன்னும் என்னைத் தொட்டிலில் கிடக்கும் குழந்தையாகவே எண்ணி நடத்துகிறார்! உங்கள் இரண்டு பேருக்கும் இடையில் நான் அகப்பட்டுக் கொண்டு...''

''அதற்கு என்ன செய்யலாம்? பெற்றோர்களுக்கு மகன் எப்போதும் குழந்தைதான்'' என்ற குரலைக் கேட்டுத் தாயும் மகனும் திரும்பிப் பார்த்தார்கள். அவர்களுக்குத் தெரியாமல் மகேந்திர சக்கரவர்த்தி பின்னால் வந்து நிற்பதைத் தெரிந்துகொண்டு இருவரும் பயபக்தியுடன் எழுந்து நின்றார்கள்.

மகேந்திரர் பளிங்கு மேடையில் அமர்ந்ததும் புவன மகாதேவியும் மாமல்லரும் உட்கார்ந்தார்கள். ''தேவி! குழந்தை ஏதாவது சொன்னானா?'' என்று சக்கரவர்த்தி கேட்டார்.

''இன்னும் ஒன்றும் சொல்லவில்லை. என் பேரிலும் உங்கள் பேரிலும் குறைதான் சொல்லிக்கொண்டிருந்தான்!''

''குறை சொல்லாமல் வேறு என்ன சொல்லட்டும், அப்பா! பல்லவ ராஜ்யத்தில் அந்நியர் பிரவேசித்த செய்தி கிடைத்த பிறகு நாம் வெறுமனே கையைக் கட்டிக் கொண்டு உட்கார்ந்திருப்பதா? சேனாபதி கலிப்பகையார் சேனை திரட்டுவதற்குள் கலியுகமே முடிந்துவிடும் போலிருக்கிறதே? இத்தனை நேரம்



நமது சைனியம் போருக்குக் கிளம்பியிருக்க வேண்டாமா?'' என்று கொதித்தார் மாமல்லர்.

''பல்லவ ராஜ்யத்தில் அந்நியர் பிரவேசித்தார்களா? இது என்ன?'' என்று புவன மகாதேவி வியப்பும் அவநம்பிக்கையும் தொனித்த குரலில் கேட்டார்.

"ஆம், தேவி! அற்ப சொற்பமாகப் பிரவேசிக்கவில்லை, பெரும் படைகளுடன் திடீரென்று பிரவேசித்திருக்கிறார்கள்...''

"பல்லவேந்திரா! மந்திராலோசனை சபையில் நான் மட்டும் வாயைத் திறக்காமல் இருக்க வேண்டும் என்று கட்டளையிட்டிருக்கிறீர்கள்? எல்லாரும் ஏதோ பேசியபோது என் மனம் கொதித்த கொதிப்பை மிகவும் முயன்று அடக்கிக்கொண்டிருந்தேன்...''

மாமல்லரின் பேச்சை மறுத்துச் சக்கரவர்த்தி தமது பட்ட மகிஷியைப் பார்த்துச் சொன்னார்; ''தேவி! நரசிம்மன் இன்னும் குழந்தையாகத்தான் இருக்கிறான். வந்திருக்கும் யுத்தம் எப்பேர்ப்பட்டதென்பதை அவன் அறியவில்லை. இரண்டு பேரும் கேளுங்கள். வாதாபி மன்னன் புலிகேசி பெரும் படைகளுடன் துங்கபத்திரை நதியைக் கடந்து நமது ராஜ்யத்துக்குள் பிரவேசித்திருக்கிறான். அவனுடைய சைனியத்தில் லட்சக்கணக்கான வீரர்கள் இருக்கிறார்களாம். ஆயிரக் கணக்கில் யானைகள் இருக்கின்றனவாம். பெரிய காளைகள் பூட்டிய நூற்றுக்கணக்கான வண்டிகள் தொடர்ந்து வருகின்றனவாம். பதினாயிரக்கணக்கான குதிரை வீரர்கள் வருகிறார்களாம். வெகு காலமாகவே புலிகேசி இந்த யுத்த ஏற்பாடுகளைச் செய்து வந்திருக்கிறான். நமது ஒற்றர்கள் எப்படியோ ஏமாந்து போயிருக்கிறார்கள். நமது எல்லைக் காவல் படைகளைப் புலிகேசியின் ராட்சத சைனியம் வெகு சீக்கிரத்தில் முறியடித்துவிட்டு அதிவேகமாக முன்னேறி வருகிறதாம். அந்தச் சைனியத்தைத் தடுத்து நிறுத்துவதற்கு வேண்டிய படை பலம் தற்போது நம்மிடம் இல்லை. ஆங்காங்குள்ள நம் படைகள் பின் வாங்கி வந்துகொண்டிருக்கின்றன. பல்லவ ராஜ்யத்துக்கு வந்திருக்கும் அபாயம் மிகப் பெரியது. ஆனாலும், நெற்றிக் கண்ணைத் திறந்து திரிபுரத்தை எரித்த பினாகபாணியின் அருளினால் முடிவில் நமக்குத்தான் வெற்றி கிடைக்கப் போகிறது. அதைப் பற்றிச் சந்தேகம் வேண்டியதில்லை!''

தந்தை பேசி முடிக்கும் வரையில் பொறுமையுடன் கேட்டுக்கொண்டிருந்த நரசிம்மர், ''அப்பா! பல்லவ சைனியம் பின் வாங்கி வருகிறதா? இது என்ன அவமானம்? இப்போது எனக்கு அநுமதி கொடுங்கள். அப்பா! நம்மிடம் தற்சமயம் ஆயத்தமாயிருக்கும் படைகளை அழைத்துக்கொண்டு புறப்படுகிறேன்!'' என்றார்.

"பொறு நரசிம்மா, பொறு! பல்லவ சைனியத்தை நீ நடத்திச் செல்லும்படியான காலம் வரும். நான் சொல்வதைக் கேட்டு நட. இன்றிரவு ஒரு முக்கியமான வேலை இருக்கிறது. என்னுடன் வருகிறாயா?''

''கேட்க வேண்டுமா? வருகிறேன், அப்பா.''

''தேவி! நரசிம்மனை இன்றுமுதல் நான் 'குழந்தை'யாக நடக்கப் போவதில்லை. சகாவாகவே நடத்தப் போகிறேன். மந்திராலோசனைகளில் கலந்து கொள்ளும் உரிமையையும் இன்று முதல் அவனுக்கு அளிக்கிறேன். நீயும் இனிமேல் அவனைக் 'குழந்தை' என்று அழைக்க வேண்டாம்!'' என்றார் சக்கரவர்த்தி.

புவன மகாதேவியைப் படுப்பதற்குப் போகச் சொல்லிவிட்டுத் தந்தையும் மகனும் அரண்மனையிலிருந்து வெளியேறிச் சென்றார்கள்.

(தொடரும்)

அந்த இடமே பரம இரகசியமாய் இருக்கிறது. குறுகலான படிகளில் ஏறினால் பத்துக்குப் பத்து அகலத்தில் ஓர் அறை. அசத்தல் இண்டீரியரோடு ஒரு உயர்தர கார்ப்பரேட் அலுவலகத்தைக் கற்பனை செய்துகொண்டு போன நமக்கு, இந்த அறைதான் அலுவலகம் என்று தெரிந்ததும் நிறையவே அதிர்ச்சி.

"உங்கள் எதிர்பார்ப்பு நியாயமானது தான். ஆனால் மற்ற நிறுவன அலுவலகங்களைப் போல, விசாலமான இடத்தில், துப்பறியும் நிறுவனத்தை நடத்துவது பலனளிக்காது. நமது பிரச்னையை இவர்கள் தீர்த்து வைப்பார்கள் என்கிற நம்பிக்கையோடு வரும் வாடிக்கையாளர்களுக்கு, இந்த அலுவலகத்தைப் பார்த்த மாத்திரத்தில் ஒரு பாதுகாப்பு உணர்வு வர வேண்டும். தைரியமாக மனம் திறந்து அவரது பிரச்னையைப் பேச வேண்டும். அதற்குத் தோற்றத்தில் இரகசியமாகவும், அடக்கமாகவும் இருக்கிற, இதுபோன்ற அலுவலகம்தான் ஒத்து வரும்" என்று லாஜிக் பிசகாமல் பேசத் தொடங்கினார் திருமதி. கீதா பார்த்திபன். அல்ஃபா டிடெக்டிவ் சர்வீசஸ் (பி) லிமிடெட் நிறுவனத்தின் நிர்வாக இயக்குனர். அல்ஃபாவைப் பொறுத்தவரை, 'என்னய்யா, தனியார் துப்பறியும் நிறுவனத்தைப் பற்றிப் புதுசா எழுத வந்துட்டே!' என்று யாரும் அலட்சியமாகச் சொல்லி விட முடியாது.

இந்திய வரலாற்றில் ஏறக்குறைய முதன்முறையாக ஒரு பெண் எம்.டியின் தலைமையில், பெண்கள் மட்டுமே ஒற்றர்களாகப் பணியாற்றி, பிரச்னைகளோடு வரும் பெண்களுக்குத் தீர்வு தேடித் தரும் நிறுவனம் என்று சுடிதார் துப்பட்டாவை எஜமான் ரஜினி ஸ்டைலில், தோளில்



# மர்ம மகளிரணி!



தூக்கிப் போட்டுச் சொல்கிறார்கள். பலே! இப்படியொரு மகளிர் மட்டும் திட்டத்திற்கு ஏதாவது குறிப்பிட்ட காரணம் இருக்கிறதா என்று துருவினோம்.

''ஐந்தாண்டு காலம் ஒரு தனியார் துப்பறியும் நிறுவனத்தில் மக்கள் தொடர்பு அலுவலராகப் பணியாற்றினேன். அதன் நிர்வாக இயக்குனர் ஓர் ஆண். அங்கே வந்த பெண்கள், ஓர் ஆணிடம் தங்கள் அந்தரங்கப் பிரச்னைகளை எப்படிச் சொல்வது என்று மிகவும் தயங்கியதைக் கண்கூடாகப் பார்த்திருக்கிறேன். இதைவிடக் கொடுமை, பெண்கள் எங்கே நமக்கு பிரச்னை தீரும் என்று நம்பி வந்தார்களோ, அங்கே பணியாற்றும் ஆண்கள் இவர்களது பிரச்

னைகளைத் தெரிந்துகொண்டு, கேலியாகப் பார்ப்பதும், பிளாக்மெயில் செய்து மிரட்டுவதும்கூட சகஜம் என்ற நிலையாக இருக்கிறது.

''இந்தத் துறையில் பெண்களுக்குத்தான் அதிக தேவை. ஆண்களுக்குப் பிரச்னை என்று வருகிறபோது, அவர்கள் துணிச்சலாகப் போலீசிடம் போகிறார்கள். ஆனால் பெண்கள் அப்படிப் போக முடிவதில்லை. போனால் கோர்ட், கேஸ் என்று ஆகி, அது பத்திரிகைச் செய்தியாகவும் வந்து விடுமோ என்கிற பயம். இப்படிப்பட்ட சூழலில்தான் தனியார் துறையை நாடி வருகிறார்கள். பெண்கள் மட்டும் பணியாற்றுகிற ஒரு துப்பறியும் நிறுவனம் என்றால் பாதுகாப்பு உணர்வுடன் பேச முடியும் என்று எதிர்பார்த்தேன். அதற்கு வெற்றி கிடைத்தது'' என்கிறார் கீதா.

கடந்த மூன்று வருடத்தில் சுமார் இருநூற்று ஐம்பது வழக்குகளில் துப்பறிந்து துல்லியமான விவரங்களைக் கொடுத்திருக்கிறார்.

"நீங்கள் அதிகம் ஏற்றுக் கொள்ளும் வழக்குகள் எது மாதிரியானவை?"

''நாங்கள் ஏற்றுக் கொள்கிறோம் என்று சொல்வதைவிட, எங்களைத் தேடி வரும் வாடிக்கையாளர்கள் அதிகம் கொண்டு வருவது, மாப்பிள்ளை, பெண் விவகாரம்தான். திருமணத்திற்கு முன்பு - மணக்கப் போகும் பையனைப் பற்றிய உண்மைத் தகவல்களைத் திரட்டித் தரும்படி பெண் வீட்டாரும், பெண்ணைப் பற்றிய தகவல்களைத் திரட்டித் தரும்படி மாப்பிள்ளை வீட்டாரும் கேட்கிறார்கள். இதன் மூலம் நல்ல வரன் கிடைக்க நாங்களும் ஒரு காரணமாக இருப்பதால், இதில் அதிக கவனம் செலுத்துகிறோம். இதில் சில வழக்குகள் நமது விசாரணையையே திசை திருப்பி விடுவதும் உண்டு. எனவே துல்லியமாகவும், விரைவாகவும் வரன்களைப் பற்றி துப்பறிந்து தர வேண்டியிருக்கிறது'' என்றபடி சமீபத்தில் இவர்களுக்கே தண்ணீர் காட்டிய ஒரு சுவாரஸ்ய வழக்கைப் பற்றிச் சொல்ல ஆரம்பித்தார்.

கண்ணனும், ராஜுவும் தொழில் ரீதியாக நண்பர்கள். கண்ணனுக்குத் தமது ஒரே மகனை, ராஜுவின் மகளுக்குத் திருமணம் செய்து கொடுத்து, அவனை மேலும் பணக்காரனாக்க வேண்டும் என்று ஆசை. ராஜுவும் நட்பின் நிமித்தம் மறுக்க முடியாமல் ஒப்புக் கொண்டாலும் ராஜுவின் மனைவிக்குப் பையன் மீது நிறைய சந்தேகம். எங்களை அணுகினார். களத்தில் இறங்கி கண்காணிக்கத் தொடங்கினோம். பையன் சிகரெட் பிடிக்கிறார். மது அருந்துகிறார் என்று சொன்னதும் அதை ராஜு குடும்பத்தினர் நம்பவேயில்லை. 'அவனுக்குத் தீய பழக்கம் ஏதுவும் கிடையாது. வீட்டிற்கு அடக்கமான பையன்' என்று வாதிட்டனர். வீடியோ ஆதாரங்களைக் காட்டிய பிறகுதான் நம்பினார்கள். ஆனால் பையனைத் துப்பறிந்த எங்கள் பிரதிநிதிக்கு அவர் மீது ஆரம்பம் தொட்டே சந்தேகம். அவர் சிகரெட் பிடித்த விதம், மது அருந்திய விதம் போன்றவற்றை வைத்து, புதிதாக அந்தப் பழக்கங்களை அவர் ஆரம்பித்திருக்கிறார் என்று கூறினார். அதில் மேலும் ஒரு பொறி தட்டியதில், மீண்டும் களத்தில் இறங்கினால், அவர் ஒரு பெண்ணைத் தீவிரமாக காதலித்து வந்ததைக் கையும் களவுமாகக் கண்டுபிடித்தோம். 'காதலித்து வந்தது சரி, எதற்கு பழக்க

மில்லாத சிகரெட், மது எல்லாம்' என்று பெற்றோர் கேட்கிற விதத்தில் கேட்டதும், உண்மையைக் கக்கி விட்டார். எப்படியும் தன்னைப் பற்றி பெண் வீட்டில் விசாரிப்பார்கள்; தான் தீய பழக்கங்கள் உள்ளவன் என்று தெரிந்தால், திருமணம் நின்று விடும், தனது காதலும் கைகூடும் என்று தமது திட்டத்தைக் கூறி அதிர்ச்சியில் ஆழ்த்திவிட்டார்!

**கோ**பால் நாற்பது வயது பிரம்மச்சாரி. தமக்குப் பெண் பார்த்திருப்பதாகவும் அப்பெண் பற்றிய தகவல்கள் வேண்டும் என்றும் வந்தார். நாங்கள் விசாரித்ததும் அந்தப் பெண் விவாகரத்தானவர் என்று தெரிய வந்தது. அவரது கணவர் யார் என்று விசாரணையில் இறங்கினால், எங்களுக்கு யார் வழக்கைக் கொடுத்தாரோ அதே கோபால்தான் அந்தப் பெண்ணின் கணவர்! எங்களுக்கோ கோபம். ஏன் உங்கள் முன்னாள் மனைவியைப் பற்றி விசாரிக்கும்படி சொன்னீர்கள் என்று நாங்கள் சட்டையைப் பிடிக்காத குறை. 'அவள் வேறு யாரையாவது திருமணம் செய்து கொள்கிறாளா? என்று தெரிந்து கொள்ளத்தான்' என்று அசடு வழிந்தார். விவாகரத்து ஆகிவிட்டால் அத்துடன் போய்விட வேண்டியதுதானே என்று அவரை எச்சரித்தோம். இது ஒருவிதமான மனநோய்!

**"பெ**ரும்பாலும் இங்கே மனப் பிரச்னைகளோடு வருகிறவர்கள்தான் அதிகம். அவர்களோடு இரண்டு நாள் பேசினாலே பிரச்னை தீர்ந்த நிம்மதியோடு போய் விடுகிறார்கள். அந்த வகையில் இது நம்பகமான கவுன்சலிங் சென்டர் என்று சொன்னால் தவறில்லை" என்றார் கீதா.

'பெண்கள் பொதுவாக எது போன்ற பிரச்னைகளோடு உங்கள் உதவியை நாடுகிறார்கள்?' என்றோம். "ஈவ்டீசிங் துன்புறுத்தலுக்கு ஆளாகும் மாணவிகள், பெண்களின் பெற்றோர், சம்பந்தப்பட்ட ஆடவரின் பின்னணி, நோக்கம் குறித்து தகவல் கேட்டு வருகிறார்கள். கணவன் மீது மனைவிக்கோ, மனைவி மீது கணவனுக்கோ வரும் சந்தேகம், வீட்டில் தனிமையில் இருக்கும் பெண்களுக்கு வரும் தொலைபேசி மிரட்டல்கள், இப்படி நிறைய சொல்லிக் கொண்டே போகலாம்" என்கிறார்.



"என்ன இருந்தாலும் கேடி கண்ணுசாமிக்கு ரொம்பத்தான் இடம் குடுத்திட்டீங்க சார்... அவன் உங்களை பெஸ்ட் ஃபிரண்டுன்னு சொல்லிட்டுத் திரியறான் சார்..."

"நல்லவேளை... நான் அவனோட சம்பந்திங்கிற உண்மையைச் சொல்லலையே!"

— அ. சுகுமார்

**உ**தவி கோரி வரும் வாடிக்கையாளரிடம் முதலில் முதல் தகவல் அறிக்கை ஒன்றை எழுதி வாங்கிக் கொண்டு அதன் பிறகு களத்தில் இறங்கும் இவர்கள், ரகசியமாக பேச்சுக்களை டேப் செய்தல், தெகல்கா பாணியில் ரகசிய வீடியோ எடுத்தல், பின் தொடர்தல் என்று களப்பணியில் தைரியமாக தூள் கிளப்புகிறார்கள். அத்தனை பேரும் முப்பது வயதுக்குட்பட்ட பட்டதாரிப் பெண்கள். 'எப்படித்தான் இருக்கிறது என்று பார்ப்போமே' என்ற ஆர்வத்தில் வந்து, இந்தத் துறை தந்த த்ரில் ரொம்பவே சுவாரஸ்யமாய் இருந்ததால் இதையே வாழ்க்கை முழுவதற்குமான பணியாக எடுத்துக்கொண்டு விட்டேன் என்கிறார் இளம் துப்பறியும் ஹேமா.

தேவைப்படும்போது காவல் துறையின் ஒத்துழைப்பைப் பெற்று தூள் கிளப்பும் இந்த மகளிர் அணி, லண்டனில் இருந்து சென்னை வந்து காணாமல் போன கணபதி பிள்ளை துளசிங்கம் என்ற வெளிநாட்டு வாழ் இந்தியர், கொலை செய்யப்பட்டார் என்ற உண்மையைக் கண்டுபிடித்து, காவல் துறையை வியக்க வைத்திருக்கிறது!

சந்திப்பு: **சக்கரத்தாழ்வார்**
படங்கள்: **ராஜன்**

பாட்டிகளுக்கு இது 'செகன்ட் இன்னிங்ஸ்' காலமாகிவிட்டது. மகளோ, மருமகளோ வேலைக்குப் போவதால் பேரன் அல்லது பேத்தியைத் தூக்கி வளர்த்தாக வேண்டும். ஒன்றுக்கு மூன்றாக, ஒரே சமயத்தில் பிறந்துவிட்டால்...? கேட்க வேண்டுமா டென்ஷனை... பாட்டி இந்திரா சுப்ரமண்யமின் ஒன், டூ, த்ரீ அனுபவம் இதோ:

# ஏக், தோ, தீன்!

மின்சாரம் தடைபட்ட நள்ளிரவில் திடீரென்று தொலைபேசி அலறியது.

'யாரது... நேரங்கெட்ட நேரத்தில்?' முணுமுணுத்துக் கொண்டே போனை எடுத்தேன். துபாயிலிருந்து என் மகள் சுகந்தி.

"அம்மா, ஒரு குட் நியூஸ்!"

"என்னடி?"

"மூணு மாச மாச்சும்மா."

"அப்படியா?" மகிழ்ச்சியில் துள்ளினேன்.

"ரொம்ப சந்தோஷப்படாதேம்மா..." என்று கவலையுடன் இழுத்தாள்.

"ஏண்டி?"

"ஸ்கேன் பண்ணினப்ப தெரிஞ்சுது. குழந்தை ஒண்ணுக்கு மேலே இருக்காம்."

"பரவாயில்லை. இரட்டையானா என்ன?"

"இரட்டை இல்லேம்மா. அதுக்கும் மேலே."

"என்னடி விளையாடறே?"

"நிச்சயமா சொல்றாங்கம்மா." அழுதுவிடுவாள் போலிருந்தது.

'பகவானே...!' பயம் என்னைக் கவ்விக் கொள்ள, படபடத்துக் கொண்டு வந்தது.

நானே பயப்பட்டால், பிரசவிக்கப் போகிறவளுக்கு எப்படியிருக்கும்? பயத்தைக் குரலில் காட்டாமல் உற்சாகமாய்ப் பேசினேன்.

"கவலைப்படாதே. அம்பாள் காப்பாத்துவா. கர்ப்பரக்ஷாம்பிகை சுலோகம் சொல்லு."

"அம்மா... நீதாம்மா எனக்குத் தைரியம். வைச்சுடறேன்."

சுகந்தி பிரசவத்துக்காக இந்தியா வந்தாள். சம்பிரதாயத்துக்காக வளைகாப்பு, சீமந்தம் செய்தோமே தவிர, உள்ளுக்குள் சுரத்தே இல்லை. மாதம் ஆக ஆக, ரொம்பவே சிரமப்பட்டாள்.

ரொம்பப் பெரிய வயிறு. அவள் மீது யாரும் இடித்து விடாதபடி பார்த்துக் கொள்வதே பெரிய காரியமாக இருந்தது. வேடிக்கைக்காக, மேடிட்டிருந்த வயிற்றையே மேஜையாகப் பயன்படுத்தி, அதன் மீதே தட்டை வைத்துக் கொண்டு சாப்பிடுவாள்.

பிரசவ நாளும் வந்தது. அவளைச் சோதித்துக் கொண்டிருந்த டாக்டர் தங்கம், உண்மையிலேயே தங்கம்தான். எப்போதும் புன்சிரிப்புடன், "பயப்பட ஒண்ணுமில்லே" என்று திரும்பத் திரும்ப ஆறுதல் சொல்லிக் கொண்டேயிருந்தார். வலி ஆரம்பித்ததும் கொஞ்சம் கூடத் தாமதிக்காமல் வெலிங்டன் மருத்துவ



• இந்திரா சுப்ரமணியம்



மனையில் சேர்த்தோம். லேபர் வார்டுக்குள் போகும் போதும், சுகந்தி எங்கள் கையை இறுகப் பற்றிக் கொண்டிருந்தாள்.

**கா**லை 9:30 மணி. மூன்று ஸ்பெஷலிஸ்ட் டாக்டர்கள், ஆளுக்கொரு பெரிய பெட்டியைத் தூக்கிக் கொண்டு உள்ளே போனார்கள். நானும் என் கணவரும் முள் மேல் அமர்ந்திருப்பது போலத் தவியாய்த் தவித்துக் கொண்டிருக்க, அரை மணி நேரம் ஆறு யுகமாய்க் கழிந்தது.

மணி பத்து. டாக்டர் பிரேமா கதவிடுக்கில் தலையை நீட்டி, ''மூணாவது ஆயிட்டிருக்கு. முதலில் ஒரு பொண்ணு. அப்புறம் ஒரு பையன்'' புன்சிரிப்புடன் சொல்லி விட்டு, கதவைச் சாத்திக் கொண்டார்.

'அப்பாடா! சிசேரியன் இல்லியே!' பெருமூச்சு இலேசாக வந்தது.

மணி 10.30. மாப்பிள்ளை வீட்டார் வந்தார்கள். பேயறைந்தது போல இருந்த எங்கள் முகம், அவர்களுடைய பீதியைக் கிளப்பியது. யாரும் பேசிக் கொள்ளவில்லை. கனத்த மௌனம் பூசிக் கிடந்தது. நான் மனசுக்குள் சொல்லிக் கொண்ட தாயுமானவர் சுலோகம், என்னையுமறியாமல் வெளியே கேட்க, ஆயாக்கள் கவலை

யுடன் வேடிக்கை பார்த்தார்கள்.

லேபர் வார்டு கதவுகள் முழுசாய்த் திறந்து கொள்ள, டாக்டர் பிரேமா வெளியே வந்து கைகுலுக்கினார்.

"இரண்டு பொண்ணு, ஒரு பிள்ளை. சுகந்தி ஈஸ் ஆல் ரைட். இப்ப குழந்தைங்க வருவாங்க... பாருங்க" சொல்லிக் கொண்டிருக்கும்போதே, குழந்தை நல நிபுணர்கள் மூன்று பேரும், ஆளுக்கொரு பெட்டியில் குழந்தைகளைக் கொண்டு வந்தனர்.

"இது பெண் குழந்தை. ஒண்ணரை கிலோ. அஞ்சு நிமிஷம் கழிச்சு பிறந்த ஆண் குழந்தை இரண்டு கிலோ. இது பத்து நிமிஷம் கழிச்சு பிறந்தது. 1.8 கிலோ. இதுதான் கொஞ்சம் சிரமம் கொடுத்தது..." மடமடவென்று சொல்லிவிட்டுக் கிளம்பினார்கள்.

"எங்கே டாக்டர் கொண்டு போறீங்க?"

"ரொம்ப குறைச்சலான எடையா இருக்காங்களே! அதான் பத்து நாள் இன்குபேட்டர்ல வைக்கப் போறோம்" – போயே விட்டார்கள்.

'குழந்தைகள் முகத்தைச் சரியாக் கூட பார்க்கலியே...!' என்று விழித்துக் கொண்டு நின்றிருந்தோம்.

அதற்குள் விஷயம் எப்படியோ வெளியே கசிந்து விட, டியூட்டி இல்லாத டாக்டர்கள், ஆஸ்பத்திரி ஸ்டாஃப், வருவோர், போவோர் எனக் கூட்டம் கூடி விட்டது.

முதன்மை டாக்டர் தங்கம் வெளியே வந்தார். அவரைப் பார்த்தவுடன் எனக்கு எங்கிருந்துதான் அத்தனை அழுகை வந்ததோ, பீறிட்டுக் கதறி விட்டேன். "நன்றி... நன்றி" என்று சொல்லிக் கொண்டே, என் கையிலிருந்த தங்க வளையலைக் கழற்றி, அவருக்கு அணிவித்தேன். டாக்டர் தங்கத்துக்கு இனிய அதிர்ச்சி. என் கணவர் இனிப்பு வாங்க வெளியே ஓட, நான் 'பாட்டி'யாகி விட்ட சந்தோஷத்தில் ஆனந்தக் கண்ணீர் வடித்தேன்.

அடுத்த பதினைந்து நாட்கள் வேறொரு விதமாகக் கழிந்தது. தாயார் வெலிங்டன் மருத்துவமனையில். குழந்தைகள் சைல்டு டிரஸ்டு ஆஸ்பத்திரியில்! நாங்கள் அங்கும் இங்கும் ஓடியாடிக் கொண்டு...

வீட்டு நினைவே இல்லை. வீட்டில் வயதான மாமியார் தனியாக இருக்கிறார். பக்கத்து வீட்டில் 90 வயதான அப்பா, 80 வயதான அம்மா தனிக்குடித்தனம். இந்த மூன்று அனுபவசாலிகளுக்கும் நன்றாகக் கவலைப்படத் தெரியும். மற்றவர்களைக் காபராபடுத்தத் தெரியும். அதனால் எங்கள் நிலைமையை அவர்களிடம் சொல்லவேயில்லை. இதற்கிடையே கோவையிலிருக்கும் என் மூத்த மகள், வீட்டுக்கு வந்து பொறுப்பேற்க, வீட்டுக் கவலை இல்லாமல் போனது.

நடுநடுவே குழந்தைகள் சுகவீனப் பட்டார்கள். இந்த நிமிஷம் இருக்கும் நிலைமை அடுத்த நிமிஷமில்லை. இரு குழந்தைகளுக்குக் காமாலைத் தொற்று ஏற்பட்டு, ரொம்ப சீரியஸாகி விட்டது. ஒரு குழந்தைக்குக் காமாலை முற்றி ரத்தம் மாற்ற வேண்டி வரும் என்றார்கள். இப்படி டென்ஷனிலேயே தவித்துக் கிடந்தோம்.

யார் செய்த புண்ணியமோ, குழந்தைகள் உடல் தேறி, டிஸ்சார்ஜ் ஆனார்கள். வாசலில் ஆரத்தி எடுத்து உள்ளே

• • • • • • • • • • •



**"நம்மைப் பார்த்தாலே போலீஸ்காரங்களுக்குப் பிடிக்க மாட்டேங்குதே... அது ஏன்?"**

**"அவங்களைவிட நாம அதிகமான கலெக்ஷன் பார்க்கிறோம்ங்கிற பொறாமையா இருக்கும்!"**

**– எஸ். வீமராஜன்**

அழைத்து வரும்போதே, உறவினர்கள், நண்பர்கள், தெருக்காரர்கள், அவர்களுக்குத் தெரிந்தவர்கள், தெரியாதவர்கள் என கும்பல் கூடி விட்டது. விசாரிக்க வருபவர்களை விட, வேடிக்கை பார்க்க வருபவர்கள்தான் அதிகம்.

"மூணும் ஒரே ஜாடையா இல்லியே?"

"ஒண்ணு அழுதா இன்னொன்றும் அழுமா?" என்று கேள்வி கேட்பார்கள்.

சர்க்கரை தேய்ப்பார்கள். 'உச்சியில் எண்ணெய் வைக்கிறேன்' என்பார்கள். "குழந்தைகளைத் தூக்கிக் கொள்ளவா?" என்பார்கள்.

வியாதி தொற்றுக்குச் சிறிதும் ஆளாகக் கூடாத இந்த 'ஸ்பெஷல் குழந்தைகளை' இப்படியெல்லாம் கொஞ்சக் கூடாதே! எப்படிச் சமாளிப்பது என்று தீவிரமாக யோசித்ததில் என் கணவர், ஒரு போஸ்டரையே எழுதி வாசலில் வைத்து விட்டார்.

'உங்களுக்குக் குழந்தைகள் மீது அன்பும் அக்கறையுமிருந்தால், தயவு செய்து மூன்று மாதம் கழித்து வரவும். டாக்டர் உத்தரவு' இந்த அறிவிப்பு வைக்கப்பட்ட பிறகு, வெளியோர் வருகை ஓரளவு கட்டுப்பட்டது.

இதுவரை அனுபவித்ததெல்லாம் சாதாதான். அதற்குப் பிறகுதான் க்ளைமாக்ஸே!

மூன்று சிசுக்களையும் வளர்க்கும் சிரமங்கள் நாளுக்கு நாள் அதிகரித்தன. முதலாவதாக உணவு! இரண்டு மணிக்கு ஒரு தடவை பால் புகட்ட வேண்டும். வரிசையாகக் கொடுத்துக் கொண்டே வந்தால், 3/4 மணி நேரத்துக்கு ஒரு தரம், ஒரு குழந்தைக்குப் பால் புகட்ட வேண்டும். குழந்தை பால் குடிக்க, 15 நிமிடம் ஆகும். முதலில் பால் அருந்திய குழந்தை, துணியை ஈரம் செய்யும். அதைச் சுத்தப்படுத்தி, படுக்க வைப்பதற்குள் இன்னொரு குழந்தை ஈரம் பண்ணி வைக்கும்.

பால் பாட்டில்களைக் கொதிக்க வைத்து, வெந்நீர் வைத்து, துணிகளை டெட்டாலில் நனைத்து, காயவைத்து... நாள் பூரா இதே வேலைதான்.



"தலைவர் இன்னும் அஞ்சு வருஷத்துல காமராஜர் ஆட்சியை அமைப் போம்ங்கறாரே, எந்த தைரியத்துல சொல்றார்?"

"அவர் பையனுக்கு 'காமராஜ்'னு பேர் வச்சிருக்கார். அஞ்சு வருஷத்துல அவனை ஆட்சிக்குத் தயார் பண்ணிடலாம்ங்கற தைரியத்துலதான்!"

– மேல்மங்கலம் பத்ரா

● ● ● ● ● ● ● ● ● ● ●

இரண்டாவது தொல்லை கொசு!

மின்விசிறி போட்டால் கொசு வராது. ஆனால் குழந்தைகளுக்கு மூச்சுத் திணறும். கொசுவர்த்தி, 'மேட்' போன்றவை ஒத்துக் கொள்ளவில்லை. சாம்பிராணி புகை போட்டு, கொசுக்களை விரட்டி விடுவதும் மெகா வேலையாகத் தொடர்ந்தது.

இதனிடையே கழுவுவதற்காக கோல மாவு போட்டு வைத்திருந்த பிளாஸ்கிலேயே வெந்நீர் ஊற்றி, அதிலேயே பால் பவுடர் கரைத்து, குழந்தைகளுக்கு ஆயா புகட்டி விட, அலறி அடித்துக் கொண்டு டாக்டரிடம் ஓடியது தனி எபிஸோட்!

ஸ்ருதி, ஸ்வேதா, விராஜ் மூன்று குழந்தைகளும் இப்போது துபாயில் படுசுட்டிகளாக, எங்கள் செல்லங்களாக இருக்கிறார்கள். அவர்கள் ஊருக்கு வரும்போதெல்லாம், தாத்தா, பாட்டிக்கு என்ன வேலை தெரியுமா? அவர்கள் பிறந்த சமயத்தில், நாங்கள் பட்ட டென்ஷனைக் கதையாகச் சொல்லிச் சிரிக்க வைப்பதுதான். இப்போது உங்களுக்கும் சொல்லி விட்டேன்.



# கிராமத்தில் சில மாஞ்செடிகள்



தெருவில் மாம்பழக்காரனைப் பார்த்ததும் அம்மாவுக்கு ஊர் ஞாபகம் வந்துவிட்டது.

''நான் ஒரு நாலுநாள் ஊருக்குப் போய்ட்டு வர்றேண்டா'' என்று ஆரம்பித்துவிட்டாள்.

''மாஞ்செடி என்னாச்சோ, காய்ங்க என்னாச்சோ? போன வருஷம் நான் பக்கத்துல இருந்தேன். பூ பிடிக்கறப்ப மருந்தடிச்சு, வேலி போட்டு பார்த்துக்கிட்டேன். பெங்களூர் செடியில மட்டும் நூறுகாய் கிடைச்சது. இந்த வருஷம் பங்கனப்பள்ளியும், செந்தூராவும் பூ விட்டிருக்கும். ஆளு கிட்டயில்லன்னா எலைகூட மிஞ்சாது'' என்று புலம்பவே துவங்கிவிட்டாள் - ஏதோ, பெற்றக் குழந்தைகளைத் தனியாக விட்டுவிட்டு வந்தது போல.

''எல்லாம் அடுத்த வருஷம் போய்ப் பார்த்துக்கலாம். இந்த வருஷம் யாருக்காவது லெட்டர் போட்டு, செடிகளைப் பார்த்துக் கொள்ளச் சொல்லலாம்.''

''யாருடாப்பா... அப்

# அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி – ரூ.1000 ஆறுதல் பரிசு பெறும் கதை



நளினி – என் மனைவி – கட்டிலைவிட்டு எழ முடியாமல் கால் ஒடிந்து படுத்துக் கொண்டிருக்கிறாள். ஆக்ஸிடண்ட்! லீவு போட முடியாதபடிக்கு எனக்கு ஆபீஸில் ஆடிட்டிங் டயம். இரண்டு குழந்தைகள். ஒத்தாசைக்கு அம்மாவைப் போய் அழைத்து வந்து ஒருமாசம்கூட ஆகவில்லை. ஊருக்குப் போக எதுடா சாக்கு என்று பார்த்துக் கொண்டிருந்தாள் போலும்... மாங்காய் கண்ணில் பட்டுவிட்டது!

எனக்குத் தெரியும்.

போனமுறை கிராமத்துக்குப் போன போதும் அந்தச் செடிகளைப் பார்த்தேனே. கிராமத்தில் மண் வீடுதான் எங்களுடையது. அந்த வீட்டின் பின்பக்கம் கொஞ்சம் இடம். ஒரு காலத்தில் நிறைய சொத்து பத்துகள் இருந்து உழவு வேலை நடந்து, நாலு மாடுகள் வீட்டில் இருந்தபோது தொழுவமாய் இருந்த இடம். சொத்து எல்லாம் தாத்தா, அப்பா காலங்களிலேயே இழந்தாகிவிட்டது. சொச்சம் இருந்த நிலத்தையும் என் படிப்பு கபளீகரம் செய்துவிட்டது. நிலம் போனது. உழும் ஆட்களையும் காலம் கொண்டு போனது. அப்புறம் மாடுகளுக்கு என்ன வேலை? அவையும் விலை போயின.

அந்தத் தொழுவ இடத்தைச் சீர் பண்ணி நாலு மாஞ்செடி வைத்திருந்தாள் அம்மா. இப்போது படியே கருத்தா காவலிருக்கறேன்னு சொல்ற ஆளு? பேருக்குத்தானே அங்கே சொந்தக்காரங்க. ஏமாந்தால் முழியைத் திருடற ஆளுங்க. எங்க அக்கா வூட்டுதுனு ஒருத்தி நாலு பறிப்பா. சித்தியோட செடினு ஒருத்தி நாலு காய் பறிப்பா. ஆள் பக்கத்துல இருந்தாலே காபந்து பண்றது கஷ்டம். இந் நேரமே பிஞ்சு வரைக்கும் பொறுக்கிட்டுப் போயிருப்பாங்க...'' என்றவள்,

"நான் சனிக்கிழமை பொறப் படறேன். வீட்டையும் பார்த்துட்டு, செடிகளுக்கு ஒரு வேலியும் அடிச்சிட்டு... ஒண்ணோ, ரெண்டோ காய் இருந்தால் எடுத்துக்கிட்டு வர்றேன்...'' என்று நிலைமை புரியாமல் புறப்பட ஆயத்தமே செய்து விட்டாள் அம்மா.

இத்தனை வயசாகியும் அம்மாவுக்கு அந்தப் பிடிவாதம் மட்டும் போகவில்லை. குழந்தைத்தனமான பிடிவாதம். முரட்டுப் பிடிவாதம். மறுத்தால், உக்ரமாகி விடுவாள். ஒரேயடியாய்க் கிளம்பிப் போனாலும் போய் விடக்கூடும்.

ஏற்கெனவே, சில முறை அப்படி நடந்திருக்கிறது.

மற்ற சமயமென்றால் பரவாயில்லை.

இப்போது

**படுதலம் சுகுமாரன்**

கடந்த அஞ்சு வருஷத்தில் கொஞ்சம் கொஞ்சமாய் வளர்ந்து, போன வருஷத்துக்கு முன்பே ஒன்றிரண்டு காய் காய்த்தது உண்மை.

லீவில் ஊருக்குப் போயிருந்தபோது 'நம்ம காய்கள்' என்று நாலு பிஞ்சுகளைப் பறித்துப் பையில் போட்டு அனுப்பி வைத்தாள்.

கிராமம், அங்கு வாழ்ந்த வாழ்வின் வாசம், எல்லாம் போனாலும் போகாதது போன்ற பிரமை, அந்த சுதந்தரம், உறவுப் புழக்கம், அந்த மண், செடிகள் மீது பிடிப்பு... எல்லாவற்றுக்கும் மேலாக மருமகளுடன் ஒத்துப் போக முடியாத குணம்..

இவையெல்லாமாகச் சேர்த்து அம்மாவைக் கிராமத்திலேயே இருத்திவிட்டது.

தோணும்போதோ, அல்லது அவசியம் கருதி வற்புறுத்தினாலோ வருவாள். அதிக பட்சம் நாலுநாள் இருப்பாள். அதற்குள் ஊர் ஞாபகம் வரும். வீடு என்னாச்சோ, ஊர் என்னாச்சோ என்று பறந்து விடுவாள். இந்த முறைதான் தவிர்க்க முடியாமல் ஒரு மாசம் போல இருந்துவிட்டாள்.

அந்த விபத்து மட்டும் நடக்காதிருந்தால்...

மார்க்கெட்டுக்குக் காய்கறி வாங்கப் போன நளினியை, அந்த மாருதி கார் இடித்துத் தள்ளி, தொடை எலும்பு முறிவு ஏற்படா திருந்தால்...

அம்மாவை அழைத்து வர வேண்டிய அவசியம் இருந்திருக்காது. தொடையில், பெரிதாக ஆபரேஷன் செய்து ப்ளேட் வைக்க வேண்டுமென்றார்கள். ஆபரேஷன் செய்து, இப்போது படுக்கையில். ஓரளவு ரணம் ஆறினாலும் இயல்பு நிலைக்கு வர நாளாகலாம். அவளைக் கவனிக்க தினமும் ஒரு நர்ஸ் வந்து போகிறாள். குடும்பத்தைக் கவனிக்க அவசியம் ஒருவர் வேண்டும் என்ற நிலையில்தான் அம்மாவை அழைத்து வந்தது. இப்போது திடுதிப்பென்று அம்மா கிளம்பிவிட்டால், வீடு ஸ்தம்பித்துவிடும். இந்த விவரம் அம்மாவுக்குப் புரியாதா என்ன? இங்கிருக்கும் குடும்பத்தைவிட நாலு மாஞ்செடியைப் பெரிதாக நினைக்க எப்படி மனசு வருகிறது?

எனக்குக் கோபமான கோபம்.

பிரயத்தனப்பட்டு அடக்கிக்கொண்டு, பக்குவமாகப் பேசிப் பார்த்தேன். அம்மாவால் என் வார்த்தைகளை மீற முடியவில்லைதான் என்றாலும், அவள் ஆசை நிராகரிக்கப்பட்டதில் பெரிதாக ஏமாற்றம் அடைந்துவிட்டாள் போலும். அந்த ஏமாற்றம் மற்ற வேலைகளில் பிரதிபலித்தது. குழந்தைகளைச் சீறினாள். எதை எடுத்தாலும் வைத்தாலும் அதில் கோபம் தெரிந்தது. சமையலில் சுவை குறைந்ததோடல்லாமல் நேரம் கடந்து கிடைத்தது. காதுக்கு எட்டியும், எட்டாதபடியும் முணுமுணுப்புகள் கிளம்பின.

நளினி சொன்னாள்–

"அவங்களை ஊருக்கு அனுப்பி வைங்க. இங்கே கட்டிப்போட்டது போல இருக்கும். ஊரைப் பார்த்துட்டு வந்தால் கொஞ்சம் நிம்மதியாயிருக்கும். நாலுநாளைக்கு நான் சமாளிச்சுக்கறேன்" என்றாள்.

"அப்படியாவது ஊருக்குப் போய் என்னாகப்போகுதோ..." என்ற சலிப்புடன் ஆபீஸில் கெஞ்சிக் கூத்தாடி நாலு நாள் லீவு வாங்கிக்கொண்டேன்.

"நாலாம் நாள் இங்கிருக்கணும்மா" என்று கறாராய்ச் சொல்லி, காசு கொடுத்து அம்மாவை அனுப்பி வைத்தேன். புறப்படும்போது, போகவே மனசில்லாதது போலவும், போனாலும் கட்டைதான் அங்கிருக்கும்; மனசெல்லாம் இங்கேதான் இருக்கும் என்பது போலவும் சொல்லி, ஜாக்கிரதை, ஜாக்கிரதை என்று நாற்பது முறையாவது சொல்லிப் போனாள் அம்மா.

வேலைக்காரி வந்து பத்து பாத்திரம் தேய்த்து, துணி துவைத்து, வீடு கூட்டி விட்டுப் போனாலும் மற்ற வேலைகள் இருந்தனவே! ஒரு ஆணால் லாகவமாகக் கையாள முடியாத வேலைகள் – முக்கியமாய்ச் சமையல். நளினி உட்கார்ந்த இடத்தில் இருந்து சொல்லச் சொல்ல நான் சமைத்தேன். சாம்பார் மாதிரி, பொரியல் மாதிரி கூட்டு மாதிரி செய்து வைத்ததை, குழந்தைகள் வாயில் வைப்பேனா என்றது. வெறும் பிரட்டும், ஜாமும் தின்று பசியை அடக்கின. ஒருநாள் வேலைக்காரி சமைத்துக் கொடுத்து விட்டுப் போனாள். ஒருநாள் பக்கத்து ப்ளாட் பெண்மணி உதவினாள். நளினியைப் பார்க்க வந்த நர்ஸ்கூட எங்கள் நிலைமையைப் பார்த்துவிட்டு ஒரு வேளைக்கு டிபனை வீட்டிலிருந்து கொண்டு

"அமைச்சரே!
மாதம் மும்மாரி பொழிகிறதா?"
"இல்லை மன்னா! மூன்று லாரிகளில்தான் வருகிறது."
– ஜெஸியா ஜெனி

மற்றொரு நாள் ஆரியபவன் சாப்பாடு....

சொன்னதுபோல நாலாம் நாள் வந்துவிட்டாள் அம்மா.

கையில் சின்னதாக ஒரு மூட்டை.

வேறென்ன.... கோடி ரூபாய்க்கு ஆஸ்தி... மாங்காய்கள்தான்! போரில் ஜெயித்துவிட்டு வந்த களைப்பும், நிம்மதியும் அம்மா முகத்தில். வந்ததும் வராததுமாய் என்னையும் குழந்தைகளையும், மருமகளையும் ஓடிஓடி விசாரித்தாள். அந்தச் சடங்கு முடிந்ததும் ஆரம்பித்துவிட்டாள் அந்த மாஞ்செடிகள் பிரதாபத்தை...

எந்த வருஷமும் இல்லாத அளவுக்கு, செடிகளில் இந்த வருஷம் காய்ப்பாம், தோப்பு வைத்திருப்பவர்கள்கூட பொறாமை படற அளவுக்கு! கிட்டே இருந்து தவறாமல் தண்ணி ஊற்றியிருந்தால் இன்னும் காய்த்திருக்குமாம்.

அம்மா நினைத்தது போலவே பாதிக் காய்கள் திருட்டுப் போய்விட்டனவாம். போற வர்ற எல்லாரும் கொத்துக் கொத்தாய்ப் பறித்துப் போய்விட்டார்களாம். அப்படி பறித்துக் கொண்டு போனவர்களை அன்றைக்கே சாவு வந்து கவ்விக் கொள்ளும் அளவுக்குச் சாபமிட்டாள் அம்மா!

எஞ்சியிருந்த காய்களே நூறு தேறிற்றாம்.

கொண்டு வந்த சின்னப் பையில் நூறு காய் இல்லை.

''மொத்தத்தையும் கொண்டு வர முடியுமா? அப்புறம் கிராமத்துல இருக்கற மக்க, மனுஷாளுங்க என்ன நினைப்பாங்க. ஆளுக்கு நாலுகாய் கொடுத்தேன்...'' என்று துவங்கி எழுபத்தைந்து காய்களை யார் யாருக்குக் கொடுத்தாள் என்று பட்டியல் போட்டுவிட்டு, "இருவத்தஞ்சு காயை அப்படியே கொண்டு வந்துட்டேன் பார்த்துக்க. எல்லாம் அங்கத்துக்கு வந்திருக்கு. ரெண்டு நாள்ல பழுத்துடும். நீ ஒண்ணு தின்னு பாரேன்... என்னமா ருசியாயிருக்குன்னு...'' என்று பரவசமாய்ப் பேசினாள் அம்மா.

நான் இருக்கும் டென்ஷனில் மாங்காய் தின்னாததுதான் குறை! ஆபீஸுக்கு ஓடினேன். ஏகப்பட்ட வேலைகள் கொட்டிக் கிடந்தன, சமுத்திரம் போல.



ஒரு வாரம் கழித்து, ஒரு சாப்பாடு வேளையில் தொட்டுக் கொள்ள 'வெஞ்சனம்' ஏதும் சரியாக அமையாத நேரத்தில் அந்த மாம்பழம் ஞாபகம் வந்தது.

"ஏம்மா... நம்ம அருமை தோட்டத்துல விளைஞ்ச மாம்பழம் எங்கே? முந்நூறு ரூபாய் செலவு பண்ணிட்டுப் போய் முப்பது ரூபாய்கூட பெறாத காய்களைக் கொண்டாந்தியே! ஒண்ணு கொடு பார்க்கலாம்..." என்றேன்.

''இன்னும் பத்துநாள் பொறுத்துக் கேளுடா. அழுகற பொருளில்லியா அது. எத்தனை நாளைக்கு வச்சிக்கிட்டிருக்க முடியும்! அன்னைக்கே மூஞ்சியிலடிச்சாப்ல வாணாம்னுட்ட...!"

"எல்லாம் தின்னு தீர்த்துட்டீங்களா?"

"சத்தியமா இல்லைடா! புள்ள துன்னாத பழம். நமக்கெதுக்குனு ஒண்ணுகூட வாயில வைக்கலை..."

"அப்புறம்...?"

''ஊர்ல நமக்கு மாந்தோட்டம் (?) இருக்கற விஷயம் இந்தக் காலனிக்காரங்களுக்கு எப்படியோ தெரிஞ்சிருக்கும் போல. ஆளாளுக்கு வந்து விசாரிக்க ஆரம்பிச்சாங்க. சும்மா அனுப்ப முடியுமா? ஆளுக்கு ரெண்டு, ஒண்ணு கொடுத்தேன். காலனில மொத்தம் இருபது குடித்தனமில்ல இருக்கு..? அப்படியும் ரெண்டு பழம் மறைச்சு வச்சேன். உன் பசங்கதான் எடுத்துக்கிட்டானுங்க..." என்றாள் அம்மா பெருமை வழிய.

''அடுத்த வருஷம் பாரு.... போதும் போதும்ங்கற அளவுக்குக் காய்க்கத்தான் போகுது. வேலி போடச் சொல்லி ஊர்ல சொல்லிட்டு வந்திருக்கேன். முந்நூறு ரூபாய் ஆகும்னான். பையன்கிட்ட சொல்லி அனுப்பறேன்னுட்டு வந்தேன்... அவசரமில்லே... அடுத்த மாசம் அனுப்பினால் போதும்..." என்றுவிட்டு அடுக்களைக்குள் மறைந்தாள்.

'களுக்'கென்று சிரிப்பு சப்தம்.

வேறு யார்?... உள் அறையில் படுத்துக் கொண்டு என்னைக் கவனித்துக் கொண்டிருந்த என் மனைவிதான்!



# ஷஷ்டி-60!

**க**டந்த நாற்பத்தைந்து ஆண்டுகளாக மன்னார்குடி மக்களால் 'செங்கமலம்' என அன்போடு அழைக்கப்பட்டு வரும் அருள்மிகு இராஜகோபால சுவாமி திருக்கோயில் யானைக்கு இது மணிவிழா ஆண்டு.

அருள்மிகு இராஜகோபால சுவாமியுடன் அருள்பாலித்து வரும் அருள்மிகு செங்கமலத் தாயாரின் பெயரிலேயே 'செங்கமலம்' எனப் பெயர் சூட்டப்பட்டுள்ளது. இறைப்பணிக்கென்று செங்கமலம் கோயிலுக்குள் அடியெடுத்து வைத்தபோது அதன் வயது பதினான்கு.

கோயில் யானைப் பாகன் க. சுப்பிரமணியன், ஆபத்தான சமயத்தில் தம் மனைவியின் உயிரை காப்பாற்றிய சம்பவத்தை விவரித்தார்.

"இருபத்திரண்டு வருஷத்துக்கு முன்னால, ஒரு நாள் சாயந்திரம் ஆறு மணி இருக்கும். அப்பத்தான் செங்கமலத்துக்குச் சோறு ஊட்டி விட்டிருந்தேன். அதுக்கு குடிக்கத் தண்ணி வேணும்னு கோயிலின் இரண்டாம் சுத்து, காசிப் பிராகாரத்துல இருக்கற கேணிக்கு என் மனைவி, மூன்றரை வயது மகனை அழைச்சுக்கிட்டுப் போயிருந்தாங்க. மூன்றடி விட்டமும், அறுபதடி ஆழத்தில் பதினைந்தடி தண்ணியும் கொண்ட கேணி அது. அப்பத்தான் நான் யானையை அழைச்சுக்கிட்டு, இரண்டாம் சுத்துக்குள்ளார நுழையறேன். தண்ணி இறைக்கும்போது வாளிக்கயிறு சிக்கி நிலை தடுமாறி, கிணற்றுக்குள் விழுந்து விட்டாள் என் மனைவி. அவளுக்கு நீச்சல் தெரியாது. மேட்டில் நின்று கொண்டு என் பையன் 'அம்மா.... அம்மா...' என்று அலறிக் கொண்டிருந்தான்.

நான் பதறி, ஓடிப்போய் கேணிக்குள் குதித்து விட்டேன். கிணற்று விளிம்பில் நின்று கொண்டு கதறும் எங்கள் பையன் இராஜகோபாலனை செங்கமலம், தன் துதிக்கையால் தூக்கி பாதுகாப்பாக ஒரு ஓரமாக நிற்க வைத்துவிட்டுப் பிளிறியது. இடைவிடாமல் பிளிறியது. பிளறிக் கொண்டே இருந்தது.

செங்கமலத்தின் ஆவேசமான பிளிறல் சத்தம் கேட்டு அனைவரும் பெருந்திரளாக கோயிலுக்குள் வந்து விட்டனர். யானையின் பிளிறலால் நெருங்கி வர அச்சப்பட்டு, தூரமாய் விலகி நின்றதும் செங்கமலம் தன் துதிக்கையால் கேணிக்கு உள்ளே துழாவி, அடையாளம் காட்டிவிட்டு அகன்று போய் நின்று கொண்டது.

கிணற்றுக்குள்தான் ஏதோ விஷயமென்று புரிந்து கொண்ட பொதுமக்கள் என்னவென்று எட்டிப் பார்த்தார்கள். மனைவியின் தலை முடியைக் கொத்தாகப் பிடித்துக் கொண்டு உயிருக்குப் போராடிக் கொண்டிருந்தேன். அந்தக் கேணியில் ஏறிவர படிகள் எதுவும் இல்லாததால் ஒரு வழியாகப் பெரிய வடக்கயிறு கொண்டு வந்து இறக்கி, எங்களை மீட்டனர். எங்கள் உயிரைக் காப்பாற்றிய அன்பு உருவம் இந்தச் செங்கமலம்!" என தழுதழுத்தார் சுப்பிரமணியன்.

கட்டுரை, படங்கள்:
**ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**

# ஒரு கேள்வி; ஒரு பதில்!

**உங்களுக்கு ஏன் 'விநாயக் ராம்' என்று பெயர் வைத்தார்கள்?**

**கடம் வித்வான் விநாயக்ராம் :** அது ரொம்ப சுவாரசியமான கதை. 1942ல் திருச்சி, தென்னூரில் நான் பிறந்தேன். நாங்கள் இரட்டைக் குழந்தைகள். கூடப் பிறந்தது ஒரு பெண். பிரசவம் பார்த்த டாக்டர், இரண்டு குழந்தைகளில் ஒன்றுதான் பிழைக்க வாய்ப்பு இருப்பதாகச் சொல்லி விட்டார். இரண்டு பேரில் நான்தான் பல வீனமாக இருந்தேன். எனக்கு 'ராமசேஷன்' என்றும், என் தங்கைக்கு 'சீதாலட்சுமி' என்றும் பெயரிட்டார்கள். 'இரண்டு குழந்தைகளில் ஒன்றை யாருக்காவது தத்துக் கொடுத்துவிட்டால், இரண்டும் பிழைத்து விடும்' - யாரோ ஒருவர், அருள்வாக்கு சொல்ல, அதன்படி செய்ய என் பெற்றோர் முற்பட்டனர். பெண் குழந்தையை யார் தத்து எடுத்துக் கொள்ளுவார்கள்? உடல் ஆரோக்கியமின்றி அடிக்கடி வலிப்பு வந்து கொண்டிருந்த என்னையும் யாரும் தத்து எடுத்துக் கொள்ள முன் வரவில்லை.

நான் ஒன்பது மாதக் குழந்தையாக இருந்தபோது, திருச்சி, தென்னூரில் இருந்த தன் இஷ்ட தெய்வமான பிள்ளையார் கோவிலுக்குக் கொண்டுபோய், பிரம்மச்சாரிக் கடவுளான விநாயகருக்கே சாஸ்திரப் படி என்னைத் தத்துக் கொடுத்துவிட்டார் என் அப்பா! விநாயகருக்குத் தத்துப் பிள்ளையாகிவிட்ட என் பெயரையும் ராமசேஷன் என்பதற்குப் பதிலாக 'விநாயகராமன்' என்று மாற்றிவிட்டார்.

* ஆர். கணேஷ்



* விக்னேஷ்



* இல. கணேசன்



**விநாயகர் சதுர்த்தி ஸ்பெஷல்!**

* கணபதி ஸ்தபதி

**பிள்ளையார் புதுக்கவிதை சொல்லுங்க..**

**நெல்லை ஆ. கணபதி :**

தினம் தினம்
குழாய் நீர்
அபிஷேகத்தில்
திளைத்தவர்,
கடலில் குளிக்க
விரும்பியே
ஊர்வலமாக
உலா வருகிறாரோ!




**பிள்ளையார் பற்றி ஒரு குட்டிக் கதை சொல்லுங்கள்?**

**நடிகர் விக்னேஷ் :** பிள்ளையாரும், முருகரும் மாம்பழத்துக்காகப் போட்டி போட்டு, பிள்ளையாருக்கு மாம்பழம் கிடைக்க, முருகர் கோபித்துக் கொண்டு போன பழைய கதைதான். ஆனால், ஒரு தடவை, டி.வி.யில் இந்தக் கதையைச் சொன்ன ஜெயேந்திர சரஸ்வதி சுவாமிகள், முத்தாய்ப்பாய்ச் சொன்ன தத்துவம் புதுமையானதாக இருந்தது. இந்தக் கதையில் முருகன், மயில் மீதேறி உலகைச் சுற்றி வந்தது, நாம் இந்த உலகில் இருக்கிற ஒவ்வொரு அம்சத்திலும் இறைவனைக் காண்பதைக் குறிக்கிறது. விநாயகர், அம்மையப்பனைச் சுற்றி வந்தது நமக்குள்ளேயே இறைவனைக் காண்பது, கடவுள் நமக்கு உள்ளேயும் இருக்கிறார் நமக்கு வெளியேயும் நிறைந்திருக்கிறார் என்ற தத்துவம் விளக்கியது.

**பிள்ளையார் உருவம் அனைவரையும் கவர்வது ஏன்?**

**கணபதி ஸ்தபதி :** யானையின் தலையும் பூத உடலும் இணைந்த விநாயகரின் உருவம், சிருஷ்டிக்கலை வடிவம் (கிரியேடிவ் ஆர்ட் ஃபார்ம்) இந்த வித்தியாசமான உருவ அமைப்புதான் அனைவரையும் வெகுவாகக் கவர்கிறது.

விநாயகர் என்ற சொல்லுக்கு விசேஷமான நாயகன் அதாவது அரும்பெரும் தலைவன் என்று பொருள். விநாயகரைப் பல்வேறு பெயர்களால் அழைத்தாலும், 'ஐங்கரன்' என்று சொல்வது சிறப்பானது. (நான்கு கைகளும், தும்பிக்கையும் சேர்ந்து ஐந்து கைகளாகக் கொள்ளப்படுகிறது) இதற்குக் காரணம், ஆக்கல், காத்தல், அழித்தல், மறைத்தல், அனுக்கிரஹித்தல் ஆகிய ஐந்து செயல்களைச் செய்பவர் விநாயகர்.

சிவனின் வழிவந்த விநாயகருக்கும் நெற்றிக்கண் உண்டு என்பது பலருக்குத் தெரியாத செய்தி.

**இசைக் கச்சேரிகளில் துவக்கத்தில் பாடப்படும் பிரபலமான விநாயகர் கிருதிகள் என்னென்ன?**

**டாக்டர் ஆர். கணேஷ் :** ஒவ்வொரு தேவதைக்கும், நம் சாஸ்திரத்தில் ஒரு பீஜாக்ஷரம் உண்டு. அம்பிகைக்கு 'ஹ்ரீம்'. அது போல கணபதிக்கு 'கம்', இந்த பீஜாக்ஷரத்தைக் கொண்டு தொடங்கும் 'கம் கணபதே' என்ற ஹம்சத்வனி ராக கீர்த்தனை மிகவும் பிரபலமானது. அதுபோலவே, முத்துஸ்வாமி தீக்ஷிதரின் 'ஸ்ரீ மகா கணபதி ரவதுமாம்' என்ற கௌளை ராக கீர்த்தனையும் பிரசித்தி பெற்றது. திருவாரூர் கமலாலயம் திருக்குளத்தில், ஈசான மூலையில் வீற்றிருக்கும் கணபதியைத் துதித்து என் குருநாதர் மகாராஜபுரம் சந்தானம் மிகவும் விரும்பிப் பாடிய கீர்த்தனை இது.

நம் உடலில் உள்ள ஆறு சக்ரங்களில் முதலாவதான மூலாதாரச் சக்ரத்தின் அதிபதி கணபதிதான். இதன் அடிப்படையில் உருவானது தீக்ஷிதரின் 'மூலா

தார மூர்த்தே' என்கிற ஸ்ரீ ராக கிருதி. தீக்ஷிதரின் இன்னொரு மிகப்பிரபலமான கிருதி 'வாதாபி கணபதிம் பஜே!'

**உங்களால் மறக்க முடியாத விநாயகர் சதுர்த்தி எது?**

**இல. கணேசன் :** நெருக்கடி நிலை அமலில் இருந்த சமயம், நான் ராமானுஜன் என்ற பெயரில் தலை மறைவு வாழ்க்கை நடத்திய போது, மதுரையில் கொண்டாடிய விநாயகர் சதுர்த்தி மறக்க முடியாதது. அவ்வப்போது.



• விநாயக்ராம்



• சுசி. கணேசன்

பஜனை மண்டலி என்ற பெயரில், தடை செய்யப்பட்டிருந்த ஆர்.எஸ்.எஸ். அமைப்பைச் சேர்ந்த நாங்கள் அனைவரும் ரகசியமாக கூடுவோம்.

அந்த தருணத்தில், பெரிய அளவில் ஏதாவது செய்ய வேண்டும் என்று திட்டமிட்டபோது, எங்களுக்கு ஒரு நல்வாய்ப்பாக விநாயகர் சதுர்த்தி அமைந்தது. இளைஞர் நற்பணி மன்றம் என்ற பெயரில் விநாயகர் சதுர்த்தியை விமரிசையாகக் கொண்டாட முடிவு செய்தோம். போலீஸ் அனுமதி கிடைப்பதில் சிக்கல் இருக்கும் என்று தகவல் கிடைத்தது. இளைஞர் நற்பணி மன்றம் சார்பில் ஆறாவது ஆண்டு (!) விநாயகர் சதுர்த்தி விழா என்று துண்டுப்பிரசுரங்கள் விநியோகித்தோம். போலீஸும் இது வழக்கமான கொண்டாட்டம்தான் போலும் என்று கருதி அனுமதி கொடுத்துவிட்டது.

ஏராளமான ஆர்.எஸ்.எஸ். தொண்டர்கள் ஆர்வமாய் ஜெய் கணேச கோஷமிட்டு, விநாயகர் ஊர்வலத்தில் பங்கேற்றனர். என்னைக் கைது செய்ய முயற்சி செய்து கொண்டிருந்த போலீஸ், ஊர்வலத்தில் என்னை அடையாளம் கண்டுபிடித்து, கைது செய்யக் காத்திருந்தது.

நான் ஊர்வலத்தில் பங்கேற்காமல், அதே சமயம், ஊர்வலத்தை அருகிருந்து பார்க்க ஓர் உபாயம் செய்தேன். ஊர்வலப் பாதையில் செல்லும் நான்காம் எண் பஸ்ஸில் ஏறி ஊர்வலத்தைப் பார்க்க வசதியாக இடது ஜன்னல் பக்கம் உட்கார்ந்து பயணம் செய்தேன். ஊர்வலப் பகுதியை பஸ் தாண்டியவுடன், பஸ்ஸைவிட்டு இறங்கி, எதிர்ப்புறம் வரும் பஸ்ஸில் ஏறி, வலது ஜன்னல் பக்கம் உட்கார்ந்து கொண்டு, ஊர்வலத்தைப் பார்த்தேன். இப்படி பல தடவை, அன்று பயணம் செய்து, ஊர்வலத்தைப் பார்த்து மகிழ்ந்தேன்!

**பிள்ளையார் சம்பந்தப்பட்ட சினிமா சென்டிமென்ட்ஸ் ஏதாவது உண்டா?**

**இயக்குனர் சுசி கணேசன் :** ஏவி.எம். ஸ்டுடியோவில் ஒரு பிள்ளையார் இருக்கிறார். சினிமா வட்டாரத்தில் அவரை ரொம்ப ராசியாகச் சொல்வார்கள். 'பாட்சா' படத்தின் முதல் காட்சியை அங்கே எடுத்த போது, உடைத்த தேங்காயில் பூ இருந்ததைப் பார்த்தவுடன், அங்கே வந்திருந்த அனைவரும் மனம் நெகிழ்ந்து திட்டவட்டமாகச் சொன்ன விஷயம் : 'இந்தப் படம் சூப்பர் டூப்பர் ஹிட்!'

அதன்பின், படத்தின் முதல் ஷாட்டை அந்தப் பிள்ளையார் கோவிலில் எடுப்பதை தெய்வ நம்பிக்கை கொண்ட பல திரைப் படத் துறையினரும் சென்டிமென்டலாகக் கொண்டிருக்கிறார்கள். அந்தக் காட்சி, படத்தில் இடம் பெறாவிட்டாலும் முதல் காட்சியை அங்கே எடுப்பது வழக்கமாகி விட்டது.

விரைவில் ரிலீஸ் ஆகவிருக்கும் 'விரும்புகிறேன்' படத்தின் பூஜை சோழா ஓட்டலில் நடந்தது என்றாலும், படத்தின் முதல் காட்சியை ஏவி.எம். பிள்ளையார் கோவிலில் எடுத்தேன். ஆனால் வழக்கமான பிள்ளையாராக அவரைக் காட்டாமல், மதுரை மீனாட்சி அம்மன் கோவிலில் உள்ள வித்தியாசமான விபூதி பிள்ளையாராக மாற்றி எடுத்தேன்.

'விரும்புகிறேன்' படம் வெளியாகி, வெற்றி பெறவும், அடுத்து நான் இயக்கவிருக்கும், மெட்ராஸ் டாக்கீஸ் தயாரிக்கும் படம் நல்லபடியாக முடியவும் சென்டிமென்டலாக, அந்த ஏவி.எம். பிள்ளையாரை வேண்டிக் கொண்டிருக்கிறேன்.

தொகுப்பு : **எஸ். சந்திரமௌலி**

# ரகசியாகும்

எனக்கோ வயது அறுபது ஆகிறது. இளமை என்னை விட்டுக் கரைந்து சென்று விட்டது குறித்து எனக்கு இலேசான வருத்தம்.

இந்த அறுபது வயதில் வாழ்க்கையைப் பற்றி நான் அறிந்து கொண்டது, நமது மனம் தான் வாழ்க்கை என்ற உண்மையை!

உடலையும் மனத்தையும் எப்போதும் இளமையாக வைத்திருக்க வேண்டும். அப்போதுதான் வாழ்க்கையில் ஒரு பிடிப்பும் துள்ளலும் இருக்கும்.

எழுபதைக் கடந்தும் எம்.ஜி.ஆர், இளமைத் தோற்றத்துடன் இளைஞராக நடிக்கவில்லையா?

ஆகாய விமானப் பயிற்சி நிலையத்தில் பணியாற்றும் எல்லோரும், எத்தனை வயதானாலும் பாய்ஸ் என்றே அழைக்கப்படுவது ஏன்? அவர்களது வீர தீர செயல்களுக்கு வயதான உணர்வு கூடாது என்பதால் தானே?

இவற்றையெல்லாம் நன்றாக எண்ணிப் பார்த்துதான், நான் 58 வயதில் ஓய்வு பெற்ற பிறகு, கைகால்களை முடக்கிக் கொண்டு மூலையில் உட்கார்ந்து கொண்டிராமல், இந்த இரண்டு ஆண்டுகளாக சிறுகதைகள், கவிதைகள், கட்டுரைகள் என எழுதிக் கொண்டு வருகிறேன். ஆனால், இதற்குக் குடும்பத்தில் எவ்வளவு எதிர்ப்பு தெரியுமா? வயசான காலத்தில் ஏன் இந்த வேலை என்பதுதான் எல்லோருடைய ஏகோபித்த கேள்வியும்.

"தாத்தா.... கதை எழுதறியா? உடறியா?" என்று பேரன் பேத்திகள் கூட கேலி செய்கிறார்கள்.

அரசாங்க வேலையில், ஒரு மிகப் பெரிய பொறுப்பில் இருந்து, செக்கு மாடு போன்று உழைத்துக் கொண்டிருந்த எனக்கு, அப்பொழுதெல்லாம் இதற்கு நேரமேது? இப்பொழுதுதான் அதற்கு நேரம் கிடைத்தது. நூறு வயது வரை ஏன் என் எழுத்துப் பணி தொடரக் கூடாது?

என் மனத்தை நான் இந்த சுழற்சியில் ஈடுபடுத்தி வைத்துக் கொண்டிருந்தாலும் எனது சுற்றமும் நட்பும் என்னைக் கிழவன் என்றே எப்பொழுதும் சுட்டிக்காட்டிக் கொண்டே உள்ளனர்.

இராமநாதபுரத்தில் ஊருக்கு வெளியே உள்ள கல்லூரியில் பணிபுரிந்துவிட்டு, மாலை வேளையில் காலார, ஊர் நோக்கி நடந்து கொண்டு வந்த என்னைப் பார்த்து, எதிரில் பள்ளிக்கூடம் விட்டு வந்த சில ஏழைச் சிறுவர்கள், 'வணக்கம் தாத்தா' என்றனர். உடனே அவர்களுக்கு நான் ஏனோ ஆளுக்கு ஒரு ரூபாய் கொடுத்தேன்.

அவர்கள் கூப்பிட்ட மரியாதைக்காகவா அல்லது தாத்தா என்பதில் ஒரு சுகம் இருந்ததா?

என்றாலும் நான் அந்த வயதை அடைந்துவிட்டேனோ என்று நினைத்த

**'என் கதைகளை விட மோசமான, உப்பு சப்பு இல்லாத கதைகளெல்லாம் பிரசுரமாகும் போது, என் கதைகள் மட்டும் போய்ச் சேர்ந்ததா, சேரவில்லையா என்ற நிலையிலா இருக்க வேண்டும்?'**

**முருகமணி**



போது எனக்கு மேலும் வயது கூடி விட்டது போல தோன்றியது.

அதுமட்டுமல்ல, ஓய்வு பெறும் வயதை நெருங்க, நெருங்க எல்லோரும் என்னை 'அய்யா... அய்யா..' என்று அழைப்பதும், அவர்களை விட நான் வயதில் மூத்தவன் என்ற உணர்வும், ஓட்டல்களிலும் பஸ்ஸிலும் எனக்கு 'பெரியவரே' என்று பெயர் சூட்டப்படுவதும் எனக்கு சங்கடமாகத்தான் இருந்தது.

இளமையே உருவான முருகப்பெருமானின் பக்தன் நான். எனவே எப்பொழுதும் இளமையாக இருக்கத்தானே மனசு விரும்பும்.

ஆனாலும் அதற்கு காலம் சம்மதிக்குமா? காலப்போக்கில் எனது பெரிய மகளின் மகனும், சிறிய மகளின் மகளும் என்னைத் 'தாத்தா', 'தாத்தா!' என்று கூப்பிட, அந்த தேனமுது என் காதில் விழ, நான் உண்மையிலேயே ஒரு தாத்தா ஆகிவிட்டேனோ?

அதே நேரம் அந்தக் குழந்தைகளுடன் குழந்தையாக விளையாடும் போதும், கதை சொல்லும் போதும், அந்தக் குழந்தைகளின் மன உணர்வுகளுக்கு ஏற்ப நடந்து கொள்ளும் போதும், இந்தக் கிழத்தன்மை மறைந்து, நானும் குழந்தையாகிவிடும் ஒரு பாக்கியமும் கிடைத்தது.

ஆனால் அந்த பாக்கியம், அந்தக் குழந்தைகளுடன் இருக்கும் போது மட்டும் தானே கிடைக்கும். எனக்கோ ஆயிரத்தெட்டு ஜோலி. நான் இருக்கும் ஜாகை வேறு. அவர்கள் இருக்கும் ஜாகை வேறு வேறு. மேலும் பேத்தி இருப்பதோ வெளியூரில். அதே போல், அவர்களும் பள்ளிக்கூட நாட்களில் மிகவும் பிஸி. காலையில் எழுந்து பள்ளிக்கூடம் போகத் தயாராவதும், மாலையில் வீட்டுக்கு வந்த பின் சற்று விளையாடிவிட்டு ஹோம் வர்க் செய்வதும் அந்தக் குழந்தைகளின் அன்றாட பாரம் தூக்கும் வேலைகள்! விடுமுறை நாட்களில் அதுவும் சமய சந்தர்ப்பம் நேர்ந்தால் தான் எங்கள் சந்திப்பு.

இந்நிலையில், எங்களுக்குள் இடைவெளி இருந்ததால், எனக்குக் கிழட்டுத் தன்மையும்

தட்ட ஆரம்பித்து விட்டது. காரணம், நான் எத்தனை முறை கதைகள் எழுதிப் போட்டாலும், இந்தப் பத்திரிகைகாரர்கள் ஒன்றைக் கூட இதுவரை போடாமலிருப்பது, எனக்கு மனத்தளர்ச்சியைத் தந்தது. அப்படி என்ன தான் அவர்கள் எதிர்பார்க்கிறார்கள்? என் கதைகளை விட மோசமான, உப்பு சப்பு இல்லாத கதைகளெல்லாம் பிரசுரமாகும் போது, எனது கதைகள் மட்டும் போய்ச் சேர்ந்ததா, சேரவில்லையா என்ற நிலையிலா இருக்க வேண்டும்?

ஒரு தளர்வு என்னை மேகம் போல் சூழ்ந்து கொண்டதும் எழுதுவதை நான் சற்று நிறுத்தினேன். விழலுக்கு இறைத்த நீராகவும், காட்டில் எரிந்த நிலவாகவும் எனது முயற்சிகள் பலன் தராமலே நான் கண்ணை மூடிவிடுவேனோ என்ற கவலை என்னை மலைப்பாம்பு போல் சிறிது சிறிதாக விழுங்கியது.

அப்பொழுதுதான் எனது மனைவி போட்ட அதட்டல் என் காதில் விழுந்தது.

"என்ன கப்பல் கவிழ்ந்தாப் போல ஏதோ யோசனையில் மூழ்கிப் போயிருக்கிங்க? வாங்க, இன்னிக்கு குமரேசன் பீச்சுக்குக் கூட்டிக்கிட்டுப் போகச் சொல்றான், சீக்கிரம் போயிட்டு வந்திடலாம்."

சூழ்நிலை மாற்றமும் எனக்கு மிகவும் அத்தியாவசியமாகத் தோன்றியது. எனவே சீக்கிரம் தயாராகி, அண்ணா நகரிலிருந்து மந்தவெளி சென்று அங்கிருந்து ஐந்து வயது பேரன் குமரேசனுடன் பீச் போனோம்.

கடற்கரையில் பொன் மணற்பரப்பு. இயற்கை விரித்த இனிய கம்பளம். இளமை மாறாத காற்று வாங்கினாலே, உடல் புழுக்கம் மட்டுமல்ல, மனப்புழுக்கமும் இடம் தெரியாது மறைந்து விடுவது உண்மை. அதிலும் குழந்தைகளுடன் சென்று விட்டால் சொல்லவே வேண்டாம்.நம்மை நாம் மறந்து குழந்தை கூத்து ஆடி ஒரு தனி உலகிலேயே சஞ்சரிக்க ஆரம்பித்துவிடுவோம்.

அந்தக் கடலலைகள், புகட்டும் பாடம் தான் என்ன? விழு, எழு, எழு, விழு. மீண்டும் விழு, எழு என்பதுதானே?

இவ்வளவுக்குப் பிறகும் கூட என் மனச் சுமை ஏனோ குறையாமலே இருந்து என் முகத்தைச் சுண்டைக்காயாக மாற்றிவிட்டது.

குமரேசன் ஆசைப்பட்டதெல்லாம் நிறைவேற்றினேன். ரங்கராட்டினம், குதிரை சவாரி, காற்றாடி, பலூன் இன்னும் எத்தனையோ சில விளையாட்டுப் பொருட்களும் சேர்த்து இறுதியில்...

"தாத்தா... தாத்தா... அந்த ஏரோப்ளேன் வாங்கித்தா..."

"குமரேசா... உங்கிட்டே வீட்டில எத்தனை ஏரோப்ளேன் இருக்குடா... உங்கிட்ட இருக்கிற பொம்மைகளை வைச்சே ஒரு பொம்மை எக்ஸ்பிஷன் கூட நடத்தலாம்... வேணாம் வா... கையில காசு கொஞ்சமாகத்தான் இருக்குது. அதுவும் ஆட்டோவுக்குச் சரியாப் போயிடும்.... இன்னொரு நாள் பார்த்துக்கலாம்."

"ஊம்... ஊம்.... எனக்கு ஏரோப்ளேன் தான் வேண்டும்" என்று குமரேசன் அழுது



"இப்பல்லாம் என் கணவர் நான் சொல்றதுக்கெல்லாம் தலையாட்டறது இல்லே!"

"எதுக்கும் ஒரு தடவை கழுத்தில் சுளுக்கு எடுத்துப் பாரேன்!"

– எஸ். வீரராஜன்

கல்கி 26.8.2001

"நீ கொடுத்து வைச்சவடி! உன் மருமககிட்ட உன்னைப் பற்றி எந்தக் குறையும் சொல்ல முடியலே! உடனே சண்டைக்கு வரா!"

"ஆமாம், என்னைப் பற்றி எந்தக் குறையும் அவளைத் தவிர வேறு யாரும் சொல்ல அவ சம்மதிக்கவே மாட்டா!"

– அ. ராஜா ரஹ்மான்



கொண்டே கையில் வைத்திருந்த பொருள்களை எல்லாம் கீழே வீசிவிட்டு, மேற்கொண்டு ஓர் அடி எடுத்து வைக்கவும் மறுத்துவிட்டான்.

எதிர்க்கட்சி தலைவியாகிய எனது மனைவி இந்தச் சந்தர்ப்பத்தை விட்டு விடுவாளா?

"சரியான கஞ்சப்பிசினாரியா இருக்கீங்களே... கதை அதுன்னு எவ்வளவோ எழுதி போட்டுக்கிட்டுப் பணத்தை வேஸ்ட் செய்யறீங்க.... குழந்தை கேக்கிறானே, இதில்தான் உங்க சிக்கனத்தைக் காண்பிக்கணுமா.... வாங்கிக் குடுங்க..."

"புரியாம பேசறியே, மிச்சக் காசு ஆட்டோவுக்குத்தான் இருக்கு..."

"ஆட்டோவுக்கு வீட்டுக்குப் போயி குடுத்துக்கலாம், குழந்தைக்கு முதல்ல இதை வாங்கிக் கொடுப்பா..."- எனது மகள்.

" இதைப் போல பொம்மைங்க இவன் கிட்ட ஏற்கெனவே நிறைய இருக்கு..."

இந்த நேரத்தில் எதிர்பாராதவாறு சட்டென்று குமரேசன் என் மீது புலிபோல பாய்ந்தான். தன் பிஞ்சுக் கரங்களால் என்னைக் கிள்ளினான், பூரினான், என்னுடன் சண்டை போட்டான்.

"போடா, அண்ணாநகர் போடா. உன் பேச்சு காய்டா.... நீ கதை எழுதறக்குத் தான் லாயக்குடா... போய் கதை எழுதுடா... போடா..." என்று அவன் அழுதுகொண்டே சொன்ன வார்த்தைகள் அசரீரியாக தெய்வமே எனக்குச் சொல்லியது போல் தோன்றியது.

இதைக் கேட்டு அவனைத் தவிர, எல்லோரும் சிரித்தோம், அவனுக்கு அந்த ஏரோப்ளேன் வாங்கிக் கொடுத்தேன்.

"அதை அப்பவே வாங்கிக் குடுத்திருக்கலாமில்ல தாத்தா..." என்று செல்லச் சிரிப்புடன் அவன் உடனே சமாதானமாகி என்னுடன் ஒட்டிக் கொண்டான்.

ஆனால் எனக்குள்ளே ஒரு இனிய மாற்றம் உண்டானது. எப்பொழுதும் என்னை அப்படி அழைத்திராத அவன், 'அடா' போட்டு கோபித்துக் கொண்டது, அவனுக்குச் சமமாக என்னை ஆறு வயதுக்கு கொண்டு வந்து திட்டியது எனக்குச் சந்தோஷமாக இருந்தது. அது மட்டுமல்ல... என்னுள் கிழத்தன்மை மறைந்து இளமை திரும்பியது.

அந்த உற்சாகத்தில் வீடு வந்து தான் இந்தக் கதையை எழுதி முடித்தேன்.

# “கலைத்துச் சேர்த்தேன்...”

*சங்கீதத்தை முழுநேரத் தொழிலாக மேற்கொண்டு, இளம் வயதிலேயே தம்மை நிலைநாட்டிக் கொண்டவர் நெய்வேலி சந்தானகோபாலன். மகாராஜபுரம் சந்தானம், டி.என்.சேஷகோபாலன் என்ற இரு பெரும் வித்வான்களிடம் பயின்றவர். தங்களுக்கேயுரிய ரசிகர் பட்டாளத்துடன் தனித்தன்மை வாய்ந்த சங்கீதம் வழங்கவல்ல இந்த இருவரிடமும் கற்றுக் கொண்டாலும் சந்தான கோபாலனின் சங்கீதத்தில் இன்று இவர்களின் பாதிப்பு வெகு குறைவாகவே தெரிகிறது. 'என் வழி தனி வழி' என்று பிடிவாதமாய் இருந்து சமூகத்திலும் சிறந்த அந்தஸ்தை அடைந்திருக்கிறார். தாம் கடந்து வந்த பாதையை விமர்சனப் பார்வையுடன் நோக்குகிறார்.*

**ப**த்தொன்பது வயதுக்கு அது பெரிய அடிதான்!... கண்டதுமே என்னை ஏற்று ரொம்ப அந்தரங்கமாகப் பழகிய குருவின் வகுப்புகள் இனி இல்லை என்றாகிவிட்டது... கண்ணைக் கட்டி காட்டில் விட்டாற் போலிருந்தது.

இசைப் பாரம்பர்யம் மிக்க குடும்பத்தில் நான் பிறக்கவில்லை. அப்பாவுக்கு நெய்வேலியில் (என்.எல்.சி.) அதிகாரியாக வேலை. சராசரி நடுத்தர வர்க்கத்துக் குடும்பம். அதற்கேயுரிய இசை ஆர்வம்; அப்பா மதுரை மணி ரசிகர். அம்மா எல்லா பாட்டும் கேட்பார். செம்பை அனந்தமணி பாகவதர் என்பவரிடம் பாட்டு கற்றுக் கொள்ள ஆரம்பித்தேன். இயல்பாகவே நன்றாய்ப் பாட வந்தது. ஐந்தாவது படிக்கும்போது அரங்கேற்றம் ஆகிவிட்டது.

ஆனால் பள்ளிப் படிப்பு முடிந்து சென்னையில் வைஷ்ணவா கல்லூரியில் சேர்ந்தபிறகுதான் என் வாழ்க்கையில் பெரிய மாற்றங்கள் ஏற்பட்டன. பேராசிரியர்களும் கூடப் படித்தவர்களும் 'நீ ஏன்பா இப்படி 'லேப்' ஓர்க்குக்கெல்லாம் வந்து கஷ்டப்படணும்?' என்று அன்போடு சொல்லுவார்கள். 'நீ பாடப் பிறந்தவன்...' என்று சொல்லாமல் சொல்வதுபோல் இருக்கும்... அப்போதே நெஞ்சுரம் பிறந்துவிட்டது. -பாடகனாகிப் பிழைக்கலாம் என்று முடிவு செய்துவிட்டேன்.

அந்த தைரியத்தில்தானோ என்னவோ, மாம்பலத்தில் சித்தி வீட்டில் தங்கிப் படித்துக் கொண்டிருந்த நான், திடீரென்று ஒரு நாள் மகாராஜபுரம் சந்தானம் சார் வீட்டுக்குள் நுழைந்துவிட்டேன். வாசலில் பெயர்ப் பலகை தொங்கியதைப் பார்த்து உள்ளே போய் நமஸ்காரம் செய்தேன். அறிமுகம் ஆயிற்று... பாடச் சொன்னார்.

'ஜனனி நின்னுவினா'வும் 'ஸ்ரீ ரமா சரஸ்வதி'யும் பாடினேன். ரொம்ப சந்தோஷத்தோடு ''ஞானம்!'' என்று மனைவியைக் கூப்பிட்டார். "பையன் எப்படிப் பாடறான் பார்த்தியா?'' என்றார். "இன்னிக்கு எட்டாவது நாள் நீ என்னோட கிருஷ்ணகான சபாவிலே பாடறே...'' என்றார். பாடவும் வைத்தார்!

பதினேழு வயது அப்போது எனக்கு. தலையிலே யாரோ கிரீடம் வைத்த மாதிரி சந்தோஷம். அவருடைய நம்பிக்கை ஏற்படுத்திய உற்சாகத்தில் தினமும் காலை ஐந்து மணிக்கு வகுப்புக்குப் போய்விடுவேன். அவரும் தயாராய் இருப்பார். மணிக்கணக்கெல்லாம் பார்த்ததே கிடையாது. எத்தனை பாட்டு? ''கிருஷ்ணா! (சௌகரியம் கருதி என் பெயரை கிருஷ்ணா என்று மாற்றி வைத்தார்.) இதைக் கேளு! இதைக் கேளு!" என்று

வாரி வாரிக் கொடுத்தார்.

'நான் சொல்லுகிற வரைக்கும் தனியாக மேடைக் கச்சேரி பண்ண வேண்டாம்' என்று தடை போட்டிருந்தார். ஆனால் என் அம்மா, தெரியாத்தனமாக ஒரு கச்சேரிக்கு ஒப்புக் கொண்டு ஏற்பாடு செய்து விட்டார்கள். அவர்கள் வாக்கைக் காப்பாற்றுவதா குருவின் கட்டளையா...? என்று சிக்கல்.

அதற்குப் பிறகு சந்தானம் சாரிடம் போக முடியாமலே போயிற்று. பேரிழப்பு அது. அந்தப் பத்தொன்பது வயதில் ரொம்பப் பெரிய அடி. பாதுகாப்பற்ற உணர்வு வந்து சூழ்ந்து கொண்டது.

அதிலிருந்து நான் மீண்டு வரக் காரணம் கலையினிடம் எனக்கிருந்த ஆர்வம் தான். வெறி...! வித்தையை



மேலும் மேலும் தெரிந்து கொள்ள வேண்டும் என்ற அகர வெறிதான் என்னைக் காப்பாற்றியது. அங்கங்கே கேட்டதையும் கற்றதையும் தேனீ மாதிரி சேர்த்து வைத்திருந்தேன். அதையெல்லாம் விருத்தி செய்து கொள்ள வேண்டாமா...? எப்படி என்றுதான் புரிய வில்லை. கச்சேரிகளுக்குத் தொடர்ந்து அழைப்புகள் வந்த வண்ணமிருந்தன.

அந்த சமயத்தில் இந்தியன் ஃபைன் ஆர்ட்ஸில் ஒரு நிகழ்ச்சிக்கு சேஷகோபாலன் சார் வந்திருந்தார். எனக்கு ஒரு பக்கம் ஆச்சர்யம்; இன்னொரு பக்கம் சந்தோஷம். நெய்வேலியில் அவர் பாடக் கேட்டு அவரிடம் பயில வேண்டும் என்று கனவு கண்டவன் நான். முழுக் கச்சேரியும் கேட்டவர், 'என்ன பண்ணுகிறாய்?' என்று என்னை விசாரித்து மதுரைக்கு அழைத்துக் கொண்டார்! கல்லூரிப் படிப்பு முடிந்திருந்தது. எனக்குக் கிடைத்த பாக்கியம் என்று கிளம்பி விட்டேன்.

## வைரமுடைய நெஞ்சு வேண்டும்!

குருகுலவாசம்தான்! அவரும் அள்ளி அள்ளிக் கொடுத்தார் வித்தையை. 'விகாசா' என்று மதுரையில் பெரிய பள்ளி. அங்கே இசை கற்றுக் கொடுக்க எனக்கு வாய்ப்பு வரும்போலிருந்தது. நேர்முகத் தேர்வுக்குப் போக வேண்டும். என்னைத் தயார்ப்படுத்தி ஒரே நாளில் முப்பது கீர்த்தனை கற்றுக் கொடுத்தார்! அவர் கச்சேரிகளுக்காக வெளியூர்ப் போனால் நான்தான் மற்ற மாணவர்களுக்குக் கற்றுத் தருவேன்... ஒரு செல்லப் பிள்ளையாக மீண்டும் ஒரு குருவிடம்... என்னை ஒப்படைத்ததில் மகிழ்ச்சியாயிருந்தது.

ஒரு பாடகன் நூறு சதவிகிதம் வெற்றியடைய வேண்டுமானால், குருவிடமிருந்து 25%, சகமாணவர்களிடமிருந்து 25%, தனது

சிஷ்யர்களிடமிருந்து 25%, நிகழ்ச்சி வழங்கும் அனுபவத்திலிருந்து 25% கற்றுக் கொள்ள வேண்டும். கிட்டத்தட்ட இந்த விகிதாசாரத் தில் எனக்குப் பயிற்சி கிடைத்தது மதுரை யில். கச்சேரிகளும் வந்த வண்ணம் இருந்தன.

இதற்கிடையே பி.எஸ்.ஆர்.பி. தேர்வு எழுதச் சொன்னார் குரு. வேலை கிடைத் தது. ஆனால் 'சங்கீதத்தில் உனக்கு நல்ல எதிர்காலம் இருக்கு. வேலையில் சேர வேண் டாம் என்று சொல்லிவிட்டார். என்ஃபீல்ட் நிறுவனம் தேடி வந்து வேலை கொடுத்தது - பல கம்பெனிகளில் ஸ்போர்ட்ஸ் நிபு ணர்களுக்கு வேலையளித்து ஆதரிப்பது போல சங்கீத வித் வான்களை ஆதரிக்கும் திட் டம் அது. அந்த வேலைக்கு அனுப்பி வைத் தார் சேஷகோபா லன் சார்.



சென்னையில் வந்து என்ஃபீல்டு வேலையை ஏற்று, ஒரு வித்வானாக 'செட்டில்' ஆன பிறகு, வாழ்க்கை மிக வேகமாக என்னை ஓவர்டேக் செய்து கொண்டு ஓடி விட்டது என்றுதான் சொல்ல வேண்டும்.

சபாக்களில் வாய்ப்புகள் தொடர்ந்து வந்தன. இருபத்திநாலு வயதில் திருமணமும் ஆகிவிட்டது. வகுப்புகள் எடுக்க ஆரம் பித்தேன். யார் வந்தாலும் இல்லை என்று சொல்லாமல் கற்றுத் தரவேண்டுமாக்கும் என்று நினைத்து, குரு கிருபா இசைப் பள்ளியை மூன்று இடங்களில் நடத்தினேன். இனிமேல் என்ஃபீல்ட் வேலையை வேறு யாருக்காவது விட்டுக் கொடுப்பதுதான் நியாயம் என்று தோன்றிவிட்டது. வேலையை ராஜினாமா செய்தேன்.

வளர்ச்சி இருந்தது ஆனால் அது நான் விரும்பிய திசையிலான வளர்ச்சியாக இருக்கவில்லை. எந்த கச்சேரியில் எப்படிப் பாடினாலும் ரசிகர்கள் ஏற்றுக் கொண்டார் கள். ஆனால் விமர்சகர்கள்...? அவர்களைத் திருப்திப்படுத்துவது அசுவமேத யாகம் செய் வதைக் காட்டிலும் கஷ்டமாயிருந்தது. 'சேஷ கோபாலனின் கார்பன் காபி', 'வெறும் எதி ரொலி' என்றெல்லாம் எழுதினார்கள். எனக் குப் புரியவில்லை... நான் எப்படிப் பாட வேண்டும்? சேஷகோபாலன் சார் கற்றுத் தந்ததை அப்படியே பாடுவது சுலபமாயிருந் தது; சந்தோஷமாகவும் இருந்தது. ஆனால் ரசிகர்களை எப்போதும் தக்க வைத்துக் கொள்ள வேண்டுமே என்ற விசாரம் ஓயா மல் வாட்டியது. அப்புறம் புகழ் ஆசை.... அதை எப்படிச் சொல்ல...? பேய் போல் ஆட்டிப் படைத்தது! கூட்டிக் கழித்து இன்று பார்க்கும்போதுதான் தெரிகிறது: சங்கீதம் என்றால் என்ன என்பதை நான் புரிந்து கொள்வதற்கு முன்பாகவே வித்வானாகி யிருந்தேன். என்னை நானே புரிந்து கொள் வதற்கு முன்பாகவே கச்சேரிகள் ரொம்ப வந்து குவிந்து விட்டன!

என் கலை உயர வேண்டும்...? எப்படி...? எங்கெல்லாமோ விடைகள் தேடிக் குழம்பிப் போனேன். மனம் அமைதிப்பட 'தெய் வத்தின் குரல்' அத்தனை பாகங்களும் படித் தேன்... அவற்றில் காஞ்சி பெரியவர் வழி காட்டியுள்ளபடி வாழ்க்கை நடத்த முற் பட்டேன். பல சந்தர்ப்பங்களில் பலபேருக் கென்று அவர் சொன்ன அறிவுரைகள் அத் தனையையும் நான் ஒருவனே கடைபிடிப்ப தென்பது நடைமுறை சாத்தியமா...? அதுவும் ஊர் ஊராகச் சென்று கச்சேரி பண்ண வேண்டும். நானே வெண்கலப்பானை எடுத் துப் போய், நானே சமைத்துக் கொள்ளும் பிடிவாதங்களிலெல்லாம் ஈடுபட்டேன். டி.கே. மூர்த்தி சார் ஒருமுறை சொன்னார்: "இப்படி சமைக்கறதுலேயே பொழுதைப் போக்கினால், சங்கீதம் வராது!" என்று.

வீட்டில் இருக்கும்போதும் இரு வேறு விதங்களாக நடந்து கொண்டேன்- split personality என்பார்களே அதுபோல... சிஷ்யர்கள் வந்தால் அவர்களுக்கு நான் ரொம்ப ஆதர்சமாகத் தெரிய வேண்டும் என்று இயல்புக்கு விரோதமாகவே மாறி விடுவேன். கச்சேரி இருக்கும் தினங்களில் மனைவி மீராவால் நெருங்கி வந்து பேசக்கூட முடியாது என்கிற மாதிரி வேறு உலகத்தில் சஞ்சரித்துவிடுவேன்.

என்னுடைய அத்தனை கோணல்களை யும் சகித்துக் கொண்டு சரி செய்தவள் மீரா... குடும்பம் என்றால் என்ன... குடும்பப் பொறுப்பு என்றால் என்ன என்ற யதார்த்தங் களைக் கண் திறந்து பார்க்க வைத்தாள்.

யதார்த்தம்...! அதுதான் இறுதியில் வாழ்வையும் தொழிலையும் நிர்ணயிக்கிறது என்பதை உணர மீரா மிகவும் உதவியாக இருந்தாள், இருக்கிறாள்.

முதல் குழந்தை ஸ்ரீரஞ்சனி பிறந்து பன்னி ரண்டு ஆண்டுகள் கழித்து எங்களுக்கு ஒரு மகன் பிறந்திருக்கிறான். ஒரு வயது ஆகிறது.

என் சங்கீதத்துக்குக்கூட ஒரு வயது தான் ஆகிறதோ என்று அவ்வப்போது தோன்றும்!

கலையில் ஜனரஞ்சகத்துக்காக மட்டுமே நான் நீண்ட நெடுங்காலம் பாடுபட்டேன். அப்படிப் பட்டபாடெல்லாம் வீண் என்று ஒரு கட்டத்தில் புரிந்து விட்டது. இதற்குப் பெரிதும் உதவினார் தஞ்சாவூர் சங்கரய்யர். எங்கள் வீட்டுக்குப் பக்கத்தில்தான் இருந் தார் இந்தப் பெரியவர். நல்ல சங்கீதம் எங்கி ருந்தாலும் யாரிடமிருந்தாலும் ரசிப்பார்... அவர் மூலம் பல நல்ல, உயர்ந்த பாணிகள் எனக்கு அறிமுகமாயின... ஜனரஞ்சகம் மட்டும் இருந்தால் போதாது, இதமாகப் பாட வேண்டும் - கேட்க சௌக்கியமாக இருக்க வேண்டும் - இது ரொம்ப முக்கியம் என்பது தெரிந்தது.

இது விஷயத்தில் ம்ருதங்க வித்வான் வேலூர் ராமபத்திரன் என்னை நிறைய பாதித்தார். பல பாணிகளின் நல்ல அம்சங் களை ஒன்று சேர்த்து ரொம்ப விஞ்ஞான ரீதியாக எனக்கென்று ஒரு தனிப்பாணி உருவாக்க முடியும் என்று தோன்றியது. ஆனால் மீண்டும் அரிச்சுவடிக்குப் போக வேண்டியிருந்தது- சரளி வரிசையிலிருந்து ஆரம்பித்து எனக்குள் இருந்தவற்றை யெல்லாம் கலைத்துச் சேர்த்தேன்!

"கலைத்துச் சேர்க்க வேண்டும்!"- இது வித்வான் கே.வி.நாராயணசாமி சார் சொல்கிற வாக்கியம். சிஷ்யர்களைச் சோதிக்க தம்பூரா சுருதியைக் கலைத்து விட்டுச் சேர்க் கச் சொல்லுவார்கள்- ஆனால் வித்வான் அவ்வப்போது தான் கற்றவற்றையும் தனது சிந்தனைகளையும் வாழ்வின் இலக்குகளையும் கலைத்துச் சேர்த்துச் சீர் செய்ய வேண்டும். இப்படிக் கலைத்துச் சேர்ப்பது வலிகள் நிறைந்த அனுபவம். இதுவரை நாம் செய்த பல காரியங்கள், நமது அணுகுமுறைகள் தவறு என்று ஒப்புக் கொண்டு நாமே நம்மி டம் கர்வபங்கப்படும் அனுபவம். ஆனால் அதன் முடிவில் கலை புதுப்பொலிவோடு பரிமளிக்கிறது. வாழ்க்கையில் சுவாரஸ்யமும் அமைதியும் கூடுகின்றன.

சங்கீதம்தான் முக்கியம்; சாஹித்யம் (பாட்டின் வார்த்தைகள்) இரண்டாம் பட் சம்தான் என்று நினைத்துக் கொண்டு வார்த்தைகளைச் சிதைத்துப் பாடிக் கொண் டிருந்தேன். வாய்ப்பாட்டுக்கு அழகு சாஹித் யமும்தான் என்பதைக் கொஞ்சம் அடிபட்ட பிறகே தெரிந்து கொள்ள வேண்டியிருந்தது. வார்த்தைகளை உணர்ந்து, அவற்றை இயற்றிய வாக்கேயக்காரர்களின் உணர்வு களை மதித்துப் பாட ஆரம்பித்தேன்.

வந்தவர்களுக்கெல்லாம் மறுக்காமல் வகுப்பு எடுப்பது அவசியமில்லை; இந்த உல கைப் புனருத்தாரணம் பண்ண நாம் அவ தரிக்கவில்லை என்பதைப் புரிந்து கொண்டு என்னை மாற்றிக் கொள்வதற்குள் பலதர பட்டவர்களுக்குக் கற்றுக் கொடுத்து குரல் பாதிக்கப்பட்டுவிட்டது. எட்டாத உயரங் களில் போய்ப்பாட முயற்சி செய்யாமல் குரலின் அமைப்புக்குள் என்னைக் கொஞ் சம் குறுக்கிக்கொள்ள வேண்டியிருந்தது.



என் ஞானத்தில் எனக்கு ரொம்ப நம்பிக்கை; கர்வம் கூட உண்டு. ஆனால், வெறுமே ஞானத்தை வெளிப்படுத்துவது மாத்திரம் கலையல்ல என்பதை ஒப்புக் கொள்ள வேண்டியிருந்தது.

உலகில் எங்கு சென்றாலும் நுண்கலை களுக்கு ஏன் தனி மரியாதை கிடைக்கிறது? அவை ஆதர்சங்களை எப்போதும் சார்ந்து இருப்பதே அவற்றின் உயர்வு. ஒரு கிளாசிகல் ஆர்டிஸ்ட் அந்த ஆதர்சத்தைத் தான் தேட வேண்டும் என்று மெள்ள மெள்ளப் புரிந் தது. அப்படித் தேடுகிற வழியில் நியாயமான பெயரும், புகழும் பொருளும் நம்மைத் தாமே வந்து அடையும் என்பது வெளிச்ச மாயிற்று.

இப்போது யாருக்காகவும் நான் வேஷம் போடுவதில்லை. குறைவான சிஷ்யர் களென்றாலும் அவர்கள் நண்பர்களாயிருக் கிறார்கள். சங்கீதம்...? அதை நான் நண் பனாக்கிக் கொண்டு விட்டேன். இனி அது வெறும் வித்தையல்ல...நான் மிக மிக நேசிக் கும் நண்பன். என் தகுதிக்கு மேலாக எனக்கு அது வாரி வழங்கிவிட்டது. இனி அதைப் போற்றுவதும் பாதுகாப்பதும் என் கடமை, பொறுப்பு..

தொகுப்பு: **சாருகேசி, எஸ்.ஆர்.**
படங்கள்: **வெங்கடேஷ்**

# பூவரசம் இடு

## 4

மனசு ரொம்பவும் ரவுடித்தன மானது என்று தோன்றியது சுந்தருக்கு. சின்னதொரு பொறி பறந்தால் போதும் அது 'சலம்பல்' பண்ணத் துவங்கி விடு கிறது. அதனைக் கட்டுப்படுத்துவது சாத்தியமே இல்லாததொரு காரியமாக வல்லவா தோன்றுகிறது? இதுவரை அப்படியென்னதான் நடந்து விட்டது? யோசித்துப் பார்த்தால் மிகவும் அல்பக் காரியங்கள். அவர்கள் குடி வந்தார்கள் அதுவும் டிராக்டரில், சாமான்களை ஏற்றிக் கொண்டு ஊர் ஊராகப் போய் வித்தை காட்டுகிற கோஷ்டியைப் போல. 'வித்தை காட்டுகிற கோஷ்டி' என்று பேச்சுக்குச் சொன் னாலும், அதனை அடிக்கோடிடுகிற மாதிரி அந்த வீட்டில் ஒரு குள்ளப் பையன். ஒரு கணம் சர வணனின் மனம் சட்டென்று கற்பனைக்குத் தாவியது. அந்த அம்மா லீலா தெருவில் அமர்ந்து 'டமுக்கு டப்பா டமுக்கு' என்று ஒரு மேளத்தை முழக்குகிறாள். அந்தக் குள்ளப் பையன் குட்டிக் கரணம் போடுகிறான். மூன்று அழகுப் பெண்களும் அரைப்பாவாடை யுடன் சுழன்று ஆடுகிறார்கள் நிறைய காசு

சேர்கிறது.

சுந்தரின் யோசனையை மணி தோள் தொட்டுக் கலைத்தான். "என்னடா நீயா சிரிக்கிற?"

சுந்தர் புன்னகை மாறாமல் தனது கற்பனையை விவரித்தான்.

"டேய், பாவம்டா... ஏதோ நம்ம ஊருக்குக் குடி வந்துட்டாங்கங்கிறதுக்காக இப்படியெல்லாம் கற்பனை பண்ணி கேவலப்படுத்தாதடா."

"அடேயப்பா, அதுக்குள்ள சப்போர்ட் பண்ணக் கௌம்பிடுவிங்களே... பாரு, நம்ம சரவணனை! அந்த பொடுசை, சைக்கிள் பின்னால ஏத்திக்கிட்டு ஊருக்குள்ள கௌம்பிட்டான். அவனுக்கு மூணு சிஸ்டர்ஸ் இல்லேன்னா இப்படிப் போவானா?"

கிருஷ்ணவேணி மரத்தின் பின்னிருந்த அவர்களைப் பார்த்தபடி இருந்தாள். தூரம் காரணமாக பயல்களின் முக அழகு தெளிவாகத் தெரியவில்லை. ஆயினும் சுமாரான மூஞ்சிக்குச் சொந்தக்காரர்கள் தான் என்று தோன்றியது அவளுக்கு. நாலைந்து வருடங்களாகவே இப்படி பையன்களைப் பார்ப்பது அவளது வாழ்வின் முக்கிய அம்சங்களில் ஒன்றாகி விட்டிருந்தது.

வசதிக்குறைவான வீட்டில் பெண்ணாகப் பிறப்பது மிகவும் அவஸ்தையானது என்பதை அவளது குடும்பம் தெளிவாகவே உணர்ந்திருந்தது. கிருஷ்ணவேணியும் சகோதரிகளும் வெல்ல முடியாத ஒரு யுத்தத்தினை நாள்தோறும் நிகழ்த்த வேண்டியவர்களாக இருந்தார்கள். பத்திரிகையைப் புரட்டி படம் பார்க்கும் போது ஏதேனும் ஒரு பக்கத்தில் அழகான கதாநாயகன் சிரிக்கையில் வெகு கவனமாக அதனை அலட்சியப்படுத்தி புரட்டி மேலே செல்வார்கள். பிறகு தனியான ஒரு சந்தர்ப்பத்தில் அந்தப் பக்கத்தினைத் தேடிப் பார்த்து மனசு மலர்வார்கள். இயல்பான குறுகுறுப்பை ஏற்பதும், அதனை எவருடனும் பகிர்வதும் கூட முடியாத படிக்கு அவர்கள் சபிக்கப்பட்டிருந்தார்கள். அவர்களது பொழுதுகள் ஒன்று போலவே புலர்ந்தன. அம்மாவின் சப்தமும் ரேடியோவின் சப்தமுமாக கண் விழிப்பார்கள். டிரான்ஸிஸ்டர் ரேடியோ அவர்களது ஒரே சினேகிதம்.

காலையில் மங்கள இசை, செய்திகள் என்று புலர்கிற பொழுது பாடல்களின் துணையோடு நகரும். கிருஷ்ணவேணி சப்தமாக டிரான்ஸிஸ்டரில் பாட்டு வைத்து விட்டுத்தான் பல் துலக்குவாள். முன்பு அவர்களிருந்த வீட்டிலும் இணற்றடி விசாலமாகத்தான் இருந்தது. சினிமாப் பாடல் அவளுக்குள்ளிருக்கும் கற்பனைக் கதவை வெகு எளிதில் திறந்து விடும். கிருஷ்ணவேணி சட்டென பாடலுக்குள் நுழைவாள். 'காதல் ஓவியம் பாடும் காவியம்' என்று கிளம்பி உள்ளே போய் விட்டால் போதும். வீடும், பாத்திரங்களும், வேலையும், அழுக்குத் துணிகளும் தற்காலிகமாகக் காணாமல் போய்விட முகந்தெரியாத (சமயங்களில் கற்பித்துக் கொண்ட ஏதேனும் ஒரு முகத்துடன்) இணையுடன் அவளது சஞ்சாரம் துவங்கி விடும். அவள் தொடர்ந்து பல்லைத் துலக்கிக் கொண்டேயிருப்பாள். அந்தப் பாடல் முடிந்து அடுத்த பாடலும் வரும்.

"நீ வருவாய் என நான் இருந்தேன்" என்று மற்றொரு பாடல் கிளம்பும். இதுவும் கிருஷ்ணவேணி தன்னை இணைத்து

## பாஸ்கர் சக்தி

கொள்ள பொருத்தமான பாடலாக இருக்கும். கிருஷ்ணவேணி 'சட்'டென தன்னை ஒரு காத்திருக்கும் காதலியாக மாற்றிக் கொள்வதில் ஒரு சிரமமும் இல்லை. சொல்லப் போனால் அவளுக்கு மிகவும் பொருந்துகிற பாத்திரம் அதுதான்.

காதலிக்க ஏங்குகிறவள், காதலிக்கிறவள், காதலித்து வாடுகிறவள், கணவனுடன் கூடுகிறவள், கணவனோடு பாடுகிறவள், கணவனை விட்டு ஓடுகிறவள், கணவனை இழந்து வாடுகிறவள், கணவனை இழந்த பின்பும் (அவனையே) பாடுகிறவள்... என்று ஏகப்பட்ட தமிழ் கதாநாயகிகள் ஏழெட்டு குரல்களில் தத்தம் தாகங்களையும், ராகங்களையும் இசைக்க கிருஷ்ணவேணியோ மூன்று நிமிடங்களுக்கொரு பாட்டுத் தலைவியாக மாறி பல்வேறு நிலைகளில் தினந்தோறும் வாழ முடிந்தது.

நிஜத்தை விட பாவனையே அவளுக்கு கட்டுப்படியான விஷயமாக வாய்த்து விட்டது. அவளது சகோதரிகளும் இதற்கு விதி விலக்கானவர்கள் என்று சொல்ல முடியாது

தங்களுக்கான துணை குறித்த எண்ணமும், கற்பனையும், தவிப்பும் அவர்களிடமிருந்தன. அவற்றைப் பகிர்ந்து கொள்ளவும் முடியாத அவலமிருந்தது. சகோதரிகள் ஒவ்வொருத்தியும் தத்தம் மனசுக்குள் ஒரு

ரகசியப் பெட்டகத்தைப் பூட்டி வைத்திருந் தனர். ஒவ்வொருத்திக்கும் அடுத்தவளின் பெட்டகத்தில் என்ன இருக்கிறதென அறியும் ஆவல். தன் பெட்டகத்தை ஒருபோதும் அஜாக்கிரதையாகத் திறந்து விடக் கூடா தென்கிற சலனம்.

ஆனால் மூவரின் பெட்டகத்திலும் ஒரே விதமான சங்கதிகள்தான் இருந்தன.

அம்மா உள்ளிருந்து கிருஷ்ண வேணிக்கு குரல் கொடுத்தாள்.

"என்னம்மா?"

"வாடி இங்கே. வந்தவுடன்னே பொற வாசல் பக்கம் போய் பராக்கு பாக்க ஆரம் பிச்சாச்சு. இங்க பாரு."

ஒழுங்கு செய்த சாமான்கள் போக மீதமுள்ள தட்டுமுட்டுச் சாமான்கள் தரையில் பரப்பப்பட்டிருந்தன.

"இந்த ரூமைத் திறந்தா இதெல்லாம் உள்ள வச்சிரலாம்."

வீட்டினுள் ஒரு மூலையினுள் சின்னதாக ஒரு ஸ்டோர் ரூம் மாதிரி இருந்தது. அந்த அறையின் சாவி இவர்களுக்கு அளிக்கப்பட்ட சாவிகளில் இல்லை.

"ஏண்டி... வீட்டுக்காரர் வீடு ஊருக்குள்ள இருக்கு. போய் இந்த ரூம் சாவியை நான் கேட்டேன்னு கேட்டு வாங்கிட்டு வர்றியா?"

"ம்ஹூம். நான் போகலை. வேறு யாரை யாவது அனுப்பு."

"யாரை அனுப்புவது? உன் அக்கா மாட் டேங்கிறா. உன் தங்கச்சி, புது ஊருன்னு சங்கடப்படுறா. அழகு கடைக்குப் போயிட் டான். போயிட்டு வாடி...."

"போம்மா.. நான் மாட்டேன்."

"ஏய், சொன்னாக் கேளு... நீதான் போக ணும்."

"ஏன், எனக்கு மட்டும் இது புது ஊரு இல்லியா? எனக்கு மட்டும் சங்கடமாக இருக்காதா?"

"வாய்க்கு வாய் எதுத்துப் பேசாதடி. போ. ஊருக்குள்ளே போயி சிவராமன் வீடு எதுன்னு கேளு. அங்க போயி, நான் கேட் டேன்னு சொல்லி, இந்த ரூம் சாவியை வாங்கிட்டு வா... என் கண்ணுல்ல."

சற்று பொய்யான சலிப்புடன், மனத்தில் இலேசான குறுகுறுப்புடன் கிளம்பினாள் கிருஷ்ணவேணி. ஒதுக்கி வைக்கப்பட்டிருந்த சாமான்களிலிருந்து கண்ணாடியைத் தேடி எடுத்தாள். முகத்தைத் துடைத்துக் கொண் டாள். தலையை இலேசாக வாரி, சற்றே பவுடரை இரு உள்ளங்கைகளிலும் தேய்த்து இலேசாகப் பூசிக் கொண்டு தாவணியைச் சரிசெய்தாள்.

"அடியே... சும்மா போய்ட்டு வாடி... இதுக்கொரு மேக்கப்பா?"

வெளியேறி நடந்தாள் கிருஷ்ணவேணி. வீட்டையொட்டி மைதானம். அதனை யொட்டி வெண் மணல் பரப்பு. மழைக் காலங்களில் தண்ணீர் கடந்து போகிற ஓடைப் பரப்பு. அதனையொட்டி வீடுகள் துவங்கின.

அந்தப் பையன்களை இப்போது காணோம். போய் விட்டார்கள் போல் தெரிகிறது. 'சரி எவ்வளவு நேரம் ரெஸ் பான்ஸ் இல்லாமல் சும்மா இருப்பார்கள்? நாம் கொஞ்சம் அப்படியும் இப்படியுமாக

---

"எதுக்கு தியேட்டர் ஓனர் தலையில கை வச்சு வருத்தத்தோட உக்காந்துருக்காரு...!?"

"மம்மி ரிடர்ன்ஸ் எதிர்பார்த்த வசூலை அள்ளிக் கொடுக்கலையாம்..!"

"அட பாவமே... 'கம்மி ரிடர்ன்ஸா'..!"

– கே.ஜி.எஸ்.





"உங்களைக் கல்யாணம் பண்ணிக்கிட்டு நான் என்ன சுகத்தைக் கண்டேன்? எதுலயும் ஒத்துப் போகாம ஒரே சண்டை!"

"அடடே! எனக்கும் அதே எண்ணந் தான்! என்ன ஒத்துமை பாத்தியா?"

– ஜெ. கண்ணன்

நடமாடி இருந்தால்... எங்கேயும் அசையாமல் இருந்திருப்பார்கள்.'

புதிய இடம் என்கிற தயக்கம் உள் மனசில் இலேசாக உறுத்த மெதுவாக நடந்தாள் கிருஷ்ணவேணி. இதுவரை பல ஊர்கள் மாறியாகி விட்டது. ஒவ்வொரு ஊருக்கும் புதுசாக வந்திறங்குகையில் மனத்தில் ஒருவித மிரட்சி கவியும். குழந்தையாயிருக்கும் போது அது பெரும் பீதியாக இருந்தது. ஒரு ஊரில் வந்திறங்கி, அந்த ஊரின் இயல்புகளும், முகங்களும், பள்ளித் தோழிகளும் மனத்தில் பதியும் முன்னரே அடுத்த ஊருக்கு மாற்றப்பட்டு விடுகிற அநீதி அவளுக்குத் தொடர்ந்து கொண்டே இருக்கிறது. எந்த மண்ணிலும் வேர் பதியு முன்னரே பிடுங்கி நட்டு, பிடுங்கி நட்டு இளம் பருவம் கழிந்து போனது. சொல்லிக் கொள்கிறார்போல ஒரு தோழியும் அவளுக்கு வாய்க்கவில்லை. பிள்ளைப் பிராயத்தை நினைக்கையிலே ஒட்டுப் போட்ட சேலைதான் அவளுக்கு நினைவுக்கு வருகிறது. வாழ்ந்த ஊர்களின் ஞாபகங்கள் அங்கங்கே துண்டு துண்டாய்.

ஓடையைத் தாண்டி வீடுகளைக் கடந்தாள். சற்றே அகலமான வீதி. பெரும்பாலான வீடுகளில் திண்ணைகள் இருந்தன. கூரை வீட்டிலிருந்து ஓட்டுச் சரிவு இறங்கி திண்ணைக்கு நிழல் தந்து கொண்டிருந்தன.

வீடுகளின் கழிவுநீர் கவலையற்று தெருவில் இறங்கி அங்கங்கே குளங் குளமாய் சௌகரியமான இடங்களில் சற்று நீண்டிருக்கும் சிறு ஓடையாய் இருந்தன. வெயில் அடித்துக் காய்ந்த இடங்களில் கறுப்பேறியிருந்தன. ஒரு வீட்டின் முன்புறக் குழாயிலிருந்து அரப்புக் கலந்த தண்ணீர் பச்சை நிறத்தில் வெளியேறிக் கொண்டிருந்தது.

திண்ணைகளின் ஓய்வாளர்கள் அனைவரது பார்வையும் இவள் மேல் நிலைத்தது. இவள் நகர நகர அவர்களது பார்வையும் கூச்சமின்றி உடன் நகர்ந்தது. இவளுக்கு லஜ்ஜையாக இருந்தது. ஆண் பிள்ளைகள் பார்க்கும்போது ஏற்படும் குறுகுறுப்பும், கிளர்ச்சியுமல்ல அது. வேறுவிதமான கூச்சம். பிடுங்கித் தின்கிற கூச்சம். சற்றுத் தயங்கிய கால்கள் ஒரு திண்ணையை நெருங்க அங்கிருந்த கிழவியிடம் கேட்டாள்.

"இங்க சிவராமன்ங்கறவர் வீடு எது பாட்டி?"

கிழவி இவளையே உற்றுப் பார்த்தாள், "கிட்ட வா."

இவள் கிட்ட போனதும் மிகவும் சகஜமாக இவளது இரு கன்னங்களிலும் பட்டு அழுந்துமாறு முகவாயை ஒரு கையால் பிடித்து இவளது முகத்தையே பார்த்தாள் அந்தக் கிழவி.

"நீ யாரு? பெரிய ராசு பேத்தியா?"

"இல்லை பாட்டி."

"பெறகு யாரு நீ?"

"நான் வெளியூர். சிவராமன் வீடு எதுங்க பாட்டி?"

"ம்.. வெளியூரா... எந்தூரு?"

கிருஷ்ணவேணிக்கு இலேசாக எரிச்சல் வந்தது.

"பக்கத்து டவுனு தாங்க. எங்கம்மா இந்தூரு கிராமாஸ்பத்திரிக்கு வேலைக்கு வந்திருக்கு. சிவராமன் வீட்டுலதான் குடி



"தினமும் என்னை உடற்பயிற்சி செய்ய சொல்றீங்க... ஆனா உடம்பு வளைய மாட்டேங்குதே டாக்டர்!"

"உடம்பை புறம்போக்கு நிலமா நினைச்சுக்கங்க... சுலபமா வளைச்சுடலாம்!"

– தஞ்சை தாமு

"புதுசா ஆரம்பிச்சிருக்கிற பூபதி ஹோட்டல்ல சாப்பிட்டா ஒரு சின்ன பிளேட்டும், ஸ்பூனும் தர்றாங்கடா.."

"அடப்பாவி! டிப்ஸுக்காக கொண்டு வந்து வச்ச பிளேட்டையும் ஸ்பூனையும் தள்ளிக்கிட்டு வந்துட்டியா..?"

– சீர்காழி ரேவதி



யேறி இருக்கோம். அவரு வீடு இங்க எங் கயிருக்கு?"

கிழவி மிகவும் நிதானமாகத் தலை யசைத்தாள்.

"அப்படியா... மூணு வீடு தள்ளி ஒரு எருமை நிக்குதே அந்த வீடுதான். மைக்கலருல சாந்து பூசி இருக்கும்."

கிருஷ்ணவேணி விடுதலை அடைந்த வளைப் போல நடந்தாள். ஊருக்குள் பொது வாகவே ஆள் நடமாட்டம் குறைவாகத் தெரிந்தது. இப்போது மதியம் வேறு. ஒட்டுமொத்த தெருவே ஒரு மௌன ஓவியம்

பெரிய வீடாக இருந்தது. ராட்சஸத் திண் ணைகள் நடுவே சிமெண்ட் தளத்தில் பெயிண்ட் கோலம். சைக்கிள் ஒன்று நின்றிருந்தது. பித்தளைப் பூண் போட்ட பெரிய கதவுகள். ஒரு கதவு திறந்திருந்தது. உள்ளே ஏதோ அரவம் கேட்டது. வராண்டாவில் மொஸைக் போட்டிருந்தது. சிவராமன் வசதியானவர்தான் போலும்.

"ஸார்... அம்மா."

இனிய, இளம் பெண் குரல் கேட்டு கைலியைச் சரிசெய்தபடி பரபரப்பாக வாசலுக்கு வந்தான் சரவணன்.



போல் தென்பட்டது. அங்கொன்றும் இங் கொன்றுமாக ஆட்கள் வீட்டின் முன் னமர்ந்தும், வெற்றிலை போட்டுக் கொண் டும் சோம்பேறித்தனமாக இருந்தனர்.

எருமை மாடு அந்தத் தெருவுக்கே மேஸ்திரி போல் நின்று கொண்டிருந்தது. கிருஷ்ணவேணியை அன்னியப் பார்வை பார்த்தது.

கிருஷ்ணவேணி நாசூக்காக அதனிட மிருந்து விலகி நடந்தாள். குறிப்பிட்ட வீடு

இவனை அவளும், அவளை இவனும் எதிர்பாராததால் பரபரப்பு கூடிப் போனது. இருவருக்கும் நாவறண்டது. அப்படியே ஓரிரு வினாடிகள் நின்றார்கள்.

வாசலில் அந்த எருமை மாடும் அப்படியே நின்றிருந்தது. இவர்களையோ, இவர்களது பரபரப்பையோ சட்டை பண்ணாமல்.

(தொடரும்

# இறக்குமதி வம்பு!

சாஃப்ட்வேர் கனவுகளோடு அமெரிக்கா வந்த இந்திய படிப்பாளிகள் வீடு திரும்பிக் கொண்டிருக்கிறார்கள். இனி அந்தத்துறையில் 'எள்ளு போட்டால் எள்ளு விழ இடமில்லை' என்கிற அளவுக்கு நெரிசலாகிவிட்டது. ஆனால் இப்போது யூ.எஸ்.ஏவில் பள்ளியாசிரியர்களுக்குக் கிராக்கி ஏற்பட்டுள்ளது. அயல்நாடுகளிலிருந்து 'இறக்குமதி' செய்யவும் தயார் என்று அரசு முடிவு செய்து, 'டீச்சர்கள் தேவை' விளம்பரங்களுக்கென ஆறு மில்லியன் டாலர் ஒதுக்கியிருக்கிறது. நியூயார்க் மாநில பப்ளிக் ஸ்கூல்களில் மட்டும் எட்டாயிரம் டீச்சர்கள் தேவையாம்.

இங்கேயும் அம்மாவின் தரிசனத்துக்காக கியூ காத்திருக்கிறது அரசியல் அம்மா அல்ல; ஆன்மிக அம்மா-மாதா அம்ருதானந்தமயி. அம்மாவின் ஆலிங்கனத்தை மிகப் பெரிய ஆசியாகக் கருதுபவர்கள் நூற்றுக்கணக்கில் இருக்கிறார்கள்.

மோனிகா லூவென்ஸ்கி விவகாரத்தை மூடி மறைக்காமல் மனசாட்சிக்கு விரோதமின்றி வாக்குமூலம் வழங்க கிளின்டனைத் தூண்டியவர் கேரி காண்டிட் என்ற பார்லிமென்ட் உறுப்பினர். இப்போது காண்டிட் மாட்டிக் கொண்டு விழிக்கிறார். சந்திரா லெவி என்ற பெண்ணுடன் தமக்கு முறைகேடான உறவு எதுவும் இல்லை என்று முதலில் மறுத்தவர் இப்போது அந்த மறுப்பை மறுக்கும் நிலைக்குத் தள்ளப்பட்டிருக்கிறார்.

கோடீஸ்வரன்/ஸ்வரியின் மூதாதை நிகழ்ச்சியான 'ஹூ வான்டஸ் டு பி எ மில்லியனரி'ல் ஒரு குளறுபடி... ரிச்சர்ட் ரோஸ்னர் என்பவர், நிகழ்ச்சி தயாரிப்பாளர்கள் மீது வழக்குத் தொடர்ந்துள்ளார். பதினாறாயிரம் டாலர்கள் வரை ஜெயித்த இவர், தயாரிப்பாளர்கள் ஒரு கேள்வியைச் சரியாக வடிவமைக்காததால், தாம் மில்லியனராகும் வாய்ப்பை இழந்ததாக வழக்குத் தொடுத்துள்ளார்.

விஸ்கான்ஸின் நகரைச் சேர்ந்த டேவிட் ஓக்லி, இரண்டு திருமணங்கள் மூலம் ஒன்பது குழந்தைகள் பெற்றவர். இவர் குடும்பத்தைக் காப்பாற்ற கஷ்டப்படுவது ஒன்றும் ஆச்சர்யமில்லை. விஸ்கான்ஸின் நீதிமன்றம் இவரை, 'திரும்பவும் குழந்தை பெற்றுக் கொள்ளக்கூடாது; மீறினால் சிறைவாசம்!' என்று எச்சரித்திருப்பதும், எச்சரிக்கையை எதிர்த்து ஓக்லி மேல் முறையீடு செய்திருப்பதும், நிச்சயம் ஆச்சர்யங்கள்!

– நியூஜெர்ஸியிலிருந்து
டி.என். சித்ரா

26.8.2001 கல்கி

# நடக்குமென்பார்; நடக்கும்!

**மேஷம் :** பிள்ளையாருக்கு ஸ்பெஷல் தேங்க்ஸ் சொல்லுங்க. அவரோட அருளாலதான் இந்த வாரம் தூள் கிளப்புது. நல்லவங்க உங்களுக்கு அறிமுகமாவாங்க. குடும்பத்துல சிறுசிறு சலசலப்பு வந்து இம்சிக்கும். கவலைப் படாதீங்க. கலைத் துறையைச் சேர்ந்தவங்களுக்கு நல்ல செய்தி வரப் போகுது. வெளியூர் மற்றும் வெளி நாட்டுல இருந்து நல்ல செய்தி வந்து சேரும். வீண் அலைச்சலைத் தவிர்த்திடறது நல்லது. வயிறு சம்பந்தமான உபாதைகள் வந்து தொந்தரவு செய்யலாம். உஷார்!

**ரிஷபம் :** வீட்ல 'மாங்கல்யம் தந்து நானேனா' சொல்ற வைபவம் நடக்கப் போகுது. எப்போதும் பணம் நிறைஞ் சிருக்கும். அரசியல்வாதிங்க சூட்கேஸ் மாதிரி பணம் நிரம்பும். சிலருக்குத் திடீர் அதிர்ஷ்ட வாய்ப்பு இருக்கு. ஜாலி, பார்ட்டி, விருந்துன்னு ஜமாய்க்கப் போறீங்க. பேச்சுல பணிவு வேணும். ஆராய்ச்சியாளர் களுக்குப் பாராட்டு, புகழ் வரப் போகுது. முன்ன பின்ன தெரியாதவங்ககிட்ட பழகும் போது யோசிச்சுப் பேசுங்க. சாப்பாடு விஷயத்துல வாயைக் கட்டறது நல்லது. எதிலேயும் அவசரம் வேண்டாம்.

**மிதுனம் :** போலீஸ் அதி காரிங்களை மாத்தற விஷயத்துல செயல்பட்ற ஜெயலலிதா மாதிரி நீங்களும் சாமர்த்தியமா செயல் படப் போறீங்க. பேச்சாற்றல் அதிகரிக்கப் போகுது. முக்கிய மானவங்களைத் தொடர்பு கொள்ள போறதால அதுக்கான ஆதாயத்தைப் பெறப் போறீங்க. என்ஜினியரிங், சட்டம், காவல், இராணுவம் போன்ற துறை களைச் சேர்ந்தவங்களுக்குப் புகழ் பாராட்டுக் கிடைக்கும். உடல் ஆரோக்கியத்துலயும் கொஞ்சம் கவனம் வையுங்க. கொடுக்கல் வாங்கல் விஷயத்துல உஷாராவே இருந்துக்கங்க. மாணவர்கள் டீ.வி. சினிமாவை ஓரங்கட்டிட்டுப் படிப்புல கவனம் செலுத்தினா நல்லது.

**கடகம் :** பலத்த பாதுகாப்போட நம்ம சுதந்திர தினத்தைக் கொண்டாடின மாதிரி, எதிர்ப்புகளை ஒரு வழியா ஓரங்கட்டி வாழ்க்கையில முன்னேற்றமடையப் போறீங்க. இரும்பு, எஃகு, கெமிக்கல்ஸ் போன்ற பிஸினஸ் செய்றவங்களுக்கு லாபம் கொட்டும். சுப செலவுகள் அதிகரிக்கும். மத போதகர்கள், பிரசங்கம் செய்பவர்கள்லாம் எச்சரிக்கையோடு பேசினா பிரச்னைகள்ல இருந்து தப்பலாம். பொருளாதார விஷயத் துல உஷாரா இருக்கறது நல்லது. பெண் களுக்கு உற்சாகமான வாரம். புதுசா ட்ரெஸ், நகைகள் வாங்கப் போறீங்க. பயணம் தவிர்ப்பது நல்லது.

**சிம்மம் :** குரு பகவான் ஸ்ட்ராங்கா இருக்கறதால உங்களை அசைக்க முடியாது. பெரியவங்களோட தொடர்பு உங்களுக்கு முழுசா பயன்படப் போகுது. விஞ்ஞானம், ஆராய்ச்சியாளர்களுக்கெல்லாம் புகழ், பாராட்டு கிடைக்கப் போகுது. கொடுக்கல் வாங்கல்ல ஆதாயம் இருக்கு. ஆனால், முன்பின் தெரியாதவங்ககிட்ட ஜாக்கிர தையா நடந்துக்கோங்க. மனசுல இனம்புரி யாத குழப்பம் வந்துட்டே இருக்கும். தாய்க் குலங்களுக்கு இது தங்கமான வாரம். வேண்டிய பொருள்களையெல்லாம் வாங்கு வீங்க. சின்ன பயணம் மேற்கொள்ள நேரலாம். அதனால ஆதாயமும் உண்டு.

**கன்னி :** துணிச்சலும் தன்னம்பிக்கையும் ஜில்லுனு அதிகரிக்கறதால புதுத் தெம்போட இருப்பீங்க. கம்ப்யூட்டர்ஸ், எலக்ட்ரானிக்ஸ் விவகாரங்கள்ல இருக்கிறவங்களுக்கு ஆதாயம், ஆதரவு உண்டு. சட்டம், காவல், இராணுவம் போன்ற துறைகளைச் சேர்ந்த வங்க சாதனை படைப்பாங்க. பயணத்தால நன்மை இருக்கு. உடல் நலத்துல கவனம் வையுங்க. எதிலயும் அலட்சியம் வேண்டாம். செலவுகள் எகிறும். பர்ஸ் பத்திரம்.

**துலாம் :** இதுவரை டென்ஷன் பண்ணிட் டிருந்த பிரச்னைகள் பஞ்சரான டயர் மாதிரி 'புஸ்'னு போயிடும். வழக்கு விவகாரங்கள்ல உங்களுக்குச் சாதகமா திருப்பம் வரும். கலைத் துறையைச் சேர்ந்தவங்களுக்குப்

புகழ், பாராட்டுக் கிடைக்கும். அரசுப் பணியாளர்களுக்குப் புதிய பதவி கிடைக்க வாய்ப்பிருக்கு. வேலை இல்லாம இருந்தவங்களுக்கு அதுக்கான வாய்ப்பு கதவைத் 'டொக்'கப் போகுது. சிலர் வெளிநாடு போக வாய்ப்பிருக்கு. பேச்சுல நிதானம் அவசியம். ஹீட்டான வார்த்தைகளை ஆறப் போடுங்க.

**விருச்சிகம் :** சாரிங்க. முக்கியமான கிரக சஞ்சாரம் எல்லாம் கொஞ்சம் கோபமா இருக்கறதால பொறுமை ரொம்ப ரொம்ப அவசியம். எதிர்ப்புகள் என்னதான் தொந்தரவு செய்தாலும் அதைச் சமாளிப்பீங்க. நண்பர்கள் உறவினர்கள் உதவ முன் வருவாங்க. சட்டம் காவல் இராணுவம் போன்ற துறைகளைச் சேர்ந்தவங்களுக்கு வளர்ச்சி உண்டு. பொருளாதாரம் மேலயும் கீழயும் போயிட்டுப் போயிட்டு வரும். பணம் சம்பந்தப்பட்ட விவகாரங்கள்ல வேலை செய்றவங்க கண்ணுல விளக்கெண்ணெயை விட்டுட்டு இருக்கறது நல்லது. வீண் வம்பு சண்டைகள்ல தலைகாட்ட வேண்டாம். அடக்கி வாசித்தல் அமோக நலம்.

**தனுசு :** வீட்டுல நல்ல விசேஷம் நடக்கப் போகுது. குடும்பத்துல சந்தோஷம் கரை புரளும். உறவினர்கள் உதவ முன்வருவாங்க. பத்திரிகை. எழுத்து பத்திரிகை போன்ற துறைகளைச் சேர்ந்தவங்களுக்கு முன்னேற்றம் இருக்கு. கம்ப்யூட்டர், எலக்ட்ரானிக்ஸ் துறைகளைச் சேர்ந்தவங்களுக்கு ஆதாயம் உண்டு. வெளியூர் பயணத்தைத் தள்ளிப் போடறது நல்லது. அவசரம் அவசரமா எந்த காரியத்திலும் ஈடுபட வேண்டாம். நிதானம் அவசியம். அறிமுகமில்லாதவங்ககிட்ட பேசும்போது எச்சரிக்கையா இருக்கிறது நல்லது. கலைத் துறையைச் சேர்ந்தவங்களுக்குப் பிரச்னைகள் எட்டிப் பார்க்க வாய்ப்பிருக்கு. கேளிக்கைகளைக் குறைச்சுக்கிறது நல்லது.

**மகரம் :** இந்த வாரம் புது நண்பர்கள் கிடைக்கப் போறாங்க. அவங்களால உங்களுக்கு ஆதாயம் வரப் போகுது. ஏற்றுமதி இறக்குமதி பிஸினஸ் பண்றவங்களுக்கு லாபம் கொட்டப் போகுது. சிவப்பு நிறம் இந்த வாரம் உங்களுக்கு நன்மைத் தரப் போகுது. வீடு, நிலம், வாகனம் போன்ற இனங்களால் ஆதாயம். சிலர் புதிய சொத்துக்கள் வாங்க வாய்ப்பிருக்கு. பொருளாதாரம் சொல்லிக் கொள்ளும்படி இல்லை. சிக்கனமா இருக்கறது நல்லது.

**'பார்த்தாலே பரவசம்' படத்தில் சிறப்புத் தோற்றத்தில் நடித்திருக்கும் யுவராணிக்கு (தனுசு ராசி) வீட்டுல விசேஷமாமே!**



யாருக்கும் நீங்க ஜாமீன் கொடுக்க வேண்டாம்.

**கும்பம் :** எடுத்த காரியத்தைத் தலைகீழா நின்னாவது முடிச்சுடுவீங்க. பொறியியல், சட்டம் இராணுவம், காவல் போன்ற துறைகளைச் சேர்ந்தவங்களுக்குக் கொழிக்கப் போகுது. புகழ் பாராட்டுக்குப் பஞ்சமிருக்காது. நண்பர்கள் உறவினர்கள் உங்களுக்குத் தோள் கொடுப்பாங்க. பண நடமாட்டத்துக்குப் பஞ்சமில்லை. தாராளமாப் புரளும். திடீர் அதிர்ஷ்ட வாய்ப்புகள் கூடி வரும். வீண் அலைச்சலைத் தவிர்ப்பது நல்லது.

**மீனம் :** உங்களோட திறமை சாமர்த்தியமெல்லாம் வெளிப்படப் போகுது. கலைத் துறையைச் சேர்ந்தவங்களுக்கு முன்னேற்றம் 'ஜெட்' மாதிரி ஏறப் போகுது. பக்தி மார்க்கம், ஞான மார்க்கம் பக்கம் மனம் தானாக இழுக்கும். புதுசா பொருட்கள் வாங்க வாய்ப்பிருக்கு. புதன் லுக் விடுவதால் வியாபாரிகள் வளர்ச்சி அடைவார்கள். எந்தத் தொழில் செய்தாலும் லாபத்துக்கு வழியிருக்கு. அரசியல்வாதிகளுக்கு மதிப்பு ஜில்லுனு உயரும். இருக்கறதை விட்டுட்டுப் புதிய துறைகள்ல பிரவேசிக்க வேண்டாம். வார பின் பகுதியில 'குட்நியூஸ்' வரப்போகுது. எதிர்பாருங்க.

**வெங்கடேச சுப்ரபாதம், விஷ்ணு சகஸ்ரநாமம் இரண்டையும், குன்னக்குடி வைத்யநாதன், வயலினில் வாசிக்க, டிரீம்ஸ் ஆடியோ நிறுவனம் ஒலிநாடாவாக வெளியிட்டுள்ளது. பொது மக்கள் மத்தியில் இந்த கேஸட்டுக்கு நல்ல வரவேற்பு இருக்கிறது. அதே சமயம், புதுமை என்ற பெயரில் இப்படியெல்லாம் செய்வது சரியா? என்கிற கேள்வியும் எழுந்துள்ளது. சமயச் சொற்பொழிவாளர் நாகை முகுந்தன், குன்னக்குடியை நேரில் சந்தித்து இந்த கேஸட் பற்றி விவாதித்தார்.**

நாகை முகுந்தன் : நீங்கள் அவ்வப்போது பல்விதமான புதிய முயற்சிகளில் இறங்கி யிருக்கிறீர்கள். இப்போது, விஷ்ணு சகஸ்ர நாமத்தையும், சுப்ரபாதத்தையும் வயலினில் வாசித்திருப்பதும் அதுமாதிரியான ஒன்று தானா?

குன்னக்குடி வைத்யநாதன் : என் புது முயற்சிகள் எல்லாவற்றுக்கும் மக்களிடையே அமோக வரவேற்பு கிடைத்தது. அந்த விதத் தில் பார்த்தால், இந்த சுப்ரபாத முயற்சி இருக்கிறதே, அதற்கு விதை முப்பது வருடங்களுக்கு முன்பே விதைக்கப்பட்டுவிட்டது என்றுதான் சொல்ல வேண்டும்.

நாகை : "அட!"

(குன்னக்குடி தம் உதவியாளரை அழைத்து, அந்த அறையிலிருந்த டி.வி.யில், ஒரு கேஸட்டைப் போட்டுக் காட்டினார். குன்னக்குடி இசையமைத்த 'திருமலை தென் குமரி' படத்தில் சீர்காழி கோவிந்தராஜன் பாடிய 'திருப்பதி மலைவாழும் வெங்க டேசா!' பாடல் காட்சி. அதில், பல்லவி முடிந்தவுடன் பின்னணி இசையில், சுப்ர பாதத்தின் சில வரிகள் வயலினில் ஒலித்தன.

குன்னக்குடி : இந்த இடத்தில் எந்த







விதமான மாதிரி பின்னணி இசை யையும் நான் போட்டிருக்கலாம். ஆனால், ஏழுமலையானைப் பற்றிய பாட்டு என்ற காரணத்தால், நான் இருபத்தெட்டு வயலின் வைத்து, சுப்ரபாதவரிகளைச் சேர்த்தேன்.

நாகை : முப்பது வருஷ பழைய விஷயம். இப்போது திடீரென்று முழு நீள கேஸட்டாக உருவெடுத்தது எப்படி?

குன்னக்குடி : டிரீம்ஸ் ஆடியோவில் இருக்கிற முத்துக்குமார் என் நெடுநாளைய நண்பர். அவர் ஹெச்.எம்.வி.யில் இருந்த காலத்தில் பலவித புதுமை களைச் செய்ய எனக்குத் தூண்டுதலாக இருந்திருக்கிறார். அவர் ஒரு நாள்

திடீரென்று, 'சுப்ரபாதத்தை வாசிக்கிறீங்களா?' என்று கேட்டபோது, சில விநாடிகள் சிந்தித்தேன். உடனே 'ஓ.கே.' சொல்லிவிட்டேன். காரணம், பல வருடங்களாக என் மனத்தில் இந்த எண்ணம் இருந்து கொண்டே இருந்ததுதான்.

**நாகை :** விஷ்ணு சகஸ்ர நாமமாகட்டும், சுப்ரபாதமாகட்டும். அவை கீர்த்தனைகளில்லை. ஸ்லோகங்கள். அதை வயலினில் கொண்டு வர முடியுமா என்று துளியும் உங்களுக்குத் தயக்கம் ஏற்படவில்லையா?

**குன்னக்குடி :** பேச்சு உட்பட உலகில் உள்ள அனைத்து சப்தங்களுக்கும் ஸ்வரம் உண்டு என்பது உங்களுக்குத் தெரியுமா? நீங்கள் வாயால் பேசுவதைக்கூட, கையால் இந்த வயலினில் கொண்டு வந்து விட முடியுமே! ஆனால் அந்த ஸ்வரத்தை அடையாளம் கண்டுபிடிப்பது அத்தனை சுலபமில்லை. மந்திரங்கள் இதற்கு விதிவிலக்கு இல்லை.

**நாகை :** மந்திரங்களில் உள்ள ஒவ்வொரு வார்த்தைக்கும் ஒரு வைப்ரேஷன் உண்டு. அந்த தெய்வீக அதிர்வு, மனிதர்கள் மீதும் இந்த பிரபஞ்சத்தின் மீதும் ஒவ்வொருவிதமான தாக்கத்தை ஏற்படுத்துகிறது. இதனால் பலவிதமான செயல்பாடுகள் நிகழ்கின்றன. என் சந்தேகம் என்னவென்றால், வார்த்தைகள் ஏற்படுத்துகிற அதிர்வுகளை, அதன் தாக்கத்தை வயலின் தருமா?

**குன்னக்குடி :** சத்தியமாகக் கொடுக்க முடியும். என் தாத்தா, நூற்று இரண்டு வருடங்கள் வாழ்ந்தவர். சாஸ்திரங்களைக் கரைத்துக் குடித்த பண்டிதர். என் அப்பாவும் அவரைப் போன்றவர்தான். அந்தப் பரம்பரையில் வந்த நூற்றுக்கணக்கான சமஸ்கிருத ஸ்லோகங்களை உச்சாடனம் செய்தவன் நான். ஆக எனக்கு, ஸ்லோகங்களும் தெரியும். அதே அதிர்வுகளை, தாக்கத்தை ஏற்படுத்தக்கூடிய அளவில் ஸ்வரங்களுக்குள் அவற்றை அடக்கவும் தெரியும்.

## குன்னக்குடி வைத்யநாதன்

இன்னொரு விஷயம், என்னுடைய ராக ஆராய்ச்சியின் முடிவாக, ஒவ்வொரு ராகத்துக்கும், ஒவ்வொரு விதமான குணாதிசயம் உண்டு என்று நிரூபித்திருக்கிறேன். ராகத்துக்குரிய குணம், வாய்ப்பாட்டு, வயலின், வீணை, புல்லாங்குழல் என்பதற்கேற்ப மாறுபடாது. ராகத்தின் குணம் போலத்தான் ஸ்லோகம், வேதங்களின் வைப்ரேஷனும்.

**நாகை :** இந்த விளக்கம் கேட்பதற்கு நன்றாக இருந்தாலும் நடைமுறையில் இது சாத்தியமா சார்?

# "நான் ஒரு சூப்பர் மார்க்கெட்!"

**குன்னக்குடி :** எனக்கும் இந்த முயற்சியில் இறங்குவதற்கு முன்னால் உள்ளூர ஒரு பயம் இருக்கவே செய்தது. ஆனால் இந்த ஐடியாவைச் சொன்ன நண்பர் முத்துகுமார், "சார், உங்க திறமை எனக்குத் தெரியும். முயற்சி செய்து பார்க்கலாம். முழு திருப்தி கிடைக்காவிட்டால், விட்டு விடலாம். தயங்காதீர்கள்" என்று உற்சாகம் கொடுத்தார். சுப்ரபாதம், சகஸ்ர நாமம் இரண்டுமாய்ச் சேர்த்து மொத்தமே



''கின்னசுக்கு ட்ரை
பண்ணலாமா?''
''என்ன விஷயம் தலைவரே?''
''பத்தாயிரம் பக்கங்கள்ல
எனக்கு குற்றப் பத்திரிகை
வந்துருக்கு!''
– அம்பை தேவா

''நம்ம கேடி கபாலிக்கு
திமிர் ரொம்ப ஏறிடிச்சு சார்!''
''எப்படி?''
''அவன் மேல இருக்கற பிக்பாக்கெட்
வழக்கு, கொள்ளை, கொலை கேஸ்
எல்லாத்துக்கும் சேர்த்து தனி
நீதிமன்றம் அமைக்கணுமாம்!''
– வந்தவாசி பா. ஜெயக்குமார்



கல்கி 26.8.2001

ஐம்பது நிமிடம்தான் கேஸட். ஆனால் நான், காலை ஒன்பது மணிக்கு ஆரம்பித்தால், இரவு ஒன்பது மணிவரை பிராக்டீஸ் பண்ணினேன். இப்படி ஓரிரு நாளில்லை, தொடர்ந்து ஆறு நாட்கள் பிராக்டீஸ் பண்ணி, எனக்கு பரிபூரணமான திருப்தி ஏற்பட்ட பின்னர்தான் ஒலிப்பதிவு நடந்தது. சினிமா பாட்டு டியூனை இசை நொட்டேஷன்களாக எழுதி வைத்துக் கொண்டு, அதைப்பார்த்து வாசித்துவிட்டுப் போவது போன்றதல்ல இது. ஆழ்ந்த சிரத்தையுடன் பண்ண வேண்டிய தவம்; யாகம். அதைத் தான் நான் செய்திருக்கிறேன் என்பதை பணிவோடு இங்கே தெரிவித்துக் கொள் கிறேன்.

**நாகை :** காஞ்சி மகா சுவாமிகளின் இசை ஞானம் அபாரமானது. அவர் வேத சாஸ்திரங்களில் கரை கண்டவர். அவர் முன்னால், நீங்கள் ஸ்லோகங்கள் ஏதாவது வாசித்துக் காட்டியிருக்கிறீர்களா? அதற்கு அவரது ரியாக்ஷன் என்ன?

**குன்னக்குடி :** பேஷாகக் கேட்டீர்கள். பதினெட்டு வருஷங்களுக்கு முன்னால், மடத்துக்கு நான் போயிருந்த சமயம் மூன்று சங்கராச்சாரியார்களும் அமர்ந்திருந்தார்கள். நான் வயலினில், பூர்ண கும்ப மந்திரத்தையும், அதைத் தொடர்ந்து சாந்தி பஞ்சகத்தையும் வாசித்துக் காட்டினேன். மகா பெரியவர் முகத்தில் என்ன ஒரு புன்னகை! அடுத்த கணம், சால்வை போர்த்தி, என்னை ஸ்ரீ மடத்தின் ஆஸ்தான வித்வானாக்கி அருளாசி வழங்கினார்கள். அதன்பின், அவர்களைச் சந்தித்த ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் பூர்ணகும்ப மந்திரத்தையும், சாந்தி பஞ்சகத்தையும் நான் வாசித்துக் காட்டத் தவறினதே இல்லை. மகா சுவாமிகளிடம் வாசிப்பது என்ன சாமானியமான விஷயமா? ஒரு சின்னஞ்சிறு பிசகு என்றாலும் கூட, சட்டென்று அடையாளம் கண்டு கரெக்ஷன் சொல்லி விடுவாரே!

இன்னொரு அபூர்வ அனுபவத்தையும் நான் இங்கே சொல்லுவது பொருத்தமாக இருக்கும். ஒருமுறை சிருங்கேரி பெரியவரைத் தரிசிக்க நானும், என் மனைவியும் சென்றிருந்தோம். பெரியவர் லிங்க பூஜை செய்து கொண்டிருந்தார். சட்டென்று என்னைக் கூப்பிட்டு, 'ருத்ரம் வாசி' என்றார். நான்

உடனே வயலினை எடுத்து ருத்ரம் வாசித்து, அவருடைய ஆசியைப் பெற்றேன்.

**நாகை :** நமது புராணங்களில் சரஸ்வதி தேவி, வீணையில் சாமவேதத்தை வாசித்ததாக இருக்கிறது. ராமாயணத்தில் ராவணேஸ்வரன், வீணையில் வேதத்தை வாசித்து, ஈஸ்வரனிடமே பாராட்டு பெற்றதாக இருக்கிறது. நம் வித்வான்கள் யாராவது இதற்குமுன் இந்த முயற்சியில் இறங்கியிருக்கிறார்களா?

**குன்னக்குடி :** ஓ! நிறைய பேர் வீணையில், வேதங்களை, மந்திரங்களை, வாசித்திருக்கிறார்கள். முந்தைய தலைமுறை வித்வான்களைப் பட்டியலே போடலாம். நம் தலைமுறையை எடுத்துக் கொண்டால், வீணை சிட்டி பாபுகூட செய்திருக்கிறார்.

**நாகை :** உங்களுடைய இந்தப் புதிய முயற்சியை மிக ஈடுபாட்டுடன், பக்தி சிரத்தையுடன் செய்திருக்கிறீர்கள், மக்கள் மத்தியில் இதற்கு நல்ல வரவேற்பு இருக்கிறது என்பதெல்லாம் சரி. ஆனாலும் ஒரு சிலர், குன்னக்குடிக்கு, சினிமா பாட்டும், கர்நாடக இசையும், ஒரே தராசுதான். இப்போது விஷ்ணு சகஸ்ர நாமத்தையும், சுப்ர பாதத்தையும் சினிமாப் பாட்டு லெவலுக்கு ஆக்கிவிட்டார் என்று குற்றம் சாட்டலாமில்லையா?

**குன்னக்குடி :** சினிமாப்பாட்டு வாசிப்பது என்பது அத்தனை சுலபம் என்று நினைக்கிறீர்களா? எங்கே, இன்னிக்கு இருக்கிற கிளாசிகல் வித்வான்களை சினிமாப் பாட்டு வாசிக்கச் சொல்லுங்கள் பார்க்கலாம். என்னால், முழுக்க முழுக்க கிளாசிகல் கர்நாடக இசைக் கச்சேரியும் தர முடியும். கோவில் திருவிழாவில், பக்திப் பாடல்களையும் தர முடியும். பாமர மக்களுக்கு மத்தியில் சினிமா பாட்டுகளையும் வாசிக்க முடியும். தேவைக்கு ஏற்ப சப்ளை செய்கிற சூப்பர் மார்க்கெட் நான். ஒன்றோடு ஒன்றைப் போட்டுக் குழப்பிக் கொண்டு, என்னை ஏன் குற்றம் சொல்ல வேண்டும்?

தொகுப்பு : **எஸ். சந்திரமௌலி**
படங்கள் : **யோகா**



**"மனைவி மண்டையை உடைச்சவனுக்கு தீர்ப்பு சொல்றப்போ ஜட்ஜ்க்கு வீட்டு நினைப்பு வந்துட்டுது போலிருக்கு!"**
**"ஏன் அப்படிச் சொல்றே?"**
**"உன்னுடைய தீரச் செயலைப் பாராட்டி பத்து வருஷம் ஜெயில் தண்டனை விதிக்கிறேன்னு சொல்லிட்டாரே!"**

**— ம ஜோசப் காமராஜ்**

"ஏண்டா! மாடு மாதிரி வளர்ந்திருக்கே ஒரு குடம் தண்ணீர் லாரியில் பிடிக்க முடியலை..."
"என்ன பண்றது, நானும் முட்டி மோதித்தான் பார்த்தேன், முடியலயே அம்மா?"



26.8.2001 கல்கி

பிரெஞ்சு நாட்டில் எரிக் ஸேட்டி என்ற இசை மேதை இருந்தார். தப்பும் தவறுமாகப் பியானோ வாசித்த ஒருவர், இவரிடம் 'உங்கள் பாட்டை எப்படி இசைக்க வேண்டும்?' என்று கேட்டார். 'Play it with both hands in your pocket' என்றார் ஸேட்டி எரிச்சலுடன்.

அது போல 'இந்தப் பாட்டை எப்படிப் பாட வேண்டும்?' என்று சில பின்னணிப் பாடகர் கேட்கும்போது, 'வாயை மூடிக் கொண்டு!' என்று சொன்னால் நன்றாயிருக்கும். ஆனால் எந்த இசையமைப்பாளரும் சொல்வதில்லை. எனவே, மொழிக்குக் குழி வெட்டி, சொற்களுக்குச் சமாதி கட்டும் இன்றைய சூழ்நிலையில், வார்த்தைக்கு முக்கியத்துவம் கொடுக்காமல் பாடுவதை எஸ்.பி. பாலசுப்பிரமணியம் அழுத்தம் திருத்தமாகக் கண்டித்ததைக் கேட்கச் சந்தோஷமாயிருந்தது. (ஸன்.)

"சுசீலா, ஜானகி, பானுமதி, நான் எல்லோருமே வேற்று மொழிக்காரர்கள். ஆனால் பாட்டின் பாவம் நன்கு வெளிப்பட வேண்டும் என்பதற்காகத் தமிழைச் சுத்தமாகக் கற்று, வார்த்தைகளை ரசித்து உச்சரித்துப் பாடினோம்" என்றவர், வேடிக்கையான, ஆனால் வேதனையான ஓர் அனுபவத்தைச் சொன்னார்.

"ஒரு பாட்டுக்கு இசையமைப்பு நடந்துகொண்டிருந்தது. நான் பாடிக்கொண்டிருந்தேன். இசையமைப்பாளர் என்னிடம் வந்து ரகசியமாக, 'வார்த்தை புரியாத மாதிரி பாடுங்கள்'என்றார். 'திகைத்துப் போய் ஏன் என்று கேட்டேன்.' 'ஏன்னா, அதுதான் இப்ப பாஷன்' என்றார்" என்று கூறினார் எஸ்.பி.பி.

ஆழ்வத்தா, சீர்ப்ப பாத்தா?

# புரியாமல்

ஐந்து நிமிடமோ, பத்து நிமிடமோதான் வருகிறது அந்தத் துண்டுப் படமான 'ரியல் சல்யூட்'. அலை இல்லாத நடுக்கடல் போல, பேச்சு இல்லாத மௌன நாடகம். இளையராஜாவின் பாட்டு மட்டும் பின்னணியில். சுதந்தர தினத்தன்று பல சேனல்களில் இது காட்டப்பட்டது.

கந்தலும் கிழிசலுமாகப் புடைவை கட்டியுள்ள ஏழையொருத்தி, குப்பைத் தொட்டியில் பொறுக்கும்போது ஒரு தேசியக் கொடியைக் காண்கிறாள்.



வெளியே எடுக்கிறாள். நைந்து போன கொடி. கடைக்குப் போய், சுருக்குப் பையி லிருந்து சில்லறை எடுத்துக் கொடுத்து நூலும் ஊசியும் வாங்குகிறாள். ஒரு மரத் தடியில் உட்கார்ந்து கொடியின் கிழிசலைத் தைக்கிறாள். பிறகும் ஒரு ஓட்டை இருப்பது தெரிகிறது. தன் புடைவையிலிருந்து ஒரு துண்டு கிழிந்து அதற்கு ஒட்டுப் போடுகிறாள். முகத்தில் துளியும் சலனம் காட்டாமல் நடித் திருக்கிறார் கிரண்பேடி.

படத்தைப் பாராட்டிப் பேசிய பலரில் சிலர், 'தேசியக் கொடி இப்படிக் குப்பைத் தொட்டியில் கிடப்பதுபோல் காட்ட லாமா?' என்று ஆட்சேபம் தெரிவித்தார் கள்.





யானவை. குன்னக்குடியின் 'தோடி'யில் கதாநாயக னாக நடித்தது தெரிந்த விஷயம்தான். ஆனால் ஆர்.எஸ். மனோகரின் 'நரகாசுரன்' டி.வி தொடரில் மகா விஷ்ணுவாக அவ தரித்ததும், கிருபா னந்த வாரியாருக்குப் பக்க வாத்தியமாக ஆர்மோனியம் வாசித்ததும் புதிய செய்திகள்.

பற்பல வருடங்களுக்கு முன் கே.ஏ. அப்பாஸ் இதேபோல

# இருந்தால்தான் பாட்டு!

ஒரு சிறுகதை எழுதினார். (அல்லது முல்க்ராஜ் ஆனந்தோ?) குடியரசு தினத்தன்று, குளிரில் நடுங்கிக்கொண்டு, சாலை யோரத்தில் அரை நிர்வாணமாகக் கிடக்கிறான் ஓர் அனாதை. அதைக் கண்ட ஒருவர் மனம் பொறுக்காமல் அருகே ஏற்றப்பட்டிருந்த ஒரு தேசியக் கொடியை எடுத்து அவன் மீது போர்த்திவிட்டுப் போகிறார். இந்தக் கதையும் அப்போது பலத்த சர்ச்சைக்குள்ளானது.

புகை கிளம்பினால் நெருப்பு இருக்கிறது என்று அர்த்தம். சர்ச்சை கிளம்பினால் சத்தியம் இருக்கிறது என்று அர்த்தம். 'Face the problem head on' என்று யார் சொல்வது?

டி.என். சேஷகோபாலனின் நிகழ்ச்சிக்கு '7 in 1' என்று ஏன் தலைப்புக் கொடுத்தார்கள் என்பது புரிய வில்லை. (பொதிகை) ஏழு வகை வாத்தியங்களை வாசிக்கும் திறமை அவருக்கு உண்டு எனக் காட்டப் போகிறார்கள் என முதலில் தோன்றியது. அதற்கேற்றாற்போல் ஆரம் பத்தில் ஆர்மோனியம் வாசித்தார். பிறகு வீணை மீட்டி னார். அவருடைய சாரீரத்தில் கொட்டும் பிருகாக்களும் ரவைகளும் இவற்றிலும் கொட்டின' அடுத்து புல்லாங் குழலா, வயலினா என்ற சஸ்பென்ஸை ஏற்படுத்திவிட்டு, வாய்ப்பாட்டில் இறங்கி, ரசிகர்களுக்கும் சபாக்காரர்களும் நன்றி கூறி முடித்துவிட்டார். இருப்பினும், கேட்ட வரை யில், they had a haunting grip on the listener (ஒருவேளை மேலும் சில பகுதிகள் வேறு நாளில் வந்திருக்குமோ?)

இடையிடையே சொன்ன அனுபவங்கள் சுவை

எம்.டிவியின் 'சிட்டோ சாட்' தகவலும் தருவ துண்டு. தலையிலும் தட்டு வதுண்டு. 'You can't do things differently until you see things differently' என்பது சிட்டோ வின் கொள்கை.

நடிகை ட்விங்கிள் ஆடிப் பாடும் ஒரு இந்திப் படக்காட்சி வந்தபோது, வேறொரு நடிகையிட மிருந்து அவர் அந்தச் சான்ஸை வெற்றிகரமாகப் பறித்து விட்டாரென்று சொல்லி, அதனால்தான் அவர் கண்களில் ஒரு twinkle தெரிகிறது என்றும் சிட்டோ சொல்லிற்று. தொடர்ந்து –

"யாராவது ஒருவர் காணாமல் போவதும் அதை ஒருவர் தேடுவதும் மன்மோ கன் தேசாய் படங்களில் வாடிக்கையான பார்முலா. இதிலும் அப்படித்தான். படத்தில் அறிவுக்குப் பொருத்தமான அம்சம் காணாமல் போகிறது. அப் படி ஏதாவது இருக்கிறதா என்று ஆடியன்ஸ் தேடு கிறார்கள்."

**வினோத்**

# தேசத்துக்காக ஒலிக்கும் குரல்!

வந்தே மாதரம் அன்ட் ஹாப்பி விநாயக சதுர்த்தி! வந்தே மாதரம் போன வாரமே சொல்லியிருக்க வேண்டியது. பட் அஸ் யூஷுவல் ஓரங்கட்டிட்டாங்க என்னை... பரவாயில்லை; அட்வான்ஸ் சுதந்தர தினம் கொண்டாடின ஓர் அமைப்பை வாழ்த்தி சந்தோஷப்பட்டுக்கறேன்.

டெல்லியைச் சேர்ந்த ஸ்வராலயா அமைப்பு சென்னைக்கு வந்து ஒரு தேச பக்த கலைஞரைக் கௌரவிச்சு ஒன்லாக் பணமும் சுவராலயா புரஸ்காரம்ன்ற விருதும் கொடுத்தது. கலாக்ஷேத்ரா ஆடிடோரியம்ல (ஆடிடோரியம் பார்க்கவே தனியா ஒரு நடை போய்ட்டு வரலாம். அவ்ளோ ஆர்டிஸ்டிக்!) ஆகஸ்ட் 14 அன்னைக்கு அமைதியான நிகழ்ச்சி.



• குவிஸ் நடத்தி, குல்லாய் மாட்டி...! (படம்: வெங்கடேஷ்)

மறுநாள், அதான் சுதந்தர தினம், டீ.வியை ஆன் பண்ணினா முந்தைய தினத்து விழாவோட எக்ஸ்டென்ஷன் போல காலையிலேயே டி.கே.பியோட குரல்ல பாரதியார் ஸாங்ஸ்– 'நாம் இருவர்'லேருந்து... நைட் 'ஹே ராம்' சன் டீவியில முடியற நேரம் அதே பட்டம்மாள் குரல்ல வைஷ்ணவ ஜனதோ... ஐம்பத்தஞ்சு வருஷமா தேசத்துக்காக ஒலிக்கற குரல்! கேட்கவே ரொம்ப த்ரில்லிங்கா இருந்தது. விருது வழங்கற விழாவில் பேசின டி.என். சேஷன், 'பட்டம்மாளைக் கௌரவிப்பதன் மூலம் சுவராலயம் தன்னைத்தானே கௌரவித்துக் கொள்கிறது'ன்னு சொன்னார்.

ஐ திங்க் இட் இஸ் எ லாட் மோர் தன் தட். இந்த விருது சம்பிரதாய சங்கீதத்துக்குக் கிடைச்ச விருது. அதைக் கட்டிக் காத்து அப்படியே அடுத்த தலைமுறைக்கு வழங்கியிருக்கற ஒரு கிரேட் டீச்சருக்குக் கிடைச்ச விருது; அப்படிக் காப்பாத்திக் கொடுக்கறது தன்னோட முக்கியமான பொறுப்புன்னு நினைக்கிற ஒரு மெய்யான, உயர்ந்த இந்தியப் பிரஜைக்குக் கிடைச்ச விருது...!

இதை அண்டர்லைன் பண்ற மாதிரி ஆகஸ்ட் 15 அன்னைக்கு ஒரு நிகழ்ச்சி... டி.கே. பட்டம்மாள்– டி.கே. ஜெயராமன் ஸ்கூல் புராடக்ட்டான மியூசிஷியன் விஜய் சிவா, தேச பக்திப் பாடல்களை விளக்கி குழந்தைகளுக்காக ஒரு மணி நேரம் பேசி, பாடி, பாட வைச்சு, குவிஸ் நடத்தி, கதர் குல்லாய் மாட்டிவிட்டுப் பரிசு கொடுத்தார்!

'சுதந்தரம்னா என்ன? தேச பக்திப் பாடல்கள் ஏன் பாடணும்? பல பாட்டுகளுக்கு என்ன அர்த்தம்'னு குழந்தைகளோட உரையாடி அவர் நடத்தின இந்த நிகழ்ச்சிக்கு ஏற்பாடு செஞ்சது 'குட் புக்ஸ்'ன்ற புத்தகக் கடை!

குழந்தைகள் நலன் பத்தியும் தேச நலன்

பத்தியும் பொறுப்போட சிந்திக்கறதுக்கு இன்னும் நிறைய பேர் இருக்காங்கன்றதைப் பார்க்க ஹாப்பியா இருந்தது.

நிகழ்ச்சிக்கு வந்த குழந்தைகளோட பங்கேற்பையும் புத்திசாலித்தனத்தையும் பார்க்க அதைவிட சந்தோஷமாயிருந்தது. ஜனகணமன, ஐந்தாம் ஜார்ஜ் மன்னரைப் பத்தி தாகூர் எழுதிய கவிதை; சாரே ஜஹான்ஸே அச்சாவுக்கு இசையமைச்சது பண்டிட் ரவிசங்கர்; சுத்தானந்த பாரதியார் இந்தியாவுக்குச் சுதந்தரம் கிடைக்கணும்னு இருபது வருஷம் மௌன விரதமிருந்தார்... இப்படிப் பல விஷயங்களைப் பொருத்தமான படங்கள் காண்பிச்சு விஜய் சிவா



• டி.கே.பி.



• நைப்பால்

விளக்கினார். 'இருபது வருஷ மௌனமா?'ன்னு அத்தனை குழந்தைகளும் கண்ணை உருட்டி ஆச்சர்யப்பட்டதைப் பார்க்க சுத்தானந்த பாரதி இல்லையேன்னு நினைச்சுக்கிட்டேன்!

இந்தியர்களுக்கு – முக்கியமா இந்திய எழுத்தாளர்களுக்குத் தங்களோட சரித்திரத்தைப் பத்தின உணர்வே இல்லைன்னு ஒரே போடா போடறார் அக்கரைச் சீமையிலே உட்கார்ந்துக்கிட்டு ஆங்கிலத்தில் எழுதற இந்திய எழுத்தாளரான வி.எஸ். நைப்பால். ஆர்.கே. நாராயண் உள்பட எந்த இந்திய ரைட்டருக்கும் அது இல்லையாம். ஏதோ படிக்கறவங்க மேலுக்கு நோகாம, யோசிக்காம சிரிச்சு மகிழ்ந்துட்டுப் போகணும்னு தான் அத்தனை பேரும் எழுதறாங்களாம். பல முக்கியமான சரித்திர நிகழ்வுகளும் அதன் காரணமா ஏற்பட்டிருக்கற சமுதாய மாற்றங்களும் பிராப்ளம்ஸும் எழுத்துல பிரதிபலிக்கப்படறதேயில்லையாம். ரொம்ப ஓபனா அட்டாக் பண்ணி பிரிட்டிஷ் நியூஸ் பேப்பர்ல பேட்டி கொடுத்திருக்கார். இந்திய எழுத்தாளர்கள் யாரும் இதுக்கு இன்னும் ரியாக்ட் பண்ணியதாகத் தெரியலை!

நைப்பால் இஸ் ராங்ன்றது நல்ல இந்திய இலக்கியம் படிக்கறவங்களுக்குத் தெரியும். ஆனா அது நைப்பால் மாதிரி ஆட்களுக்குத் தெரியணும்னா இங்கிலீஷ்ல டிரான்ஸ்லேட் ஆகிப் போனால்தான் உண்டு. மொழி பெயர்ப்புக்கு இருக்கற முக்கியத்துவம் என்னன்றதுக்கு இந்தச் சம்பவம் இன்னொரு எக்ஸாம்பிள்!

முக்கியமான ஒரு சமுதாயப் பிரச்னையை எதிர்த்து தேசிய மனித உரிமை கமிஷன்ல ஜே.என்.அய்யர் மனு போட்டிருக்கார்னு பல மாசங்கள் முன்னாடி சூப்பர்மார்க்கெட்ல செய்தி வந்தது. இப்போ அய்யர் திரும்பவும் ஈமெயில் அனுப்பியிருக்கார்.

அடைப்புகளை நீக்கறதுக்காக சுவரேஜ் போர்ட் ஊழியர்களே சாக்கடைக்குள் இறங்கறாங்கங்கறதை எதிர்த்துக் குரல் கொடுத்தவர் அய்யர். இப்போ அவருக்கு ஆதரவா 'மனுஷி' இதழோட ஆசிரியர் மது கிஷ்வர், தேசிய மனித உரிமை கமிஷனைச் சேர்ந்த நீதிபதி ராமசாமியைப் பார்த்துப் பேசியிருக்காங்க. அவரும் இந்த மனு பேர்ல கமிஷன் ஆக்ஷன் எடுக்க ஆரம்பிச்சிருக்கறதாத் தெரிவிச்சிருக்கார்.



சுமி சூப்பர் மார்க்கெட்

இதுக்கிடையிலே சென்னை மெட்ரோ வாட்டர் அன்ட் சுவரேஜ் போர்ட் அய்யருக்குப் பதில் அனுப்பியிருக்கு– இப்போதெல்லாம் அடைப்பு நீக்க அசுர இயந்திரங்கள் மட்டும் தான் பயன்படுத்தறதாக!'

நிஜம்தானா?....

— சுமி

# 26 குறையொன்றுமில்லை

முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்

**வி**ஷ்ணுவைப்பற்றி எடுத்துச் சொல்லும்படியான எல்லா ஆசார்யர்களுமே ஒன்றுபோல் கூறுகிறார்கள்.

ஆதிசங்கர பகவத்பாதாளுடைய ஸஹஸ்ர நாம பாஷ்யத்திலே ஆரம்பத்தில் நாம் பார்த்தோமானால், ஒரே பிரமாண வசனங்களாக இருக்கும். விஷ்ணு தர்மம், விஷ்ணு தத்வம், விஷ்ணு வாக்யம் என்று எத்தனை உபநிஷத் வாக்கியங்களை எடுத்துக் காட்டுகிறார் அவர்! இத்தனை பிரமாணங்களை வைத்துக் கொண்டு ஏகப்பட்ட பிரமாண சுலோகங்கள் புனைகிறார்.

அதே மாதிரி பராசர பட்டர்! அவரும் பலவிதமான ஸ்தோத்திரங்களை ஸ்ம்ருத்களிலிருந்தும் எங்கெங்கோவிருந்தும் எடுத்துக் காட்டி, அவன் தன்மையை விளக்குகிறார்.

விஷ்ணு தர்மம் என்பதிலே ஒரு அழகான சுலோகம் வருகிறது. நாராயணேதி யஸ்யாஸ்யே வர்ததே நாம மங்களம் - ஆஸ்யம் என்றால் வாய் என்று அர்த்தம்.

மஹாஸ்ய: என்று நரசிம்ஹனுக்குப் பெயர். 'அலைத்த பேழ் வாய்' - திருமங்கையாழ்வார் சொல்கிறார்.

பில வாய் அவனுடையது! திறந்தான் என்றால் குகை போல் பெரிதாக இருக்கும். மங்களகிரி என்ற க்ஷேத்திரத்திலே போய்ப் பார்த்தோமானால், பானகத்தை அப்படி இன்றைக்கும் சாப்பிடுகிறான் அவன்! எவ்வளவு பானகம் கொண்டு போனாலும் பாதியை நமக்குக் கொடுத்து விடுகிறான். சின்ன பாத்திரத்தைக் கொண்டு போனாலும் பாதியை சுவீகரிக்கிறான். பெரிய அண்டாவிலே கரைத்தாலும் பாதியை எடுத்துக் கொள்கிறான். அப்படியே களகளவென்று உள்ளே போகிறது அந்த பானகம்! அந்த எம்பெருமான் விழுங்குகிற ஓசையும் நமக்குக் கேட்கிறது. பாத்திரத்தில் உள்ளது சரிபாதி ஆனவுடனே வெளியிலே வழிய ஆரம்பித்துவிடும்; உள்ளே போகாது!

அவ்விடத்திலே கீழேயெல்லாம் பானகச் சகதியாய் இருக்கும். வெல்லத்தை உடைத்துப் பானகம் தயார் பண்ணுகிறார்கள் அங்கே. ஆனால் ஒரு ஈ, எறும்பு பார்க்க முடியாது. பகவானுக்கு நிவேதனம் ஆன பிற்பாடு பார்த்தால் அதிலே ஈயும் எறும்பும் மொய்க்கும்.

சின்ன எறும்புக் கூட்டங்களுக்கெல்லாம்கூட தெரிகிறது - நிவேதனம் ஆன வஸ்து; நிவேதனம் ஆகாத வஸ்து என்று... திரும்பிப் பார்க்காது. பிரசாதத்தையெல்லாம் மூடி எடுத்துக் கொண்டு வந்து பகவத் சன்னதியிலே வைக்கிற காரணம் என்னவென்றால், நாம் அதை அதிகமாகப் பார்க்கக்கூடாது கண்ணாலே! 'இவ்வளவு முந்திரி பருப்பு இருக்கிறதே! திராக்ஷை இருக்கிறதே!' என்று நினைத்தாலே திருஷ்டி தோஷம் ஏற்பட்டுவிடும்.

அங்கே, மங்களகிரியிலே, எம்பெருமானுக்கு நிவேதனம் பண்ண வேண்டும் என்பது ஈ, எறும்புக்குக்கூட தெரிகிறது பாருங்கள்.

சரி, அந்தப்பானகம் - பெரிய அகன்ற வாயினுள் நாம் விடுகிற பானகம் எங்கே போகிறது...?

வெளிநாட்டவர்கள் நம் நாட்டைப் பரிபாலனம் பண்ணிய பொழுது, அங்கேயிருந்த ஒரு கலெக்டர், மலை மொத்தத்தையும் குடையச் சொன்னார் - மங்களகிரி மொத்தத்தையும் குடைந்த பின்னரும் பானகம் எங்கே போகிறது என்று கண்டுபிடிக்க முடியவில்லை! 'அது எம்பெருமானுடைய வைபவம்' என்று எழுதி வைத்துவிட்டுப் போய் விட்டார்! இப்போதும் அந்த ஆதாரம் - எழுதி வைத்தது - இருக்கிறது அந்தக் கோயிலிலே!

பீம பீம பராக்கிரம: என்று அந்த மங்களகிரியில் இருக்கும் எம்பெருமான் பெருமையைச் சொல்வதுண்டு.

பீம பீம என்று ஏன் வந்தது...?

விஜயவாடாவில் இந்திர

கைலாத்ரி என்று ஒரு மலை உண்டு. அர்ஜுனன் தபஸ் செய்த இடம் அது. அர்ஜுனன் பாசுபதாஸ்திரத்துக்காக ஈசுவரனை நோக்கித் தபஸ் பண்ணினான். அதனால் தான் அந்த ஊருக்கு 'விஜய' சப்தம் இருக்கிறது. விஜயவாடா என்று பெயர் இருக்கிறது பாருங்கள்! அந்தப் பெயர் அர்ஜுனனால் ஏற்பட்டது.

அடியேனுடைய தாயார் வேடிக்கையாகச் சொல்லுவார்..

தர்மபுத்திரர் கீழே இருந்தாராம். மேலே தபஸ் பண்ணிக் கொண்டிருந்தானாம் அர்ஜுனன்.

''விஜயா, வாடா!'' என்று கூப்பிட்டாராம்! அதனால்தான் அந்த ஊருக்கு விஜயவாடா என்று பெயர் வந்ததாம்!

தாயாரை அடியேன் கேட்பேன்; தர்மபுத்திரர் தமிழிலே பேசினாரா என்று! ஏனென்றால் ஆந்திர தேசமாயிற்றே விஜயவாடா! தமிழில் பேசியிருக்க முடியுமா என்று கேட்பேன்!

சமத்காரமாகச் சொல்கிற வார்த்தை இதெல்லாம்!

எப்படியும், ஈஸ்வரனைக் குறித்து அர்ஜுனன் தபஸ் பண்ணின இடம் விஜயவாடா.

பீமஸேனன் தபஸ் பண்ணின இடம் மங்களகிரி க்ஷேத்திரம். அவன் நரசிம்ஹனை ஆராதித்தான்.

அந்த யக்ஞத்துக்கே காரணமான எம்பெருமான், அப்பேர்ப்பட்ட திவ்ய தேசத்திலே இருப்பவன்...

அஹோபில க்ஷேத்திரத்திலே பார்த்தாலும் 'அலைத்த பேழ்வாய்' என்று திருமங்கையாழ்வார் ரொம்ப அழகாக மங்களாசாஸனம் பண்ணியிருக்கிறார் : அலைத்த பேழ்வாய் வாள் எயிற்று ஓர் கோளரி ஆய்



தேவதைகளெல்லாம் அந்த நரசிம்ஹனுடைய பலத்தைப் பார்த்து 'அஹோ' என்றார்களாம். ஆஸ்சர்யமான பலம் அவனுடையது! அஹோ! ஆஸ்சர்யமான குகை அவன் இருக்கக்கூடியது!

அங்கிருக்கும்படியான எம்பெருமானின் பராக்கிரமம் எப்படிப்பட்டது என்று கேட்டால், அதை வர்ணிக்கவே முடியாது என்கிறார்கள் தேவதைகளெல்லாமே!

அப்படிப்பட்ட க்ஷேத்திரத்தில் சாமானியனால் போக முடியுமா..!

அப்படிப்பட்ட க்ஷேத்திரத்தில் இருக்கும்படியான நரசிம்ஹனை - அலைத்த பேழ்வாய் படைத்தவனை, திருமங்கையாழ்வார் போய்ப் பார்க்கிறபோது, யானைகளையெல்லாம் அடித்துத் தின்றுவிட்டு சிம்ஹங்கள் அந்த எம்பெருமானின் திருவடியிலே ஒவ்வொரு தந்தமாக எடுத்து, 'ஓம் விச்வச்யை நம' என்று அர்ச்சனை பண்ணுகிறதாம்!

அப்படியொரு காட்சியை அவர் கண்டு, சாமானிய பிராணிகள் எல்லாம் அர்ச்சனை பண்ணுகிறதே நாம் பண்ண வேண்டாமா? என்று நமக்குக் காட்டித் தருகிறார்.

அப்படிப்பட்ட அலைத்த பேழ்வாய் படைத்தவன் நரசிம்ஹன். ஆஸ்யம் என்றால்

## அருள்வாக்கு!



ஒவ்வொரு ஆசையும் ஒவ்வொரு ஸமயத்தில் அலுத்துப் போகிறது. ஆனாலும் எந்த ஆசையுமே ஒரு வழியாக அற்றுப் போயும் விடாமல் கொஞ்ச நேரத்துக்கு அப்புறம் 'விட்டேனா பார்' என்று மறுபடி படையெடுக்கிறது. ஆசையைப் பூர்த்தி பண்ணும் வஸ்துவின் அநுபோகம் ஜீவனுக்குத் திரும்பத் திரும்ப வேண்டியிருக்கிறது. அதற்கு அவன் அடிமையாகி விடுகிறான். அடிமையாய் விட்டால் அப்புறம் துக்கப்பட வேண்டியது தான்.

'ஷவர்பாத்' தான் தனக்கு 'ஹாபிட்' என்றால் எல்லா இடத்திலும் 'ஷவர்' கிடைக்குமா? ஸங்கீதத்தில் ரஸிக்யம் இருக்கிறவனுக்கு எப்போதும் உசந்த

வாய் என்று அர்த்தம். நாராயணேதி யஸ்யாஸ்யே வர்ததே நாம மங்களம் - எவருடைய வாயிலே நாராயணா என்கிற மங்களமான நாமமானது இருக்கிறதோ எவர் நாராயணா என்கிற நாமத்தைத் திரும்பத் திரும்பச் சொல்கிறாரோ, அவரை நாடி எம்பெருமான் ஓடி வருவான். பசுவை நாடி கன்று எப்படி ஓடுமோ அந்த மாதிரி எம்பெருமான் இவர்களைப் பின் தொடர்ந்து, இவர்கள் அருகிலேயே எப்போதும் ரக்ஷித்துக் கொண்டிருப்பான்; ஓடோடி வருவான்.

கம்பர், ராமாயணத்திலே சொல்கிறார்.

ராமபிரான் கைகேயிக்கு எதிரிலே ஒரு பசுக் கன்று வந்தடைந்த மாதிரி வந்தடைந்தான் என்கிறார்.

தாயை வந்தடையும் கன்று என்று விஷ்ணு தர்மத்திலே சொல்லப்பட்டிருப்பது என்னவெனில், அந்தப் பசுவானது, கன்றை நாடி எவ்வாறு ஓடி வருமோ, 'நாராயணா' என்கிற மங்களமான திருநாமத்தை உச்சரிப்பவர்களிடம் அவ்வாறு ஓடி வருவான் எம்பெருமான்.

பகவானை உத்ஸவ தினங்களில் தூக்கித் தூக்கித் தோள் தழும்பிப் போவதுபோல நாத் தழும்ப அவன் நாமத்தைச் சொல்லுங்கள்.

சாலிஹோத்ர மஹரிஷி என்பவர் ரொம்ப அழகாகச் சொல்கிறார். இந்த மஹரிஷிக்கு



நைமிசாரண்யம் என்ற தலத்தில் ஆலயமும், மூர்த்திகளும் இல்லாமல் பகவான் ஸ்ரீவிஷ்ணு ஆரண்ய ஸ்வரூபியாக இருப்பதாக நம்பி காட்டையே வணங்குகின்றனர்.

- பி. ருக்மணி

ஸங்கீதமாகக் கிடைக்க முடியுமா? கவிதையிலே ரொம்ப ரஸிப்பு, இலக்கியத்திலே ஈடுபாடு இருக்கிறவனுக்கு உசந்த விஷயமாக எப்போதோ தான் கிடைக்கிறது. காமா சோமா, கன்னா பின்னா ஆகியவைதான் நிறையக் கிடைக்கின்றன. இவனுக்கோ படிக்காமலிருக்க முடிவதில்லை. அப்படி ஹாபிட் ஆகிவிட்டது. ஆனால் படிக்க எடுக்கிற புஸ்தகம் எதுவும் த்ருப்தி தரமாட்டேன் என்றது. அதற்காகப் படிக்காமல் இருந்தாலும் டல்லாக இருக்கிறது. ஆசை உண்டாக்குகிற ஹாபிட் என்கிற பழக்க தோஷத்தினால் இப்படியெல்லாம் துன்பம். ரேஸ் கோர்ஸ், கள்ளுக்கடை, சீட்டாட்டம், காஃபி க்ளப்தான் என்றில்லை; எதிலே ஆசை வைத்தாலும் அது ஒரே இழுப்பாக இழுத்து, அதிலே ரொம்ப ஆனந்தத்தைத் தந்த அநுபோகத்துக்காக மறுபடி மறுபடி தாஹப்பட வைத்து ஒருத்தனை வாட்டி எடுத்து விடுகிறது. உசந்த ஸங்கீதம் பிடித்தவனுக்கு உசந்த ஸங்கீதம், க்ராம்யக் கூச்சல் பிடித்தவனுக்கு அப்படிப்பட்ட கூச்சல், உசந்த லிட்ரேசர் பிடித்தவனுக்கு ரஸமான இலக்கியம், ஆபாஸக் கூத்துப் பிடித்தவனுக்கு அந்த ஆபாஸம், இட்லி ஸாம்பார் ப்ரியனுக்கு அந்த போஜ்யம் - இப்படி ஒவ்வொருத்தனும் எதிர்பார்ப்பது அவன் ஆசைப்படும் தரத்துக்கு எப்போதும் கிடைப்பதில்லை. அப்படிப்பட்ட ஸமயங்களில் ஏமாற்றமும் துக்கமுமே ஏற்படுகிறது. அந்த ஆசை இல்லாதிருந்தால் இந்த துக்கமும் இல்லை.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சார்ய ஸ்வாமிகள்

திருவள்ளூர் க்ஷேத்திரத்தில் ஈடுபாடு. அந்த க்ஷேத்திரத்து வீரராகவ பெருமாள் பிரத்யக்ஷம். பள்ளி கொண்டிருக்கிறான் அந்த க்ஷேத்திரத்தில்.

திருமங்கையாழ்வார் அந்த எம்பெருமானைப் பார்த்து, அவன் எப்படிப்பட்டவன் என்பதைப் பாடுகிறார்:

ராவணனை ஜெயித்த வீரராகவன் அவன். அந்த வீரன் இந்த ஊரிலே பள்ளி கொண்டிருக்கிறான்.

ஆழ்வாருக்கு வேறொரு விதமாக அவனைத் தன் வாக்கிலே வரவழைத்துக் கொள்ள ஆசை. உடனே அந்த வீரராகவப் பெருமாளே கண்ணனாகக் காட்சி கொடுத்து விட்டானாம் திருமங்கையாழ்வாருக்கு.

இந்த ஊரிலே படுத்துக் கொண்டிருக்கிறானே, அவன் யார்..? கோபஸ்த்ரீகளிடம் மத்தினால் மொத்துண்ட பிரான்! வெண்ணெய் உண்டவன்! வெண்ணெய்க்காகப் படாதபாடு பட்டான் இந்த அவதாரத்திலே!

'வெண் தயிர் உண்ட செவ்வாயும் அஞ்சி நோக்கும் அந்நோக்கும்...'

அம்மா அடித்துவிடப் போகிறாளே என்று அஞ்சி அஞ்சி நோக்குமாம் குழந்தை.

குழந்தையின் காதைப் பிடித்துக் கொண்டுவிட்டாள் யசோதை! ஒரேயடியாக பயப்டுகிறது குழந்தை.

பயத்தை உண்டு பண்ணுகிறவனும் அவன்தான்;

பயத்தைப் போக்குகிறவனும் அவன்தான்.

அவனே பயப்படுகிறான்! கண்ணை உருட்டி, உருட்டி அம்மாவைப்பார்க்கிறான். அடித்துவிடப் போகிறாளே என்று பயப்படுகிறான்.

தாம்பு கொண்டு அவனைக் கட்டுவதற்காக எடுத்துக் கொண்டு வருகிறாள் யசோதை.

அது ஏகப்பட்ட பார்வை பார்க்கிறது அம்மாவை! வாயிலே எப்போதும் தயிர் தோய்ந்துகொண்டே இருக்கிறது. வெண்ணெயை நிறைய விழுங்கிவிடும் குழந்தை. மோரை உருட்டிவிட்டுவிடும்!

சாரதமமான விஷயத்தைத்தான் நாம் நாட வேண்டும் என்பதைக் காட்டித் தருகிறது குழந்தை.

ஸாரம் எது..? வெண்ணெய். அஸாரம், அல்பஸாரம் எது என்றால் மோர்தான். மோரைக் கீழே தள்ளிவிட்டு வெண்ணெயை விழுங்குகிறது. ஆனால் நாம் என்ன பண்ணுகிறோம்..?

வெண்ணெயை தூர வைத்துவிட்டு மோரில் இன்னும் நிறைய ஜலத்தைவிட்டுச் சாப்பிடுகிறோம்.

பகவான் எதைக் கொண்டான், எதை விட்டான் என்று பார்க்கிறோம். ஆனால் அவன் விட்டதையெல்லாம் நாம் பிடித்துக் கொண்டிருக்கிறோம்!

(வளரும்)

# கல்கி

## ஸ்ரீ கிருஷ்ணா ஸ்வீட்ஸ்®

இணைந்து வழங்கும்

## இளைஞர் திருவிழா!



## நில், கவனி, வெற்றிகொள்!

"அன்பே கடவுள்" என்பார் ஒருவர்.

"செய்யும் தொழிலே தெய்வம்" என்பார் இன்னொருவர்.

"ஒவ்வொரு ஜீவராசியின் ஆத்மாவும் கடவுள்தான்" என்பார் சிலர்.

"இயற்கையே இறைவன்" என்பார் மற்றொருவர்.

உண்மையில் கடவுள் யார்?

உங்களுக்குத் தெளிவானதொரு பதில் தரவிருக்கிறார்கள் சிறப்புப் பேச்சாளர்கள்.

தலைப்பு : **கடவுள்**
நாள் : 26.8.2001, ஞாயிறு
நேரம் : மாலை 6.15
இடம் : மைலாப்பூர் ஃபைன் ஆர்ட்ஸ் அரங்கம்,
ஆலிவர் சாலை, சென்னை - 4
சிரிப்புரை : **தென்கச்சி கோ. சுவாமிநாதன்**
சிறப்புரை : **சுதா சேஷய்யன்**

அனைவரும் வருக!

அனுமதி இலவசம்!

Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telephones : Editorial : 2345624; Circulation Manager, Subscription and Advertisement : 2345623; Chief Administrative Officer : 2345622; Fax: 2345621.
Annual Subscription : India : Rs. 275/-; Overseas : Rs. 2000/- (Air Mail)
Half Yearly Subscription : India : Rs. 140/-; Overseas : Rs. 1000/- (Air Mail)

கல்கி
6.8.2001
இதழுடன்
இணைப்பு



# அதிர்ஷ்ட வீடு



“சமஸ்கிருதத்தில் ‘வசதி’ என்கிற வார்த்தைக்கு ‘வீடு’ என்று அர்த்தம். இதிலிருந்து ‘வாஸ்து’ என்கிற சொல் வந்திருக்கலாம். பண்டைய காலத்திலிருந்தே வட இந்தியாவில், ‘காஷ்யப சாஸ்திரம்’ என்கிற பெயரில் வாஸ்து சாஸ்திரம் கடைபிடிக்கப்படுகிறது. ஆந்திரா, கர்நாடகம் அடங்கிய தென் இந்தியாவின் மேற்குப் பகுதியில் இந்த சாஸ்திரத்துக்குப் பெயர் மாயா சாஸ்திரம். தமிழ்நாட்டில் பிருகு சாஸ்திரம். பண்டைய தமிழகத்தில் மனையபடி சாஸ்திரம் என்றும் குறிப்பிட்டார்கள்” என்கிறார் வாஸ்து நிபுணர் ஆர். வெங்கடேஷ்.

நம் நாட்டு வாஸ்து போல, சீனாவில் பெங்சுயி (Feng Shui).

வெங்கடேஷ் எழுதியுள்ள வாஸ்து மற்றும் பெங்சுயி புத்தகங்கள் அரை -ஜன் தேறும். சமீபகாலமாக, வாஸ்து மற்றும் பெங்சுயி குறித்த ஆர்வம் பெருகியுள்ளது. வீடு கட்டும்போதே, வாஸ்து அடிப்படையில் கட்டுகிறார்கள். கட்டிய வீடுகளில், பிரச்னைகள் ஏற்பட்டால் வாஸ்து நிபுணர்களைக் கலந்து ஆலோசித்து, அதற்கேற்ப வாஸ்து மற்றும் பெங்சுயி பரிகாரம் செய்து, நிவாரணம் தேடலாம்'' என்கிறார் வெங்கடேஷ்.



## அது என்ன பெங்சுயி?

சீன மொழியில், 'பெங்' என்பது காற்றையும், 'சுயி' என்பது நீரையும் குறிக்கும்.

சரியான நேரத்தில், சரியான அளவில் வரக்கூடிய காற்றும், மழையுமே வாழ்க்கையின் போக்கை வளப்

படுத்தக் கூடியவை. ஆரம்ப காலத்தில், சீனாவில் புயல்காற்று, வெள்ளம் போன்ற இயற்கைத் தாக்குதல்களிலிருந்து காப்பாற்றவே பெங்சுயி பயன்பட்டு வந்தது. நாளடைவில் இந்த சாஸ்திரம் வளர்ந்து, செழுமைக்கும், மேம்பாட்டுக்கும் வழிகாட்டத் தொடங்கியது.



பெங்சுயி விதிகள் அனைத்தும் பகுத்தறிவையும், காரண காரியங்களையும் அடிப்படையாகக் கொண்டே வகுக்கப்பட்டவை. ஆக, பெங்சுயி, மதம், மூட நம்பிக்கை, தந்திரம் சார்ந்த விஷயமல்ல. அகமும், புறமும் எவ்வாறு அமைகிறதோ, அதற்கேற்பத்தான் நம் வாழ்க்கையும் அமையும் என்பது பெங்சுயி கலையின் ஆதார சுருதி.

இயற்கையை எதிர்த்து வெற்றி கண்டு விடுவது இயலாத காரியம். எனவே

அதனுடன் இணைந்தே செல்ல வேண்டும். வெற்றிகரமான வாழ்க்கைக்கு வழிகாட்டும் பல்வேறு அம்சங்களில் ஒன்று பெங்சுயி. ஆனால், இதுவே, வாழ்க்கையின் ஒட்டு மொத்த வெற்றியையும் வெள்ளித்தட்டில் வைத்து, உங்களிடம் கொண்டு வந்து கொடுத்து விடாது. அதே சமயம், வெற்றியை நெருங்கிவிட்ட ஒருவன், பெங்சுயி முறைகளைக் கையாளுவதன் மூலமாக, வெற்றிக் கனியை எளிதில் தட்டிப் பறித்துவிட முடியும். பெங்சுயி முறைகளைக் கடைபிடிப்பவர்கள், வாழ்க்கையில் நல்ல பல மாற்றங்களைக் கண்கூடாகக் காண முடியும்.



## யின் + யாங்

சீனர்கள், இந்தப் பிரபஞ்சத்தை ஒருமாறுபட்ட கண்ணோட்டத்தில் பார்க்கின்றனர். எதிரெதிரான இரண்டு



வலிமையான சக்திகள், சமநிலை அடைந்ததே இந்தப் பிரபஞ்சம் என்பது சீன நம்பிக்கை. இந்த உலகம் நீர் மற்றும் மண் என்று பிரிக்கப்படுகிறது. 'யாங்' என்பது நீர். 'யின்' என்பது மண். இவ்விரண்டில் 'யின்' செயலாற்றாத சக்தி, 'யாங்' செயல்படுகிற சக்தி.

பெங்சுயி கொள்கைப்படி, இவ்விரு சக்திகளும் ஒவ்வொரு சூழ்நிலைக்கும் ஏற்ப மாறி, சமநிலைப்பாட்டை மாற்றும். காரணம், சில சமயங்களில் 'யின்' அதிகமாகவும், 'யாங்' குறைவாகவும் இருக்க வேண்டியது அவசியம். வேறு சில சமயங்களில் இதற்கு நேர் மாறான சமநிலைப்பாடு தேவைப்படக் கூடும்.

## 'ச்சீ' என்கிற மூச்சுக்காற்று

**டி**ராகனுக்கு சீன கலாசாரத்தில் அதீத முக்கியத்துவம் உண்டல்லவா?

டிராகனின் மூச்சுக் காற்றைத்தான் பெங் சுயி 'ச்சி' என்று குறிப்பிடுகிறது. 'டிராகனின் மூச்சு, இந்தப் பிரபஞ்சம் முழுவதும் பரவி, இந்த பிரபஞ்சத்துக்கே உயிரூட்டிக் கொண்டிருக்கும் சக்தி' என்கிறது பெங்சுயி.

பெங்சுயி, வீட்டில் உள்ள குறைபாடுகளைப் போக்கிடவும், வாழ்க்கையில் சந்திக்கிற பலதரப்பட்ட பிரச்னைகளைத் தீர்க்கவும் பல்வேறு விதமான பரிகாரங்களைக் கூறுகிறது. இப்படிப் பட்ட அடிப்படைப் பரிகாரங்கள் என்று ஒன்பது விதமான விஷயங்கள் பட்டியலிடப்படுகின்றன.



1) ஒளிவீசக்கூடிய அல்லது பிரதிபலிக்கக் கூடிய பொருள்கள். (கண்ணாடி, பளபளக்கும் கிரிஸ்டல் கற்கள், பிரிசம் என்னும் பட்டகங்கள், விளக்குகள் இதிலடங்கும்.

2) ஒலிகள். (காற்றில் அசைந்து ஒலி எழுப்பக் கூடிய, உலோகத்

துண்டுகள், குழல்களைப் பயன்படுத்தி உருவாக்கப்பட்ட விண்ட் சைம்ஸ் இதிலடங்கும்.)



3) உயிருள்ள பொருள்கள் (பூஞ் செடிகளும், மீன் தொட்டிகளும் இதிலடங்கும்.)

4) நகரக் கூடிய பொருள்கள் (காற்றில் அசைகிற, சுழலும் பொம்மைகள், தோரணங்கள், கொடிகள், காற்று திசைக்காட்டி, நீரூற்றுகள் ஆகியவை)

5) கனமான பொருள்கள் (சிலைகள், பாறைகள் போன்றவை)

6) மின்சாரத்தால் இயங்குபவை (மின் விளக்குகள்)

7) புல்லாங்குழல்

8) நிறங்கள்

9) நறுமணப் பொருள்கள்

இனி உங்கள் வீடு அதிர்ஷ்டவீடாக மாற, நல்லவை நடக்க, தீமைகள் அகல, எளிய வாஸ்து மற்றும் பெங் சுயி டிப்ஸ்களைப் பார்க்கலாம்.

- வீட்டின் முன் கதவுக்கு எதிரில் பெரிய மரம் இருப்பது அதிர்ஷ்டமான அம்சமல்ல. அது வீட்டில் செல்வம் சேருவதைத் தடுத்து விடும். இதை தவிர்க்க, கதவில், ஒரு சிறு கண்ணாடியைப் பொருத்தி, மரத்தின் தீய சக்திகள் வீட்டுக்குள் வராமல் தடுக்கலாம்.

- வீட்டு மனைக்குள்ளே நிலத்தில் எறும்புப் புற்று இருந்தால், நிரந்தரத் துன்பமும், மன இறுக்கமும் ஏற்படும். பாம்புப் புற்று இருந்தால், செல்வம் அழியும். பிறக்கும் குழந்தைகள் பொய் சொல்பவர்களாக, ஏமாற்றுக்காரர்களாக இருப்பார்கள். மனை, மேடு, பள்ளங்கள் நிறைந்ததாக இருந்தால் எதிரிகள் நிறைய உருவாகும் வாய்ப்பு உண்டு.



- வீட்டின் கேட்டிலிருந்து, வீட்டு முன் கதவுக்குச் செல்லும் நடைபாதை, கதவைவிட அதிக அகலம் கொண்டதாக இருக்க வேண்டும். அப்படி இல்லையெனில், நடைபாதையின் அகலத்தை அதிகரிக்க வேண்டும். இதற்கு இன்னொரு பரிகாரமும் உண்டு. காற்றில் அசைந்து இசை பரப்புகிற சைம்ஸ் கருவியைக் கதவில் பொருத்தலாம்.
- வீட்டின் வடக்கு, வடகிழக்கு அல்லது கிழக்குப் பகுதியில் கிணறு அல்லது நீர்த்தொட்டி அமைத்தால் மிகவும் நல்லது. தெற்கு, தென்கிழக்கு, மேற்கு, வடமேற்கு, தென்மேற்கு பகுதிகளில் அமைத்தால் தொல்லைதான். ஆபத்துகள் நிகழும். பாதிப்புகள் அதிகமிருக்கும்.
- வீட்டின் முன்னால், மாதுளை, முருங்கை போன்ற மரங்கள் இருப்பது

நோய் ஏற்படுத்தும்.

- வீட்டின் கழிப்பறை, பிரதான வாயிலுக்கு நேரெதிரே அமையக்கூடாது. அப்படி இருந்தால், கழிப்பறையின் அந்தக் கதவைப் பயன்படுத்தாமல், சுவர் வைத்து மூடிவிட்டு, வேறு அறையிலிருந்து கழிப்பறைக்குச் செல்ல வசதியாக கதவு அமைத்துக் கொள்ள வேண்டும்.



- வீட்டின் உள்ளே, ஒரே வரிசையில் இரண்டு மூன்று கதவுகள் இருப்பது நல்லதில்லை. இதற்குப் பரிகாரமாக, விண்ட் சிம்மையோ, கிரிஸ்டல் கல்லையோ தொங்கவிடலாம்.

- ஓர் அறையில் அளவுக்கு அதிகமாக ஜன்னல்கள் இருந்தால், அந்த அறையின் சமநிலை பாதிக்கப்படும். அது அலுவலகமாக இருந்தால், கவனம் சிதறும். அங்கே இருப்பவர்களுக்கு அடிக்கடி குழப்பம் ஏற்படும்; அளவுக்கு அதிகமாக மற்றவர்களைச் சார்ந்து

இருக்க நேரிடும். இதைத் தவிர்க்க தேவையற்ற ஜன்னல்களை அடைத்து விட வேண்டும்.



● கதவுகள் மற்றும் ஜன்னல்களின் எண்ணிக்கை ஒன்றுக்கொன்று பொருத்தமாக இருக்க வேண்டும். கதவுகளைவிட ஜன்னல்கள் இரண்டு மடங்கு எண்ணிக்கைக்கு மேல் இருந்தால், சண்டை, சச்சரவு நிலவும். அதிகப்படியான ஜன்னல்களை அடைத்து விடுதலே இதற்குப் பரிகாரம்.

● ஜன்னல்களை, வீட்டிற்கு வெளிப்புறமாகத் திறக்கும் வண்ணம் அமைக்க வேண்டும். அப்படிப்பட்ட வீடுகளில் சந்தோஷமும், ஆரோக்கியமும் நிலவும். வீட்டின் உட்புறமாகத் திறக்கும்படி இருந்தால், எல்லாமே வீட்டுக்குள்ளேயே முடங்கிப் போகும்.

● கூர்மையான கூரை, தீய சக்தியின் அடையாளமாகக் கருதப்படுகிறது.

இதிலிருந்து மீள, தண்ணீர் சக்திக்கு அடையாளமாக, ஜன்னல் அருகில் மீன் தொட்டியை வைக்கலாம். ஜன்னல் கம்பிகளில் நீல வண்ணம் பூசலாம். ஜன்னல் அருகில் கிரிஸ்டல் அல்லது கண்ணாடியால் ஆன பொருளை வைக்கலாம்.

- வீட்டுக்குள், அறைகள் சதுர வடிவிலோ, செவ்வக வடிவிலோ இருக்க வேண்டும். வடிவத்தில், ஏதாவது சிறு குறை இருந்தாலும், சக்தியின் சீரான ஓட்டம் தடைபடும். இந்த வடிவக் குறைபாடுகளை, தடுப்பு வைத்தோ, அலமாரி போன்றவற்றை வைத்தோ சரி செய்யலாம்.

- முக்கோண வடிவில், வீட்டில் அறைகள் கட்டுவதைத் தவிர்த்துவிட வேண்டும். காரணம், அறையின் முக்கோண வடிவம், கோபத்துக்கும் அமைதியற்ற தன்மைக்கும் அடித்தளம் அமைத்துக் கொடுத்து விடும்.



- வீட்டின் வரவேற்பு அறை, படுக்கையறைக்கு அருகிலேயே இருக்க வேண்டும். மாடியும், கீழுமாக உள்ள வீடு என்றால், மேலே படுக்கை அறையும், கீழே வரவேற்பு அறையும் அமைப்பது நன்மை தரும்.
- வரவேற்பு அறையின் வடகிழக்குப் பகுதியில் மீன் தொட்டியை வைப்பது நல்லது.
- வீட்டில் நுழையும் இடத்துக்கு வெகு அருகில் சமையல் அறை இருப்பது கூடாது. இதனால் குடும்பத்தினருக்கு உணவில் அதிக நாட்டம் அதிகரிக்கும். குழந்தைகளின் படிப்பு பாதிக்கப்படும்.
- வீட்டின் தென்கிழக்குப் பகுதியே, சமையல் அறைக்கு மிக ஏற்றது. சுவையான உணவு, அந்தக் குடும்பத்தினருக்குத் தங்கு, தடையில்லாமல் கிடைக்கும். குடும்பத்தில் சந்தோஷம் நிலவும். பெண்களுக்குச் சமையலில்

ஆர்வம் ஏற்படும்; உணவுக் கட்டுப்பாடு என்கிற பேச்சுக்கே இடமில்லை.

● சமையலறை, குளியலறையிலிருந்து தள்ளி இருக்க வேண்டும். அப்படி இல்லாமல் போனால், சொத்து இழப்பு ஏற்பட வாய்ப்பு உண்டு; ஆரோக்கியக் கேடும் ஏற்படக் கூடும். இதற்குப் பரிகாரமாக, குளியலறைக்கு, செராமிக் மணிகளாலான திரைகளைப் பயன் படுத்தலாம்.



● மாடிப்படிக்குக் கீழே, சமையல் அறையோ, அடுப்போ அமையக்கூடாது.

● சில வீடுகளில், சமையலறைக்கும், படுக்கையறைக்கும் இடையில், பொதுவான சுவர் ஒன்று இருக்கும். இச் சுவரின் ஒரு பக்கத்தில் அடுப்பும், மறுபக்கத்தில் படுக்கையும் இருக்கும். இதனால் உண்டாகிற பாதிப்பைக் குறைக்க, ஏதாவது ஒன்றை இடம் மாற்றிவிட வேண்டும்.

● சமையல் அறையின் ஒரு பக்கம்,

மற்றொரு பக்கத்தை விட மூன்று அல்லது அதற்கு மேற்பட்ட மடங்கு நீளமாக இருக்கக் கூடாது. இதனால் சமைப்பவர் சிடுசிடுப்பாகவும், நரம்புத் தளர்ச்சியுடனும் இருப்பார்கள். சின்னச் சின்ன அசம்பாவிதங்களும் நடைபெறும். உணவில், நச்சுப் பொருள் கலப்பு நிகழலாம். இதற்குப் பரிகாரமாக, அடுப்புக்கு எதிரில் கண்ணாடியைப் பொருத்தலாம். அல்லது கதவில் கண்ணாடி மாட்டி வைக்கலாம். சமைப்பவரது தலைக்கு மேல் விண்ட் சைம்ஸ் மாட்டி வைப்பதும் நல்லதொரு பரிகாரம்.



- சமையலறையில் கிழக்கு நோக்கி இருந்து சமைத்தால், பெருமகிழ்ச்சியும், ஆரோக்கியமும் நிலவும். மேற்கு நோக்கிச் சமைத்தால், சமைப்பவருக்கு வயதான தோற்றம் ஏற்படும். தெற்கு நோக்கிச் சமைத்தால் வறுமை நிலவும். வடக்கு நோக்கிச் சமைத்தால், கருத்து வேறுபாடுகள் உண்டாகும்.

● பிரதான கதவுக்கு வெகு அருகில் சாப்பாட்டு அறை இருக்கக் கூடாது. இது அதிக அளவில் விருந்தினர்களின் வருகையைத் தூண்டி, சாப்பாட்டுச் செலவை அதிகரிக்கும். பிரதான கதவுக்கு நேராகச் சாப்பாட்டு அறை இருந்தால், திரை கொண்டு மறைக்கலாம். அல்லது கண்ணாடி கிரிஸ்டலைக் கதவுக்கும், சாப்பாட்டு அறைக்கும் இடையே தொங்க விடலாம்.



● சாப்பாட்டு அறையின் நடுவில், சாப்பாட்டு மேஜையைப் போட வேண்டும். அதனைச் சுற்றி நடப்பதற்கு, தாராளமாக இடம் இருக்கும்படி பார்த்துக் கொள்ள வேண்டும். வட்ட வடிவ சாப்பாட்டு மேஜைதான் மிகவும் சிறந்தது. முட்டை வடிவத்திலும் டைனிங் டேபிள் இருக்கலாம். செவ்வக மேஜையானால், நீளம் மிக அதிகமாக இருக்கக் கூடாது. அறுகோண வடிவ மேஜை கூடாது. எண் கோண வடிவம்



சுமாரான பலன் தரும்.

- ஈசானிய மூலை, கடவுளுக்கு உகந்தது என்பதால், பூஜையறை, வீட்டின் வடகிழக்கில் அமைவது உத்தமம். வடக்குப் பகுதிக்கு குபேரஸ்தானம் என்பது பெயர். கிழக்குப் பகுதி இந்திரஸ்தானம். இங்கேயும் பூஜையறை இருக்கலாம்.
- செல்வத்தைத் தரும் தெய்வங்களாகிய வெங்கடாசலபதி, லட்சுமி அல்லது குபேரன் படங்களை வீட்டின் வெளி வாசலை நோக்கி வைக்கக் கூடாது. அப்படி இருந்தால், செல்வம் வீட்டை விட்டு வெளியேற வாய்ப்புண்டு. லட்சுமி படத்தை முன் வாசல் கதவுக்கு மேல், உள்நோக்கி மாட்டினால் நற்பயன்கள் நிறைய ஏற்படும்.
- அபாயம், மரணம், சோகம், வன்முறை போன்ற நெகடிவான உணர்ச்சிகளைச் சித்திரிக்கும்படியான எந்தப் படமும் குழந்தைகள் அறையில் இருக்கக்

கூடாது.

- குழந்தைகளுக்குரிய அறையில், இயற்கைக் காட்சிகளையும், குழந்தைகளின் வாழ்க்கையில் முன்னேற அவசியமான குறிக்கோளுக்கு ஏற்ற வகையில் அமைந்த படங்களையும் வைத்தால், குழந்தைகளின் மனத்தில் மன உறுதியும், உத்வேகமும், உற்சாகமும் ஏற்படும். உதாரணமாக, சக்தியைக் குறிக்கும் விதமாக குதிரை, அறிவைக் குறிக்கும் டால்பின், பசுமையான இயற்கைக் காட்சிகள் போன்ற படங்களை மாட்டலாம்.



- படிக்கிற மேஜை, ஜன்னலை நோக்கி இருக்கக் கூடாது. படிப்பவரின் இடதுபக்கம் ஜன்னல் இருக்க வேண்டும். வலது பக்கம் ஜன்னல் அமைந்திருந்தால், இடதுபக்கத்தில் அந்த ஜன்னலின் பிம்பம் தெரியும்படி ஒரு கண்ணாடியை வைக்கலாம். படிக்கும் அறையில்

நேரடியாக சூரிய வெளிச்சம் படாமலிருப்பது நல்லது.

- படிக்கும் மேஜையின் நாற்காலிக்குப் பின்புறம் நீர் சம்பந்தப்பட்ட படத்தை வைத்தால், படிப்பவரது கற்பனை வளரும்.



- படுக்கையறை, பிரதான கதவிலிருந்தும், சாலையில் இருந்தும் தள்ளி, உள்ளே அமைய வேண்டும். பிரதான கதவுக்கு அருகே படுக்கையறை இருக்கக் கூடாது. அப்படி இருந்தால், உறங்குபவர்களுக்கு அமைதி கிடைக்காது. பிரதான கதவின் நேரெதிரே படுக்கையறை அமையக் கூடாது. இதனால் படுக்கிறவர்களுக்குச் சோர்வும், சோம்பேறித்தனமும் ஏற்படும். நோய்வாய்ப்படவும் வாய்ப்பு உண்டு. இதற்குப் பரிகாரமாக அறைக் கதவில் கண்ணாடி மாட்டலாம். ஓசை எழுப்பும் விண்ட் சைம்ஸ் மாட்டி வைக்கலாம் அல்லது மணியாலான திரை போடலாம்.

● ஒரு வீட்டில் வசிப்பவரது நல்வாழ்க்கைக்கு, படுக்கையின் வடிவமும் ஒரு முக்கியமான காரணமாகும். கணவன், மனைவி இடையே அடிக்கடி சண்டை, சச்சரவுகள் வந்தால், அவர்கள் வளைவான முனைகளைக் கொண்ட படுக்கையை, கட்டிலைப் பயன்படுத்த வேண்டும். வட்ட வடிவமுடைய படுக்கை, தம்பதிக்கு நல்லதல்ல.



● கட்டிலில் தலை வைத்துப் படுக்கும் பகுதியில் உள்ள பலகை, கால் வைக்கும் பகுதியில் உள்ள பலகையை விட உயரமாக இருக்க வேண்டும். தலை பக்கப் பலகையில் கண்ணாடி மாட்டக் கூடாது.

● வடக்கே தலைவைத்துப் படுத்தால், பயமும், அமைதியின்மையும் ஏற்படும். மேற்கே தலை வைத்துப் படுத்தால் தீய கனவுகளும், நிம்மதியற்ற தூக்கமும், நோய்களும், முரட்டுத்தனமும், கருத்து



வேறுபாடுகளும் ஏற்படும். தெற்கில் தலைவைத்துப் படுத்தால், ஆரோக்கியம், சந்தோஷம், செல்வம், சுகம் ஆகியவை அதிகரிக்கும்.

● படுக்கையறையில் எப்போதும் போதுமான வெளிச்சமும், காற்றோட்டமும் இருக்க வேண்டும். இருட்டான படுக்கையறை, தீய சக்தியைத் தூண்டும். எனவே படுக்கும் நேரம் தவிர, மற்ற சமயங்களில் படுக்கையறை வெளிச்சமாக இருக்க வேண்டும். தவிர, துணிகள் மற்றும் வேறு பொருட்களால் அடைசலாக இருக்கக் கூடாது.

● படுக்கையறைக்குள் மீன் தொட்டி, செயற்கை நீரூற்று போன்ற நீர் நிலைகள் இருக்கக் கூடாது. நீர் நிலை சம்பந்தப்பட்ட படங்களும் அறைக்குள் இருக்கக் கூடாது. பூந்தொட்டிகளை வைக்கக் கூடாது. படுக்கையறை ஓய்வுக்குரிய 'யின்' சக்தி இருக்கிற இடம். மேற்கூறியவை 'யாங்' சக்தியை

அதிகரிக்கக்கூடியவை. அவற்றை தவிர்க்க வேண்டும்.

- குழாயிலிருந்து நீர் சொட்டும் ஓசை படுக்கையறையில் கேட்கக் கூடாது. இது தூக்கத்தைக் கெடுக்கும்.
- வீட்டில் இரண்டு குளியலறைகள் இருந்தால், இரண்டும் எதிரெதிராக இருக்கக் கூடாது. இது செரிமானத் தொந்திரவுகளை ஏற்படுத்தும். நிதித் தொந்தரவும் இருக்கும். இதுபோல இருந்தால் இரு கதவுகளிலும் கண்ணாடி பொருத்தவும்.
- குளியலும், கழிப்பறையும் இணைந்த அறையாக இருக்கிற பட்சத்தில், அறையின் கதவு, குளியல் பகுதியில் திறக்கும்படி அமைக்கப்பட வேண்டும். இதைத் தவிர்க்க முடியாது போனால், கதவின் கீலை வேறு பக்கத்தில் மாற்றிப் பொருத்தி விடலாம். இல்லையெனில் கழிவிடத்தை மண்ணா

லான மணித் திரையால் மறைக்கலாம்.

- குளியலறையில் மீன்களின் படம் இருக்கலாம். 'யின்', 'யாங்' இரண்டும் இதனால் சமன்படும். இயற்கைக் காட்சிப் படங்களும் குளியலறைக்கு ஏற்றவைதான். இதனால் திருமண பந்தம், மற்றும் உறவு முறை வலுப்படும். குடும்பத்தில் உறவு முறைகளில் பிரச்னை இருந்தால், குளியலறையில் இந்தப் படங்கள் அவசியம்.



- குளியலறையில் வாட்டர் ஹீட்டர் பொருத்துவதற்குச் சரியான இடம் தென் கிழக்கு மூலைதான். அதே போல குளியல் தொட்டி பொருத்த விரும்புகிறவர்கள், அறையின் தென்மேற்கு மூலையிலும், கழிவறை சாதனத்தைத் தெற்கு அல்லது வடக்கு நோக்கியும் பொருத்தலாம்.

- வீட்டு மதில் சுவர் எழுப்பும் முன்னரே வடக்கு, கிழக்கு அல்லது

வடகிழக்கில் கிணறு வெட்டப்பட வேண்டும். தன் மனை தண்ணீர் உபயோகித்தே வீடு கட்ட வேண்டும். அடுத்த மனைத் தண்ணீர் உபயோகித்து கட்ட ஆரம்பித்த பல கட்டடங்கள் பாதியில் நின்றதுண்டு.



- மதில்சுவர் எழுப்பி முடித்து, தொண்ணூறு நாட்களுக்குள் பிரதான வீட்டின் வேலையை ஆரம்பித்து விட வேண்டும். அப்படி இல்லையெனில் கட்டட வேலை நீண்ட காலம் தள்ளிப் போகும்.
- வீடு கட்டுவதற்கு முன், கட்டட வேலைக்கான பொருட்களை வைக்கவும், காவலாளி குடியிருக்கவும் கட்டட வேலை சம்பந்தப்பட்ட ஆபீஸுக்காகவும் தற்காலிகமாக கட்டடமோ, குடிசையோ போடுவது உண்டு. அப்படிப் போடப்படும் இடம், மனையின் தென்மேற்கு மூலையில் இருக்க வேண்டும்.

தென்மேற்கில் கட்ட முடியாது போனால், மேற்கு அல்லது தெற்குப் பக்கத்தில் அமைக்கலாம்.

- மனையில் உள்ள அரச மரம், பலா, வேம்பு, புளிய மரங்களை வெட்ட வேண்டும் என்றால், கட்டடம் கட்ட ஆரம்பிப்பதற்கு ஆறு ம்ாதம் முன்பாகவே அதைச் செய்து விட வேண்டும். மரத்தை முழுவதுமாக பிரதான ஆணி வேருடன் அகற்ற வேண்டியது அவசியம். குடியேறிய பிறகு மரங்களை வெட்ட வேண்டும் என்றால், குடியேறின மூன்று மாதங்களுக்குப் பிறகே வெட்ட வேண்டும். பூக்கும், காய்க்கும் பருவங்களில் வெட்டக் கூடாது.

- வீட்டைச் சுத்தம் செய்கிற போது, வாசல் கதவில் இருந்து உள்நோக்கிப் பெருக்கக் கூடாது. வீட்டுக் குப்பையை வாசலை நோக்கியே தள்ளிக் கொண்டு வர வேண்டும். குவித்து வைக்கும் குப்பைகளை, வீட்டின் வடகிழக்கு மூலையின்

ஒரு நொடி கூட வைத்திருக்கக் கூடாது.

- வடகிழக்கில் சிலந்தி வலை மற்றும் குபபை சேராது சுத்தமாக வைத்திருக்க வேண்டும்.

- ஓரே மனையை இரண்டாகப் பிரிக்கும்போது, மூத்தவர் மேற்கு அல்லது தெற்குப் பகுதியையும், இளையவர் வடக்கு அல்லது கிழக்குப் பகுதியையும் எடுத்துக் கொள்ள வேண்டும். இல்லையெனில் இருவருக்கும் செல்வக் குறைபாடு ஏற்படும். இரண்டாகப் பிரிக்கப்பட்ட மனையில் சகோதர, சகோதரிகள் வாழ்ந்தால், சகோதரிகள் வடக்கு மற்றும் கிழக்கில் வசிக்கலாம்.

- உணவு மேஜை இருக்கும் இடத்தில், சுவரில் பெரிய சைஸ் கண்ணாடியை வைத்தால், அந்த வீட்டில் உணவுக்குத் தட்டுப்பாடே இல்லாமல், மிகவும் திருப்தியான நிலைமை ஏற்படும்.



அறுசுவை உணவு வகைகளின் படத்தையும் அங்கே மாட்டி வைக்கலாம். டைனிங்டேபிள் மீது ஒரு தட்டில் பழங்களை எப்போதும் வைத்திருப்பது ரொம்ப நல்லது.



● வீட்டில் மீன் தொட்டி வைத்திருப்பது அதிர்ஷ்டத்தைக் கொடுக்கும். மீன் தொட்டியில் ஒன்பது தங்க மீன்களை வளர்க்க வேண்டும். அதில் எட்டு சிவப்பு அல்லது தங்க நிறத்திலும் ஒன்று கறுப்பு நிறத்திலும் இருக்க வேண்டும். மீன் தொட்டியில், மீன் இறந்தால் கவலைப்படாதீர்கள். அதற்குப் பதிலாக புதிய மீனை வாங்கி, தொட்டியில் விடுங்கள்.

● பெங்சுயி படி, பண்டைய சீன நாணயங்களில் நடுவில் துளையிட்டு, சிவப்பு நூலாலோ, ரிப்பனாலோ கதவில், வீட்டின் உட்பக்கக் கைப்பிடியில் கட்டி வைப்பது அதிர்ஷ்டம். வீட்டின்

ஒவ்வொரு கதவிலும் இப்படித் தொங்க விட வேண்டும் என்ற அவசியமில்லை. வீட்டின் வெளியே, கதவின் கைப்பிடியில், சிறுமணிகளைக் கட்டி வைக்கலாம்.



● வீட்டுக்குள்ளும் அலுவலகங்களிலும் பொன்சாய் செடிகள், கள்ளிச் செடிகள் ஆகியவை கொண்ட தொட்டிகளை வைக்கக் கூடாது. இவை எதிர்மறை சக்தியை வெளிப்படுத்தும் குணமுடையவை.

● வீட்டிலும், அலுவலகங்களிலும் புதிய வாடாத பூக்களை வைப்பது புத்துணர்வு தரும். துணி மற்றும் பிளாஸ்டிக்கிலான செயற்கை மலர்களையும் வைக்கலாம். ஆனால் காய்ந்த மலர்களை அழகுக்கென்று பயன்படுத்துவது கூடாது.

● வீட்டின் முக்கிய அறையின் தென்மேற்குப் பகுதியில் குடும்பப்



புகைப்படம் ஒன்றை மாட்டி வைத்தால், குடும்பத்தில் உறவு நெருக்கமாக இருக்கும். படத்தில் இருப்பவர்கள் சிரித்த முகத்துடன் சந்தோஷமாக இருக்க வேண்டியது மிக அவசியம்.

- துடைப்பத்தை மறைவான இடத்தில் வைக்க வேண்டும்.
- தரையைச் சுத்தம் செய்கிற போது, தண்ணீரில் சிறிது இயற்கையான கல் உப்பு போட்டு, சுத்தம் செய்வது வீட்டில் ஏற்படும் எதிர்மறை சக்திகளை வெளியேற்றிவிடும்.
- இப்போது, வீட்டுக்குள்ளேயே கழிப்பறைகள் வந்து விட்டன. எனவே, நெகடிவ் சக்தியைச் சமன்படுத்த எப்போதும் கழிப்பறைக் கதவுகளை மூடியே வைத்திருக்கவும்.
- சிரிக்கும் புத்தர் சிலை அதிர்ஷ்டத்தின் அடையாளம் என்றாலும்,

அதை எங்கே, எப்படி வைக்கிறோம் என்பது முக்கி[illegible]ரையிலிருந்து சுமார் முப்பது அங்குல உயரத்தில், வீட்டின் பிரதான வ[illegible]லை நோக்கியவாறு அதனை வைக்க வேண்டும். அதனால் செல்வச் செழிப்பு ஏற்படும்.

- சிரிக்கும் புத்தரைப் போன்ற இன்னொரு சீன ஸ்பெஷல் ஐட்டம் மூன்று கால் தவளை. இதை வெகு அதிர்ஷ்டமானதாகச் சீனர்கள் கருதுகிறார்கள். (நம் ஊரிலும் கிடைக்கிறது). இந்தத் தவளையின் வாயில் ஒரு நாணயம் இருக்கும். இந்தத் தவளையை, வீட்டின் பிரதான அறையில், நுழைவாயிலை நோக்கி இல்லாமல், அதிர்ஷ்டத்தை எடுத்துக் கொண்டு வீட்டுக்குள்ளே வருவது போல வைக்க வேண்டும்!



தொகுப்பு : **எஸ். சந்திரமௌலி**

Registered with the Registrar of News[redacted]a under No. 1041/57 * Registered No. TN / Chief PMG-141 / 2001 * Licensed to post without prepayment under PMG's Licence[redacted] 37 * Registered as a Newspaper in Srilanka.

